அதிகாரத்தைப் போடுகிறார்கள். இதைத்தான் நான் அரசாங்கத்தின் கவனத்திற்கு கொண்டு வரவேண்டும் என்று ஆசைப்பட்டேன். இந்த நிலை இப்பொழுது ஒருவாறாக சீர்திருத்தப்பட்டு வருகிறது. இன்னும் 2, 3 நாட்களுக்கும் தண்ணீர் நின்றுவிடும். ஆகையால் இம்மாதிரியான இடைஞ்சல்கள் ஏற்படாதவாறு, தண்ணீர் சரியான முறையில் வினியோகிக்கும்படி அரசாங்கம் ஏற்பாடு செய்யவேண்டும் என்று சொல்லிக் கொண்டு மதிப்பிற்குரிய சபாநாயகர் எனக்கு இரண்டு நிமிஷம் பேச வாய்ப்பு கொடுத்ததற்கு என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

THE HON. SRI P. KAKKAN : Mr. Speaker, Sir, the general irrigation practice in the Tirunelveli district is to raise the kar crop in the months of June to September and then have the pishanam crop which will be harvested in February-March. But after the advent of the Papanasam reservoir, the tail race waters of the turbines have been utilized in certain taluks for an advance kar locally called "Palantholi", in continuation of the pishanam.

That being the case, in this year, complaints were received that a large number of tanks had not sufficient quantity of water for maturing the withering crops (pishanam), and that supply should be made from the Manimuthar Project Canal for filling them up. As, at this time, there was plenty of water in the reservoir and it was also surplussing, the Chief Engineer issued orders for the filling up of the tanks from the head reaches. The tanks that had to be filled up being in the Nanguneri, Ambasamudram, Tirunelveli, etc. taluks, it was reported that the ryots of Nanguneri taluk had prevented the Tirunelveli ryots from taking water to their tanks under the erroneous impression that the former had preferential rights. The matter was reported to the higher authorities, and, as a result, supplies were made to the tanks in accordance with the Collector's orders. It is stated that about 150 tanks had been filled up to 15th February 1958, out of the 300 to be filled up and that every effort is being made to fill up all the tanks.

No difficulty is anticipated in filling them up or in the distribution of water; nor have conflicting orders been issued by the Revenue and Public Works authorities as alleged, as far as information could be gathered.

Hence, it is not necessary to issue any special instructions to the local officers in the matter.

MR. SPEAKER : We shall now proceed with the discussion on Demand No. VIII—Irrigation. The Hon. Minister will now move the Demand.

## III.—BUDGET FOR THE YEAR 1958-59 VOTING ON DEMANDS FOR GRANTS FOR THE YEAR 1958-59—DEMAND No. VIII—IRRIGATION AND DEMAND No. XXXV—CAPITAL OUTLAY ON IRRIGATION.

* THE HON. SRI P. KAKKAN : கனம் சபாநாயகர் அவர்களே, மேன்மை தங்கிய கவர்னர் அவர்களின் சிபார்சின் பேரில் 8-வது மான்யக் கோரிக்கையான நீர்ப்பாசனத்துக்கு ரூபாய் 1,56,37,500-க்கு மேற்படாத தொகையை அரசாங்கத்துக்கு ஒதுக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

26th March 1958] [Sri P. Kakkan]

மேலும் மேன்மைதங்கிய கவர்னர் அவர்களின் சிபார்சின் பேரில் 35-வது மான்யக் கோரிக்கையான நீர்ப்பாசன முதலீட்டுத் திட்டங்களுக்காக ரூபாய் 3,49,72,500-க்கு மேற்படாத தொகையை அரசாங்கத்துக்கு ஒதுக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

அரசாங்கத்தினுடைய எல்லா வேலைகளைப்பற்றியும் என்னுடைய அறிக்கையிலே குறிப்பிட்டிருக்கிறேன். அங்கத்தினர்கள் எல்லோரையும் ஆக்க முறையில் நல்ல ஆலோசனைகளைச் சொல்லுமாறு கேட்டுக்கொள்கிறேன். இந்த அறிக்கையின் 10-வது பாராவில் மூன்றுவது வரியில் ஒரு சிறிய எழுத்துப் பிழை இருக்கிறது. " இந்திய அரசாங்கம் செய்து கொடுக்காத நிதி " என்று இருப்பதை " இந்திய அரசாங்கம் செய்து கொடுத்த நிதி " என்று திருத்திக்கொள்ளவேண்டும். இதை கனம் அங்கத்தினர்கள் நன்கு தெரிந்துகொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

SRI K. R. NALLASIVAM : Sir, I move—

"That the allotment of Rs. 1,56,37,500 under Demand No. VIII—Irrigation" be reduced by Rs. 100."

MR. SPEAKER : How long does the Hon. Minister wants for reply?

THE HON. SRI P. KAKKAN : எனக்கு முக்கால் மணிநேரம் தேவை.

MR. SPEAKER : I want to make an appeal to the hon. Members of this House. Yesterday, the Deputy Leader of a Party and an hon. Member on the Congress side were speaking. I was ringing the bell after ten minutes, but the hon. Members did not sit down. I have no objection to hon. Members talking for any length of time. It is for the Leader of the House to decide what time should be allotted. My duty is to divide the time. Having agreed in the Business Advisory Committee that certain time should be allotted, I do not want to make any departure from that. Hon. Members should agree to that. I would appeal to hon. Members that once we agree that a certain time should be allotted, they should stick to that. Yesterday—unfortunately I was not in the Chair—I had asked Sri M. D. Ramasami to preside over the discussion. He raised an objection to say that an hon. Member had finished ten minutes. I always note the time allotted to each Member. Hon. Members with their enthusiasm when they begin to speak, forget the time allotted to them. They should restrict themselves to the time allotted to them. I would impress upon the hon. Members that when one Member takes more time, another Member loses it. To-day for example, I have got with me ten names from Congress side, five names from the National Democratic Party, two names from the Dravida Munnetra Kazhagam. The time allotted is ten minutes. But, I do not know how we are going to arrange the time unless it is reduced to five minutes each. If hon. Members agree to five minutes, I have no objection. This is one thing.

There is another thing, which I want to tell the House. I would appeal that when I ring the bell, Members must obey the Chair. This is in general interest.

[26th March 1958

SRI K. VINAYAKAM : On a point of order, Sir. My point of order is this. The Chair was kind enough to read the number of speakers to be allowed to speak on the Demand such as ten for Congress, five for National Democratic Party, etc. Is it commensurate with the total number of parties concerned, Sir? Is it proportionate to the total number of membership?

MR. SPEAKER : I am glad the hon. Member raised this question. There is an impression that I am not fair for one side or another. It is true that the proportion should be correctly 3 : 1. In all Assemblies the Opposition is given a greater chance. The division is 2 : 1. There is nothing wrong in it. In many Assemblies the division of three Opposition and one Congress is also given. But I would not take this House to that extreme limit. Therefore the division is two Opposition and one Congress taking it in turn. That is the proposal I have got.

SRI T. S. RAMASWAMY PILLAI : On a point of personal explanation, Sir, lest it should be misunderstood. I have never exceeded the time limit fixed by the Chair.

MR. SPEAKER : What I said does not apply to him.

I must say that when the Chair rules that the time is over, the hon. Member must accept it. He must obey the rulings of the Chair. To question the Chair is objectionable. I must say this to Mr. Lazar, because it was when Sri M. D. Ramasami was in the Chair as a member on the panel of Chairman, I heard an hon. Member say " I have been speaking only for five minutes ". This is objectionable.

SRI V. S. MANICKASUNDARAM : I may be allowed to tender apology on his behalf.

MR. SPEAKER : He must be kind enough for the kind clarification.

SRI D. S. AUTHIMOOLAM : My name may also be included, Sir.

MR. SPEAKER : When I say Opposition, it includes Independents also. It may be that Sri Authimoolam might not have got a chance. Sri Nallasivam may now speak.

**SRI K. R. NALLASIVAM :** மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் நமது மாகாணத்தில் நிறைவேற்றப்படவிருக்கிற திட்டங்கள் இன்னும் ஐந்து இருப்பதாக சர்க்காருடைய அறிக்கையிலிருந்து தெரிகிறது. அவைகளிலே இப்பொழுது நாலு திட்டங்கள் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன. பரம்பிக்குளம் திட்டம் மட்டும் கூடிய சீக்கிரத்தில் கேரள அரசாங்கத்தின் ஒப்புதலோடு எடுத்துக் கொள்ளப்படுமென்று தெரியவருகிறது. இந்த வேலைகள் எல்லாம் முடிந்து விட்ட பின்னர் நமது மாகாணத்தில் மேற்கொண்டு நீர்ப்பாசன வசதிகளுக்கான வாய்ப்புக்கள் மிகவும் குறைவு என்பதை எல்லோரும்

ஒப்புக்கொள்கிறோம். அப்படியானால் இன்னும் இரண்டு வழிகள் மூலம் தான் நீர்ப்பாசன வசதியை நல்ல முறையில் நாம் ஏற்படுத்திக் கொள்ள முடியும். மூன்று சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களை ஏற்படுத்துவது. இரண்டாவது கிணறுகள் வெட்டுவது. இந்த இரண்டு வேலைகளிலும் நாம் நல்ல முறையில் கவனம் செலுத்தியாக வேண்டும். சிறிய பாசனத் திட்டத்தின் கீழ் இந்த ஆண்டில் 395 புதிய வேலைத்திட்டங்கள் மேற்கொள்ளப்படுமென்று கனம் மந்திரி அவர்கள் அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

இவைகளில் எவ்வளவு குளங்கள் எடுத்துக்கொள்ளப்படும் என்பதைப் பற்றிய விவரம் இல்லை. இருந்தாலும் குளங்களைப்பற்றி ஒரு சில வார்த்தைகளைச் சொல்ல விரும்புகிறேன். இப்பொழுது குளங்களை எடுத்துக்கொள்வதாக இருந்தால் ஒன்று அதன் கரைகளை ரிப்பேர் செய்வதோடு இருந்து விடுகிறார்கள். தூர்ந்துபோய் இருக்கக்கூடிய குளங்களுக்கு வண்டல் எடுப்பது போன்ற வேலைகளைத்தான் செய்து கொண்டு வருகிறார்கள். ஆனால் சில இடங்களில் பார்த்தால் குளங்களுக்கு வரக்கூடிய வரத்துக்கள் சிதறிப் போய்க் கிடக்கின்றன. பல வருஷங்களாக அப்படி குளங்களின் வரத்துக்கள் சிதறிப்போய் இருப்பதால் நாளடைவில் அது தூர்ந்து போய் குளங்களுக்கு தண்ணீரே வராமல் இருக்கிறது. குளங்களுக்கு தண்ணீர் வரமுடியாமல் இருப்பதால் அதன் பாசனத்திலுள்ள பயிர்கள் காய்ந்து போகக்கூடிய நிலைமை ஏற்படுகிறது. ஆகவே இப்படிப்பட்ட குளங்களுக்கு தண்ணீர் வரக்கூடிய அளவில் அவைகளுக்கு வரக்கூடிய வரத்துக்களை ஒழுங்கான முறையில் அமைக்க நடவடிக்கை எடுத்துக்கொள்வதற்கு சர்க்கார் முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். பழைய வரத்துக்களை ஒழுங்குப்படுத்துவதோடுகூட புதிய வரத்துக்களையும் சில குளங்களுக்கு அமைத்துக் கொடுக்கும்படியாகவும் கேட்டுக்கொள்ளுகிறேன். அதன் மூலம் நீர்ப்பாசன வசதிகளைச் செய்து கொடுக்கும்படியாக நான் சர்க்காரைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இரண்டாவதாக கிணறுகள் வெட்டும் திட்டம். இன்றைக்கு இந்த திட்டத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு வருகிறது. அநேகமாக எல்லா பெரிய திட்டங்களும் எடுத்துக்கொண்டு முடித்துக்கொடுக்கப்பட்டுவிட்டது. இன்னும் ஒன்று அல்லது இரண்டு திட்டங்கள் இருக்கலாம், அவைகளும் இந்த ஆண்டிற்குள் முடிவடைந்து விடும். அதன் பிறகு நாம் முக்கியமாக கவனத்தில் எடுத்துக்கொள்ள வேண்டியது கிணறுகளை வெட்டும் திட்டம் தான். எல்லா ஜில்லாக்களிலும் கிணறுகளை வெட்டுவது சம்பந்தமாக நல்ல முறையில் கவனம் செலுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இப்பொழுது இருப்பதைவிட நான்கு மடங்கு அதிகமாக வெட்டிக்கொடுக்க ஏற்பாடு செய்தால் நீர்ப்பாசன வசதிக்கு கொஞ்சம் அனுகூலமாக இருக்கும். அப்படி இன்னும் நான்கு மடங்கு அதிகமாகச் செய்து கொடுத்தால் நிச்சயமாக விவசாயத்திற்கு நல்ல முறையில் பாசன வசதி செய்துகொடுப்பதாகும். ஆகவே பாசன வசதியை அதிகப்படுத்த இன்னும் அதிகப்படியான கிணறுகளை வெட்டிக்கொடுக்க சர்க்கார் முன் வரவேண்டும். கிணறுகள் வெட்டும் திட்டத்திற்கு என்று இப்பொழுது ஒதுக்கப்பட்டிருக்கும் தொகையானது மிகவும் குறைவானது. இன்னும் அதிகப்படியாக ஒதுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். கிணறுகள் வெட்டுவதற்கு நம்மிடத்தில் சில முறைகள் இருக்கின்றன. நிலத்தில் தண்ணீர் எங்கெங்கே இருக்கிறது என்று கண்டுபிடித்து அதை எடுக்க வேண்டிய மெஷினரி நம்மிடத்தில் இல்லை. நீர் நிலை எங்கேயெல்லாம் இருக்கிறது என்பதைக் கண்டுபிடித்து அதைப்பற்றி சரியான முறையில் தகவல் கொடுத்தால் அதன் மூலம் விவசாயிகள் லாபம் அடைவார்கள். இப்பொழுது கிணறுகள் வெட்டி வருவதைப் பார்த்தால் அதிருஷ்டம் இருந்தால் அவருக்கு தண்ணீர் கிடைக்கிறது, இல்லாவிட்டால் கிடைப்பது இல்லை. தண்ணீர் கிடைக்காவிட்டால் அந்த விவசாயி அழிந்துபோக வேண்டியதாக இருக்கிறது. சில விவசாயிகள் கிணறுகளை வெட்டுவதற்கு சில முறைகளைக்

கையாண்டு வருகிறார்கள். குச்சியைப் பிடித்து நீர் நிலையைக் கண்டு பிடித்து அதன்மேல் கிணறுகளை வெட்டுகிறார்கள். சிலர் விஞ்ஞான முறையில் நீர் நிலைகளைக் கண்டு பிடித்து கிணறுகளை வெட்டுகிறார்கள், சிலர் ஜோசியரைக் கேட்டு கிணறுகளை வெட்டுகிறார்கள். இப்படி மூன்று விதமாக அவர்கள் கிணறுகளை வெட்டும் முறைகளை கையாண்டு வருகிறார்கள். ஆகவே இதற்கு நமது மாகாண சர்க்கார் முக்கியத்துவம் கொடுத்து அதற்காக நல்ல அறிவாளர்களை அமைத்து எந்த இடங்களில் வெட்டினால் எந்த அளவிற்கு பயன்படும் என்பதைக் கண்டு பிடித்துச் சொல்லுவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். அத்துடன் விஞ்ஞான முறையில் வெட்டுவதற்கு முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டும். அந்த முறையில் கிணறுகளை வெட்டி வந்தால் பெரும் லாபகரமாக இருக்கும்.

கிணறுகள் வெட்டுவதற்கு என்று கொடுக்கப்படும் தொகையை சில இடங்களில் கிணறுகளை வெட்டுவதற்கு பயன்படுத்திக் கொள்ளாமல் வேறு இனங்களுக்கு பயன்படுத்திக்கொள்ளுகிறார்கள் என்றும், கிணறுகளை வெட்டாமலேயே பழைய கிணறுகளைக் காண்பித்து விட்டு கிணறுகளை வெட்டி விட்டதாகச் சொல்லி பணத்தை வேறு இனங்களுக்குச் செலவு செய்து விடுவதாக தெரியவருவதாகவும் சொல்லப்படுகிறது. அதில் சிலவற்றில் உண்மையும் இருக்கலாம், இல்லாமலும் இருக்கலாம். சில இடங்களில் கிணறுகளை வெட்டுவதாக இருந்தால் சர்க்காருடைய பணத்துடன் இன்னும் அதிகப்படியாக இரண்டாயிரம் அல்லது மூவாயிரம் ரூபாய் போட்டு வெட்டக் கூடிய நிலைமை ஏற்படுகிறது. அப்படி அதிகமாகப் போட்டு வெட்ட முடியாத இடங்களில் கொடுக்கப்பட்ட பணத்தை வேறு இனங்களுக்குச் செலவு செய்திருப்பார்கள். அதனால் அந்தந்த பிரதேசங்களுக்கு கிணறுகளை வெட்டுவதற்கு எவ்வளவு பணம் தேவைப்படுமோ அதற்குத் தக்கவாறு அந்தந்த ஜில்லாவைப் பொறுத்த வரையில் பணம் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அந்தந்த பிரதேசங்களில் வெட்டுவதற்கு எவ்வளவு தேவைப்படும் என்பதைப் பார்த்து அந்தந்த ஜில்லா அடிப்படையில் மானியத்தைக் கொடுக்க முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும்.

அடுத்தபடியாக எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய ஒரு விஷயம் இருப்பதாக தெரிய வருகிறது. தண்ணீர் அதிகப்படியாக கிடைக்கும் பிரதேசங்களில் நெற்பயிருக்கு எப்பொழுதும் தண்ணீர் பாய்ச்ச வேண்டும் என்று எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். இப்பொழுது நான் நேரில் கண்ட சில அனுபவத்திலிருந்து குறைவாகப் பாய்ச்சினால் அதிகப்படியான பலன் கிடைக்கிறது என்று தெரிந்துகொண்டேன். ஏற்கெனவே நமது நிதி அமைச்சர் அவர்கள் இதைப்பற்றி சொன்னபோது நான் நம்பவே இல்லை. அதன் பிறகு அப்படிச் செய்ய முடியும் என்பது நிரூபிக்கப்பட்டு காண்பிக்கப் பட்டது. அதன் பிறகு எனக்கும் அதில் நம்பிக்கை ஏற்பட்டது. அதாவது நெற்பயிருக்கு எப்பொழுதும் தண்ணீர் பாய்ச்சவேண்டும் என்ற அவசியம் இல்லை. குறைந்த அளவில் அதற்கு தண்ணீர் பாய்ச்சி அதிக அளவில் சாகுபடியை எதிர் பார்க்கலாம் என்று தெரிய வருகிறது. நெற்பயிருக்கு தினசரி தண்ணீர் பாய வேண்டும் என்ற அவசியம் இல்லை. சுமார் நாலு, அல்லது ஐந்து அல்லது பத்து நாட்களுக்கு ஒரு தடவை தண்ணீர் பாய்ச்சக் கூடிய இடங்களில் நல்ல முறையில் நெல் சாகுபடி செய்யப்பட்டிருக்கிறது என்பது தெரிய வருகிறது. அது நான் என்னுடைய அனுபவத்தில் நேரில் பார்த்து கண்டறிந்த விஷயம். நெற்பயிருக்கு ஐந்து நாட்களுக்கு ஒரு தடவை தண்ணீர் பாய்ச்சினால் போதும் என்று தெரிய வருகிறது. அப்படிப் பாய்ச்சினால் தினசரி பாய்ச்சி எதிர் பார்ப்பதை விட அதிகமாக எதிர் பார்க்க முடிகிறது. அதிகமான அளவில் உற்பத்தியாகிறது என்று கண்டு பிடித்திருக்கிறார்கள். ஆகவே இந்த முறையைப் பரப்புவதற்கு சர்க்கார் வேண்டிய முயற்சிகளை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். எங்கே தண்ணீர் அதிகமாக பாய்ச்சுகிறார்களோ, அங்கே

26th March 1958] [Sri K. R. Nallasivam]

யெல்லாம் குறைவாக பாய்ச்சுகிற இடங்களில் காணப்படும் உற்பத்தியை விட குறைவாக இருக்கிறது. விளைச்சல் அதிகமாக இருக்கிறது. இப்படிப் பட்ட முறையை இன்னும் ஆராய்ச்சி செய்து அதை பொது ஜனங்களிடத்தில் பிரசாரம் செய்து அதன் மூலம் அவர்கள் இந்தமுறையில் அதிகப் படியான கவனம் செலுத்துவதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

தஞ்சை ஜில்லாவில் அதிகப்படியான தண்ணீர் கிடைக்கிறது. கோவை ஜில்லாவில் அவ்வளவு நீர்ப்பாசன வசதி கிடையாது. ஆனால் இந்த புது முறைப்படி கோவை ஜில்லாவில் அதிகப்படியான விளைச்சலைக் காண முடிகிறது என்று சொல்லுகிறார்கள். தஞ்சையிலுள்ள தண்ணீர் வசதி கோவையில் இல்லாமல் இருந்தாலும் அங்கு அதிகப்படியான விளைச்சலை எதிர் பார்க்க முடிகிறது. ஆகவே இந்த முறையில் சர்க்கார் விசேஷ கவனம் செலுத்தவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். பழைய காலத்தில் பாசன வசதிக்கு என்று ஏற்படுத்தப்பட்ட வாய்க்கால்களை வைத்துக்கொண்டே இந்த புது முறைப்படி அதிகப்படியான ஏக்கர் நிலங் களுக்கு சாகுபடி செய்ய பயன்படுத்திக்கொள்ளலாம். காளிங்கராயன் வாய்க்கால் மூலமாக 14 ஆயிரம் ஏக்கர் நிலம் சாகுபடியாகிறது. பழைய ராஜன் வாய்க்கால் மூலமாக சுமார் 7 ஆயிரம் ஏக்கர் நிலம் சாகுபடி யாகிறது. அரிசிபாளையம் வாய்க்கால் மூலமாக சுமார் 4 ஆயிரம் ஏக்கர் நிலம் சாகுபடியாகிறது. இத்துடன் மேட்டூர் வாய்க்கால் வேறு ஏற்படுத்தப்பட் டிருக்கிறது. ஆகவே இப்படிப்பட்ட பழைய வாய்க்கால்களை வைத்துக் கொண்டே இன்னும் அதிகப்படியான விஸ்தீர்ணத்திற்கு பாசன வசதி செய்துகொள்வதற்கு வசதி இருக்கிறது. அதன் மூலம் அதிகப்படியான விளைச்சலை நாம் தேடிக்கொள்ளலாம். இப்படி புதிய முறைப்படி பாசன வசதி செய்து கொண்டால் இப்பொழுதுள்ள வாய்க்கால்களை வைத்துக் கொண்டே அதிகப்படியான விஸ்தீரணத்திற்கு பாசன வசதி செய்து கொள்ளலாம். இதைத்தவிர பரம்பிக்குளம், வீடூர் திட்டங்கள் இருக் கின்றன. பழைய வாய்க்கால்களையே சரியானபடி சீர்திருத்தி, மதகுகளை நல்ல முறையில் அமைத்துக்கொண்டால் இன்னும் அதிகப்படியான பாசன வசதிகளைச் செய்து கொள்ளலாம். மதகுகளையும், வடி மதகுகளையும் கழிவுகளையும் நல்ல முறையில் சீர்திருத்தம் செய்து வைத்துக்கொண்டால் இன்னும் அதிகப்படியான விஸ்தீரணத்திற்கு பாசன வசதி செய்து கொள்ள லாம். அவைகளையெல்லாம் சரியானபடி நடைமுறைக்குக் கொண்டு வந் தால் பத்தாயிரம் ஏக்கருக்கு பாயக்கூடிய பாசன வசதியை வைத்துக் கொண்டு 15 ஆயிரம் ஏக்கருக்கு பாசன வசதி செய்து கொடுக்கலாம். அதன் மூலம் அதிகப்படியான விளைச்சலை உண்டு பண்ணலாம். இதை சர்க்கார் கவனத்தில் வைத்துக்கொண்டு அதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்வதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

1863-ம் ஆண்டு காளிங்கராயன் வாய்க்காலுக்கு மதகுகள், வடிமதகு கள் கட்டி, கழிவுகள் கட்டி, சுமார் 11 ஆயிரம் ஏக்கர் நிலத்திற்கு பாசன வசதி செய்து கொடுக்கப்பட்டது. அந்த மதகுகள் கொஞ்சம் கொஞ்சமாக தூர்ந்து போய் விட்டன. அதை சீர் செய்ய வேண்டியதாக இருக்கிறது. அவைகளைச் செய்து கொடுத்தும் ஏற்கெனவே சொன்ன புதிய முறைப்படி பாசன வசதியும் செய்து கொடுத்தால், பத்தாயிரம் ஏக்கருக்கு பாயக் கூடிய தண்ணீரை வைத்துக்கொண்டு சுமார் 15 ஆயிரம் ஏக்கருக்கு தண்ணீரைப் பாய்ச்சி அதிகப்படியான விளைச்சலை செய்து கொள்ளலாம். பல வருஷங்களாக பல வாய்க்கால்கள் சீர்படுத்தப்படாமலேயே இருக்கின்றன. அவைகளையெல்லாம் சீர்திருத்தி புதிய முறைப்படி பாசன வசதி செய்தால் இன்னும் அதிகபடியாக இரண்டு லட்சம் ஏக்கர் நிலங்களுக்கு பாசன வசதி செய்து கொடுக்க முடியும். அதன் மூலம் அதிகப்படியான விஸ்தீ ரணமுள்ள நிலத்தை சாகுபடிக்குக் கொண்டு வரலாம். ஆகவே இது சம்பந்தப்பட்ட ரெவினியூ அதிகாரிகளும், இஞ்சினியரிங் இலாகா அதிகாரி

களும் ஒன்றுசேர்ந்து ஒரு கமிட்டியை அமைத்து ஒரு வருஷம் அல்லது மூன்று மாதங்கள் இதைப்பற்றி பரிசீலனை செய்து அதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டால் நிச்சயமாக பாசன விஸ்தீரணத்தை அதிகப்படுத்திக்கொள்ள மிகவும் வசதியாக இருக்கும்.

காவிரி ஆறு, பவானி ஆறு, பாசனத்தின் கீழ் உள்ள பிரதேசங்களில் யுத்த காலத்தில் அதிகப்படியான உணவு உற்பத்தி செய்யும் பொருட்டு தாராளமாக விவசாயிகள் கேட்ட போதெல்லாம் அவர்களுக்கு இஞ்சின்களையும் பம்பு செட்டுகளையும் வாங்கிக்கொடுத்து வந்தார்கள். அவைகளின் மூலமாக சாகுபடி செய்து கொண்டு வருகிறார்கள். யுத்தம் முடிந்த பிறகும் அவர்கள் பேரில் எந்த விதமான நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளவில்லை. இன்றைக்கு காவிரி ஆற்றின் கீழ் உள்ள பிரதேசங்களிலும் திருச்செங்கோடு முதலிய இடங்களிலும் சுமார் 200 இஞ்சின்கள் இப்பொழுது இருக்கின்றன. அதைப்பற்றி சேலம் ஜில்லா கலெக்டரை உணவு கமிட்டியில் கேட்டபோது காவிரி ஆற்றுப் பாசனத்திலுள்ளவர்கள் இஞ்சின் வைத்துக்கொள்ளலாம் என்று சொன்னார். அதைப்போலவே மற்ற எல்லா பாகங்களிலும் அப்படி இஞ்சின்களை வைத்துக்கொண்டு பாசன வசதி செய்து கொள்ளலாம் என்று சொல்லவேண்டும். இதை நல்ல முறையில் பரிசீலனை செய்து எல்லோருக்கும் இஞ்சின்கள் கிடைக்கும்படி ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக தண்ணீர் தீர்வை சம்பந்தமாக நியாய—அநியாயம் இருக்கிறது. அதைப்பற்றி சர்க்கார் கொஞ்சம் பரிசீலனை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். புஞ்சைக்கு முதல் போகமாக இருந்தால் 4 ரூபாயிலிருந்து 9 ரூபாய் வரைக்கும் இருக்கிறது. இரண்டாவது போகத்திற்கு இரண்டு முதல் நான்கு ரூபாய் வரையில் இருக்கிறது, தண்ணீர் தீர்வை காவிரி பாசனம் பொறுத்த வரைக்கும் முதல் போகத்திற்கு 15 ரூபாயும், இரண்டாவது போகத்திற்கு $7\frac{1}{2}$ ரூபாயும், மூன்றாவது போகத்திற்கு $3\frac{3}{4}$ ரூபாயும் என்று இந்த அடிப்படையில் இருக்கிறது. லோயர் பவானியைப் பொறுத்தவரையில் பார்த்தால் அது ரொம்பவும் வேடிக்கையாக இருக்கும். தண்ணீர் தீர்வையைப்பொறுத்த வரைக்கும் மாகாணம் பூராவும் ஒரே மாதிரியாக இருந்தால் நலமாக இருக்கும். எந்தந்த அளவிற்கு தண்ணீரை உபயோகப்படுத்திக்கொள்ளுகிறார்களோ அந்த அளவில் தீர்வை இருக்க வேண்டும். சோஷலிஸ அடிப்படையில் தீர்வை இருக்க வேண்டும் அது தான் நியாயமாக இருக்கும். அதற்கு வேண்டிய முயற்சியையும் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

**Mr. SPEAKER :** அவ்வளவு நேரம் நான் சொன்னது வீணாகவா போயிற்று ? 10 நிமிடங்களுக்குள் நீங்கள் உங்கள் பேச்சை முடித்துக் கொள்ள வேண்டும் என்று சொன்னேன். நீங்கள் கேட்காது போனால் நான் என்ன செய்வது ?

**Sri A. NESAMONY :** Mr. Speaker, Sir, I support the Demand and I am thankful to the Government for allotting a fair share out of the Demand to the Kanyakumari district. But I wish to say a few words regarding the plans that are to be executed in that area.

The first is the second stage of the Neyyar left bank channel. It is said that the Kerala Government now wants a royalty upon the waters that are to be let into the channel. Though in the statement that has been placed on the table of the House by the Hon. Minister every other channel is described in detail, giving the length, the cost and so on, so far as this channel is concerned, he has simply stated that a few distributaries will be taken out from the left bank channel. Particulars regarding the length and

cost etc., have not been given by the Hon. Minister. Sir, I put a supplementary question to the Hon. Minister some time back whether it was a fact that the Kerala Government was demanding a royalty upon the waters to be let into the channel. The Hon. Minister wanted notice for that question. Now at least at the end of the debate when the Hon. Minister replies to the debate I hope he would give the necessary particulars regarding this matter.

Sir, this scheme was included in the first Five-Year Plan while we formed part of the Travancore-Cochin State. The Planning Commission accepted the scheme. But it so happened that when this area was then talked of as an area to be transferred to the Madras State, the then Travancore-Cochin Government did not execute the scheme but allowed it to lie over. This fact was brought to the notice of the Planning Commission and the concerned Ministry in Delhi and more than once we were assured by the then existing Government that the work on both the right and the left channels would go ahead simultaneously. If that had been done in November 1956 itself a major portion of the work would have been executed in the transferred territory. But it was not done so. Now the Kerala Government seem to demand a royalty over these waters.

In this connection, I wish to bring to the notice of the Hon. Minister the provisions of the States Re-organization Act as adumbrated in sections 92, 107 and 108. Sub-section (2) of section 108 makes it mandatory that the benefits to be accrued under the First Plan and carried on to the Second Plan should not be minimised. I believe, on a correct interpretation of section 108, we are not bound to pay any royalty for this water for the transferred territory has a vested interest over these waters.

Then, Sir, I wonder whether our experts know that one of the tributaries of the Neyyar rises from the hills on the mountainous regions of Vilavangode taluk. The water in that area is drawn into Neyyar and we are now only tapping it back by the construction of these distributaries. As such it is most inequitable and unjust for the Kerala Government to demand royalty on these waters. If the work had been executed simultaneously with the work on the right bank probably by this time the whole system would have been in operation. We have been paying taxes for the past six or seven years since the scheme was inaugurated and we are entitled to the benefits of the tax paid towards the construction of the scheme and the Kerala Government is not entitled to ask for any royalty over these waters. Therefore I believe Government would take into consideration all these aspects of the question if the Kerala Government should demand a royalty.

The second point I wish to refer to is this. A sum of Rs. 1,50,000 has been provided for the Vilathurai Lift Irrigation Scheme. This scheme was inaugurated long long ago and we thought that before 1956 it would have been completed by the

Travancore-Cochin Government. But it was not possible for that Government to carry on the work because the pumps needed had to be imported from Western Germany. Now I understand the contractors who undertook to supply the pumps of 175 h.p are prepared to supply 75 h.p. pumps available in India now. Government should therefore reconsider the matter and take steps to complete the scheme as early as possible.

Then, Sir, we find a provision of Rs. 2,22,000 has been made for maintenance and repairs of Kodayar Project System and Rs. 5,00,000 for extension and improvements to the same system. Irrespective of party affiliations the representatives of the Kanyakumari district urge upon the Government that the Chittar-Pattanangal scheme should have top priority in this extension project. I was assured by the Hon. the Chief Minister that the scheme would go through. There are oppositions created by vested interests to the execution of this scheme, but I am sure in the interests of safety, health and the augmentation of food supplies in the area lying between Kodayar and the commanded area, the project system I believe would go a long way. Therefore, I believe the scheme would go through and it would have top priority.

I am glad to note, Sir, that the Government of Madras have at least now woken up to the possibilities of training the waters of the Punalur river of Shencottah taluk. Out of 122 square miles of this taluk the birth right of people living in 64 square miles have been signed away to the Kerala Government on the basis of an imaginary watershed line. If a proper assessment had been made they would not have done so. If this Government had only gone through the third volume of the Travancore State Manual, they would have realized the potentialities of irrigation in that area. Five dams were proposed by the then Travancore Government to irrigate the whole of Shencottah taluk some 50 years back. If they had only seen it, probably they would not have signed away the birthright of the people there. Even now it is not too late to find out the possibilities of the tributaries of the Punalur and Achankol rivers, which take their source in the area that has been transferred. If the whole of the Punalur river could not be trained into the Tinnevelly district at least a portion of this could be trained and dams could be constructed to irrigate portions of Tinnevelly district. These are possibilities to be considered by Government. I wish very much that the Punalur river should be trained into the Tinnevelly district by some agreement with the Kerala Government because the Kerala Government have no use for the waters of the river augmented by the waters of the Achankol river except to fertilise the prawns in the shallow lagoons of their Arabian sea. Our necessity is greater than that and I believe if the Kerala Government are properly appraised, they will understand our necessity in the matter and accede to our request.

26th March 1958] [Sri A. Nesamony]

Finally when we speak of the Kerala waters we are thinking only of the Parambikulam and Aliyar projects. But it is up to the opposition parties whether by reconsidering the matter they cannot redeem portions of Peermede and Devikulam taluks. Three hundred and five square miles of the catchment area of the Periyar river is reserve forests and 217 square miles of cardamom area is occupied by the Madras Government, namely the Cardamom Planters' Association of South India. The area beyond the Talayar estate also comprises of Tamil villages of Mariyur and others. These are areas which should have come to us leaving aside the Kundala dam and Muthupatti dam. A solution to these problems could be found immediately if we claim our own from that State.

Thank you, Sir.

**Mr. SPEAKER** : எதிர்கட்சியினர் எல்லோரும் சேர்ந்து 35-வது மான்யத்தின் மீது கனம் அங்கத்தினர் ப. உ. சண்முகம் அவர்கள் வெட்டுப் பிரேரேபணையை பிரேரேபிக்க வேண்டுமென்று தீர்மானித்திருப்பதாகச் சொல்லுகிறார்கள். ஆகையால் அவரை அதை 'மூவ்' செய்யும்படிக் கேட்டுக்கொள்கிறேன்.

**Sri P. U. SHANMUGAM** : Sir I move—

"That the allotment of Rs. 3,49,72,500 under Demand No. XXXV for Capital Outlay on Irrigation be reduced by Rs. 100".

* **Sri K. L. RAMASWAMY** : மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, இன்று கனம் மராமத்து இலாகா அமைச்சர் அவர்கள் நீர்ப்பாசனத் துறைக்காகவும், நீர்ப்பாசன முதலீட்டுத் திட்டங்களுக்காகவும் கொண்டு வந்துள்ள மான்யக் கோரிக்கையை ஆதரித்துச் சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். பொதுவாக நாட்டிலே விவசாயம் முன்னேறவேண்டுமானால், தண்ணீர் வசதி மிகவும் அவசியம் என்பதை நம் சர்க்கார் நன்றாக உணர்ந்திருக்கிறார்கள் என்பது, குறிப்பாக சுதந்திரம் பெற்ற பின்பு அவர்கள் தீட்டிய திட்டங்களிலிருந்தும், நிறைவேற்றப்பட்ட திட்டங்களிலிருந்தும் தெரியவருகிறது. நம்முடைய ராஜ்யத்தில் மட்டுமல்ல, அண்டை ராஜ்யத்திலும் கூட விளையும் தண்ணீரையும் நல்ல முறையில் நமது ராஜ்யத்திற்கு வாங்கித் தரவேண்டுமென்று முழு முயற்சியுடன் பாடுபடுகிறார்கள். அப்படிப்பட்ட திட்டத்தில் பரம்பிகுளம் திட்டம் ஒன்றாகும். அதில் அவர்கள் தீவிர முயற்சி எடுத்துவருகிறார்கள். அந்தத் திட்டம் நிறைவேற்றப்பட்டால், மிகவும் பிற்போக்கான ஜில்லாவாகிய கோயம்புத்தூரில் சில பிரதேசங்கள் நீர்ப்பாசன வசதி பெறும். அதுமட்டுமல்ல. மின்சாரம் உற்பத்தி செய்து மின்சார சக்தியையும் அதிகரிக்க முடியும். இந்த இரண்டு துறைகளிலும் மிகவும் பலனுள்ளதாக உள்ள அந்தத் திட்டமானது விரைவிலே நிறைவேறும் வழியில் நம் அரசாங்கம் எல்லா விதமான முயற்சிகளையும் எடுத்துக்கொண்டு வருகிறார்கள். இந்தத் துறையில் அவர்கள் பெரு முயற்சி எடுத்துவருவதற்காக என் நன்றியை தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, எந்தத் திட்டம் நிறைவேற்றப்பட்டாலும், நடைமுறையில் அதில் சில இடையூறுகளும், தொல்லைகளும் இருக்கும் என்பது உண்மை. அப்பேற்பட்ட சில திட்டங்களிலே எங்கள் ஜில்லாவில் கீழ்பவானி திட்டம் மிகவும் முக்கியமானது. அது உண்மையில் ஒரு பெரிய திட்டம். அந்தத் திட்டத்தை நடைமுறைக்கு கொண்டுவரும்பொழுது பல சங்கடங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அந்த சங்கடங்களை 5, 6 ஆண்டுகளாக சர்க்காருக்கு எடுத்துச் சொல்லிய முறையிலே, அவர்கள் மிகவும் நன்றி கூர்ந்து அவைகளை நீக்குவதற்கு பலவிதமான முயற்சிகளை எடுத்துவந்தார்கள். அந்த

முயற்சிகளின் இறுதி கட்டமாக சென்ற ஜனவரியில் அவர்கள் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறார்கள். அதாவது பயிர் முறையிலே விதிக்கப்பட்ட வரியை மாற்றி, நிலத்தைத் தரம் வாரியாகப் பிரித்து, அந்த முறையில் அதற்குத் தீர்வை போடுவதாக உத்தேசித்திருக்கிறார்கள். இந்த முறை ஓரளவு வரவேற்கக்கூடியதுதான். அதாவது இப்பொழுது உள்ள கஷ்டத்தை ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, தரம் வாரியாக பிரித்து வரி விதித்தல் வரவேற்கக்கூடியது தான். முன்பு உள்ள கஷ்டங்கள் சிறிது குறைந்திருக்கின்றன. ஆனால் இந்த முறையிலும், பொதுவாக அறியாமையில் ஆழ்ந்திருக்கக்கூடிய விவசாயிகளுக்கு, சில சங்கடங்கள் உண்டாகின்றன என்பதை நான் கண்டிப்பாக எடுத்துச் சொல்லக்கூடிய நிலையில் இருக்கிறேன்.

உதாரணமாக, இப்பொழுது நிலத்தின் தரத்தை நஞ்சை, புஞ்சை, தோட்டக்கால் என்று மூன்று விதமாக பிரித்திருக்கிறார்கள். அதற்காக அதிகாரிகளை நியமித்து உடனடியாக நடவடிக்கைகள் எடுத்திருக்கிறார்கள். அது வரவேற்கத்தக்கது தான். ஆனால், எதிர்காலத்தில் அதை மாற்றக் கூடாது என்ற ஒரு நியதியையும் வைத்திருக்கிறார்கள். அதாவது புஞ்சை பூமியை தோட்ட பூமியாகவோ, தோட்ட பூமியை நஞ்சை பூமியாகவோ மாற்றக்கூடாது என்ற ஒரு நியதியை வைத்திருக்கிறார்கள். இந்த நியதியானது விவசாயிகளுடைய உணர்ச்சிக்கு ஒரு முட்டுக்கட்டை போடுவதாக இருக்கிறது. பொதுவாக, நிலத்தின் தரத்தை உயர்த்திக்கொள்ள முயற்சி எடுப்பவன் விவசாயி. புஞ்சை பூமியை நஞ்சையாக மாற்றக்கூடாது, தோட்ட பூமியாக மாற்றக்கூடாது என்று தடை போடுவது விவசாயிகளை எதிர்காலத்தில் பாதிக்கக்கூடிய நிலைமையில் இருக்கிறது. அதுவும் இது ஒரு குறைந்த நிலப்பரப்பு உள்ள பிரதேசம் அல்ல. ஏறக்குறைய 4 தாலுக்காக்களில் 2 லட்சம் ஏகராவை இது பாதிக்கும். இந்தத் திட்டமானது 4 தாலுக்காக்களில் பரவியிருக்கிறது. ஆகவே, இந்தத் தாலுக்காக்களிலுள்ள விவசாய மக்களுக்கு இது ஓரளவு ஏமாற்றத்தை கொடுக்கக்கூடியதாக இருக்கிறது. இப்பொழுது புஞ்சை பூமி என்று சொல்லுவது மழையை எதிர்பார்த்து விவசாயம் செய்யக்கூடிய பிரதேசம். இந்தத் திட்டம் கொண்டுவந்திருப்பதின் நோக்கம் "லோயர் பவானி இர்ரிகேஷன் ஸெஸ் ஆக்ட்" பிரகாரம் பார்த்தால்—இந்த ரிஸர்வாயர் கட்டிய நோக்கம் என்னவென்றால் "**to provide water to supplement rainfall for the irrigation of dry crops**" என்பது தான். அதாவது, புஞ்சைப் பயிர்களுக்கு மழைத் தண்ணீர் போதாதபோது தண்ணீர் பாய்ச்சுவதற்கு பவானி நதியின் மேல் சர்க்கார் ஒரு ரிஸர்வாயர் கட்ட உத்தேசித்திருக்கிறார்கள் என்பது தான். 1933-வது வருஷத்தில் தீட்டப்பட்ட திட்டம் இது. 1933-க்கும் இன்றைக்கும் இடையே ஏறக்குறைய 25 ஆண்டுகள் கடந்துவிட்டன. 25 ஆண்டுகளுக்கு முன் ஒரு திட்டம் போடப்பட்டு 6, 7 ஆண்டுகளுக்கு முன் 10 கோடி ரூபாய் செலவில், அதாவது ஏகர் ஒன்றுக்கு ரூ. 500 வீதம் செலவழித்து நிறைவேற்றப்பட்டது. ஏகருக்கு ரூ. 500 வீதம் செலவழிக்கப்பட்ட இந்தத் திட்டத்தின் மூலம் விவசாயிக்கு கிடைக்கும் வசதியைச் சொன்னால் மிகவும் வேடிக்கையாகத் தான் இருக்கும். அதாவது கால்வாய் திட்டத்தின் மூலம் 6 மாதங்களுக்கு தண்ணீர் வந்து கொண்டிருக்கும். 180 நாட்களில் விவசாயிக்கு 10 நாட்களுக்கு ஒரு முறை தண்ணீர் பாய்ச்சிக்கொள்ளுவதற்கு வாய்ப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. அதாவது இந்தத் திட்டத்தில் ஒரு விவசாயி ஆண்டுக்கு 18 முறை தான் தண்ணீர் பாய்ச்சிக்கொள்ளலாம். ஏற்கெனவே மழையை நம்பி வாழ்ந்த விவசாயிக்கு மழை தவறினால் உதவி செய்வதற்காக ஏற்பட்ட திட்டம், ஓரளவுக்கு அவனுக்கு உதவி செய்வதாக இருக்கிறதே தவிர, அவன் இதை பரிபூரணமாக நம்பி வாழும் நிலையில் இல்லை. அப்படியிருக்கும்பொழுது புஞ்சை பூமியை தோட்ட பூமியாகவோ, நஞ்சை பூமியாகவோ மாற்றக் கூடாது என்று தடை விதித்திருப்பது விவசாயிகளுக்கு ஓரளவு ஏமாற்றத்தைக் கொடுத்திருக்கிறது என்பதை நான் மிகவும் உறுதியாக தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

26th March 1958] [Sri K. L. Ramaswamy]

எங்கள் ஜில்லாவை பொறுத்தவரையில் தோட்ட பூமி என்றால் ஒரு கிணறு வெட்டி கிணற்றின் மூலம் நீர்ப்பாசனம் செய்வது என்று பொருள் படும். மற்ற ஜில்லாக்களைப்பற்றி நான் அதிகம் அறியேன். எங்கள் ஜில்லாவை, அதாவது கோயம்புத்தூர் ஜில்லாவைப் பொருத்தவரையில் கிணறு வெட்டுவது என்பது மிகவும் எளிதான காரியம் அல்ல. கடுமை யான பாறைகளைத் தோண்டி, 60, 70 அடி ஆழத்திலுள்ள, அடி ஊற்று தண்ணீரை எடுக்கவேண்டும். அதாவது "அண்டர் கிரவுண்டு வாடர் ரிஸோர்ஸஸ்" என்று சொல்லுவார்கள். அம்மாதிரி கிணறு வெட்டி கிணற்றின் மூலம் விவசாயம் செய்வதற்கு ஒரு ஏகருக்கு ரூ. 500 போதாது. கீழ்பவானித் திட்டத்தில் ஒரு ஏகருக்கு ரூ. 500 செலவழித் திருக்கிறார்கள். ஆனால் தோட்ட பூமியாக மாற்றவேண்டுமானால், ரூ. 500 போதாது. குறைந்தபட்சம் ஒரு ஏகருக்கு ரூ. 1,000 வீதம் செலவழிக்க வேண்டும். அதிகமான மூலதனம் போட்டு தோட்ட பூமியாக மாற்று வதற்கு ஒரு விவசாயி தனிப்பட்ட முயற்சி எடுத்துக்கொள்ள முற்பட்டால் அதற்கு இது தடையாக இருக்கிறது. இதுபோன்ற தடைகளை விதிப்பது விவசாய முன்னேற்றத்திற்கு நல்லது அல்ல என்பதை மட்டும் நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, பயிர்க்கட்டுப்பாடு முறையை நீக்கி நிலத்தை பாகுபாடு படுத்தி வரி முறையை எளிதாக்கும் வகையில்தான் இந்த முயற்சி எடுத் துக் கொள்ளப்பட்டது. ஆனால் இன்னும் தோட்ட பூமிக்கு பயிர் கட்டுப்பாடு இருக்கிறது. தோட்டத்தில் ஒரு விவசாயி தனக்கு வேண்டிய எல்லா பயிர் களையும் பயிர் செய்து கொள்ளலாம். அப்படியிருந்தும் முக்கியமாக இந்தக் காலத்தில், நெல், அதாவது அரிசி உணவு அதிகமாக பயன்படக்கூடிய காலத்தில், ஒரு தோட்டத்திலே நெல் பயிர் செய்யக்கூடாது என்ற கட்டுப் பாடானது வருந்தத்தக்கதாக இருக்கிறது. அதற்கு அரசாங்கத்தார், அல் லது மராமத்து இலாகா என்ஜினியரிடமிருந்து அறிந்துகொண்ட காரணம், கிணற்று நீரை நெல் பயிருக்கு பயன்படுத்தினால், அது வாய்க்காலில் உள்ள நீரை உறிஞ்சிவிடுகிறது என்பது தான். அது அவ்வளவு பொருத்தமான காரணமாக தெரியவில்லை. தோட்ட பூமியிலே நெல் பயிர் வைக்கக்கூடாது என்ற கட்டுப் பாட்டைப் போலவே, கிணறுகளில் மோட்டார்கள் வைக்கக்கூடாது என்ற ஒரு கட்டுப்பாடும் இருக்கிறது. இம்மாதிரியான கட்டுப்பாடுகள் விவசாயத்துறையிலே நல்லது அல்ல என்பதைத் தெரிவித் துக்கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன். வணக்கம்.

*SRI K. APPAVOO PILLAI: கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் ஸ்ரீ நல்லசிவம் அவர்கள் கொண்டுவந்துள்ள வெட்டுப் பிரேரேபணையை ஆதரிக்கிறேன். சென்னை ராஜ்யத்தில் சேலம் ஜில்லா மிகவும் பிற்போக்கான ஜில்லா என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். அந்த ஜில்லாவிலேயே மிகவும் பிற்போக்கான பகுதி எங்கள் ஹோசூர் தாலூகா என்பதை யாரும் மறுக்கமுடியாது. ஆண்டவனை நம்பித் தான் நாங்கள் வாழ்கிறோமே தவிர சர்க்கார் எங்களுக்கு உதவியளிக்கவில்லை என்று சொல்லிக்கொள்கிறேன். சர்க்கார் எங்களுக்கு விவசாயத்தில் முன் னேறுவதற்கு எந்த உதவியும் அளிக்கவில்லை. எங்கள் தாலூகாவில் எத்தனையோ ஏரிகள் இருந்தாலும் அவைகள் செப்பனிடப்பட வில்லை. இதன் காரணமாக, அங்கே நஞ்சை விவசாயம் செய்வது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. நீர்ப்பாசன மகாநாட்டில், தூர்ந்துபோன ஏரிகளையும் கரை உடைந்துபோன ஏரிகளையும் பற்றிக் குறிப்பிட்டால், மூன்று வருஷங்களுக்குள் அவைகளைச் செப்பனிடுவதாகவும், உடைந்து மூன்று வருஷங்களுக்கு மேற்பட்டவைகளைச் செப்பனிட முடியா தென்றும் என்ஜினியர்கள் சொல்கிறார்கள். மற்ற ஏரிகளை கவனித்தால், சாத்தனூர், கிருஷ்ணகிரி திட்டங்களுக்கு தண்ணீர் வராமல் போய்விடும் என்று அவர்கள் காரணம் சொல்லுகிறார்கள். எங்கள் தாலூகாவில் பெரும்பாலான ஏரிகளில் தண்ணீர் பெண்ணையாறு பேசினில்தான் விழுகின்றன. அந்த ஏரிகளால் எங்களுக்குப் பிரயோஜனமில்லை. நில

10-10 a.m.

மில்லாத ஏழைகளுக்கு சர்க்கார் நிலம் கொடுக்கும் திட்டம் இருந்து வருகிறது. நிலமில்லாத ஏழைகள் நிலங்கள் கோரி விண்ணப்பம் அனுப்பினால், கோரப்படும் நிலம் ஏரிப் புறம்போக்கு நிலமாக இருக்கிறதென்றோ வேறு ஏதாவதோ சொல்லி கோரிக்கையை நிராகரித்து விடுகிறார்கள். பழுதடைந்திருக்கும் ஏரிகளை சர்க்கார் செப்பனிடுவதும் கிடையாது. அங்கே தளவாய் ஏரி என்ற ஒரு பெரிய ஏரி இருக்கிறது. சிறியதொகை செலவில் அந்த ஏரிக்கு கரைகட்டிக் கொடுத்தால் சுமார் 2,200 ஏக்கர் நிலங்களை சாகுபடிக்குக் கொண்டு வரலாம் என்று தெரிவித்துக் கொள்கிறேன். மேலும் எங்கள் தாலூகாவில் ஆறு முக்கியமான நதிகள் ஓடுகின்றன. வேறு எந்தத் தாலூகாவிலும் இந்த மாதிரி ஆறு நதிகள் இருக்காது என்று நினைக்கிறேன். எங்கள் தாலுகாவில் முக்கியமான ஆறு நதிகளில் மூன்று ஜீவ நதிகள். அவை காவேரி, தென்பண்ணை, சனத்குமார் ஆகிய நதிகள் ஆகும். தென்பண்ணை 37 மைல் தூரம் ஓடுகிறது. சனத்குமார நதி 35 மைல்கள் ஓடுகிறது. ஹொஸூர் தாலூகாவில் நதிகள் இருந்தாலும், அங்கே ஒரு சிறிய அணைக்கட்டும் கட்டப்படாமல் அது புறக்கணிக்கப்பட்டு வந்திருக்கிறது. தென் பெண்ணையாற்றை எடுத்துக்கொண்டால், அங்கே ஒரு பழைய அணைக்கட்டு இருக்கிறது. அது ஹைதர் அலி காலத்தில் கட்டப்பட்டதென்றோ 200 ஆண்டுகளுக்கு முன்னால் கட்டப்பட்டதென்றோ சொல்லப்படுகிறது. நமது அமைச்சர்களும் பெரிய அதிகாரிகளும் அங்கே வந்தால் அந்த ஆற்றைப் பார்ப்பதில்லை. ஏனென்றால், அங்கே ரோடு வசதியில்லை. நானும், 20 வருஷங்களாக அந்தத் தாலூகாவிற்கு விஜயம் செய்யும் அமைச்சர்களுக்கும் கவர்னர்களுக்கும் அளிக்கும் வரவேற்புப் பத்திரங்களில் இது சம்பந்தமான திட்டத்தைப்பற்றிக் குறிப்பிட்டு வந்தாலும், இது வரையிலும் ஒன்றும் செய்யப்படவில்லை. அந்த ஆறுகளை கவனிக்காததற்கு சர்க்கார் இப்போது என்ன காரணம் சொல்கிறார்கள் ? கிருஷ்ணகிரி, சாத்தனூர் திட்டங்களுக்கு தண்ணீர் போதாது என்று காரணம் சொல்கிறார்கள். அந்த ஆறுகள் சம்பந்தப்பட்ட திட்டத்தை பயன் படுத்திக்கொள்வதற்கு எங்களுக்குத்தான் முதல் உரிமை இருக்கிறது. ஏனென்றால், அங்கே ஒரு பழைய அணை இருக்கிறது. நான் அனாவசியமாக சர்க்கார் பேரில் குறை கூறவில்லை. இப்போது சாத்தனூர் திட்டமும் கிருஷ்ணகிரி திட்டமும் முடிவடைந்து விட்டன. அந்த ஆறுகளில் மழை காலத்தில் வெள்ளத்தில் வரும் தண்ணீர் பூராவும் சமுத்திரத்தில் விழுவதைத் தடுத்து தேக்கி வைக்கக்கூடிய ஒரு சிறிய அணையைக் கட்ட வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். கிருஷ்ணகிரித் திட்டத்தில் செலவாகாமல் மிஞ்சியிருக்கும் பணத்தைக் கொண்டு அந்த அணையைக் கட்டிக் கொடுக்கலாம். ஆறும் உயர்ந்த "லெவல்"-ல் இருக்கிறது. ஆகவே அங்கே ஒரு சிறிய அணைக்கட்டை நிர்மாணித்தால் தாலுகா முழுவதற்கும் தண்ணீர் கிடைக்கும் என்று நினைக்கிறேன்.

தொட்டஹல்லா திட்டம் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின்போது கொண்டு வருவதாகச் சொல்லப்பட்டிருந்தது. அந்தத் திட்டம் இது வரையில் எடுத்துக்கொள்ளப்படவில்லை. தொட்டஹல்லாவில் சிறு தொகை செலவில் ஒரு அணையைக் கட்டினால் இரண்டு நோக்கங்கள் பூர்த்தியாகும். அதாவது, அங்கே விவசாயமும் அபிவிருத்தியடையும், ஒரு பேப்பர் தொழிற்சாலையை ஏற்படுத்துவதற்கும் வாய்ப்பு உண்டாகும். அங்கே 2,500 ஏக்கர் நிலங்களை சாகுபடிக்குக் கொண்டு வரலாம். அங்கே நிறைய மூங்கில்கள் வளருவதால், பேப்பர் தொழிற்சாலையை அமைப்பதற்கு வாய்ப்பு இருக்கிறது. அங்கே வந்து அந்த நதியை ஸ்ரீ தாமஸும், டைரெக்டர் ஸ்ரீ ராமும் பார்த்தார்கள். அந்தத் திட்டம் இப்போது எந்த நிலையில் இருக்கிறதென்று தெரியவில்லை.

இங்கு சனத்குமார் நதி என்று ஓடும் நதியை பயன்படுத்தி ஒரு திட்டத்தை நிறைவேற்றலாம், தர்மபுரியில் சின்னாறு என்று சொல்லப்படுகிறது. கனம் அமைச்சர் ஸ்ரீ கக்கனும் அங்கே சென்று அந்த நதிகளைப் பார்த்தார். தர்மபுரிக்கு தண்ணீர் கொண்டு போவதற்

காக திட்டம் போட்டிருப்பதாக அறிகிறேன். அந்தத் திட்டத்திலும் எங்களுக்கு முதல் உரிமை இருக்கிறது. அந்த நதியில் பைரகொண்டபள்ளி என்ற இடத்தில் ஒரு அணைக்கட்டு இருக்கிறது. அந்த அணைக்கட்டும் உடைந்துபோயிருக்கிறது. சில ஆயிரம் ரூபாய் செலவழித்து அந்த அணைக் கட்டைச் செப்பனிட்டால் அது மிகவும் பயனுள்ளதாக இருக்கும். அந்த இடத்தையும் கனம் அமைச்சர் பார்வையிட்டால் மிகவும் நன்ருக இருக்கும். அங்கே பெரிய நிலச்சுவாந்தார்கள் "டாம் ஸைட்"-களைப் பயன் படுத்திக் கொண்டு லாபமடைந்து வருகிறுர்கள். சனத்குமார் நதியிலிருந்து 2½—3 மைல் தூர "சானல்" மூலம் உழவரஹள்ளி என்ற ஏரிக்கு தண்ணீர் கொண்டுபோனல் மழை காலத்தில் எப்போதும் 13 ஏரிகளில் தண்ணீர் இருக்கும். இந்தத் திட்டத்திற்கு சில ஆயிரம் ரூபாய்கள் செலவழிக்க லாம். இந்தத் திட்டத்தை நிறைவேற்றினல் ஆயிரம் ஏக்கர் நிலங்களை சாகுபடிக்குக் கொண்டு வரலாம். சின்னூறு என்ற ஆறு ஹொஸூருக்குப் பக்கத்தில் போகிறது. இந்த ஆற்றுத் தண்ணீரைப் பயன் படுத்துவதற் கான திட்டத்தை நிறைவேற்றினல் 200 ஏக்கர் நிலங்களை சாகுபடிக்குக் கொண்டு வரலாம்.

சாமனப்பள்ளி நீர்த் தேக்கத்தைக் கட்டுவதாக சர்க்கார் சொல்கிறுர்கள். எந்தத் திட்டங்களைப்பற்றி நாங்கள் பேசினலும், ஏதாவது சாக்குப்போக்குச் சொல்லி சர்க்கார் தட்டிக்கழிக்கிறுர்கள். இத்தனை நதிகள் ஹோஸூர் தாலூகாவில் ஓடினலும் அவைகளால் அத்தாலூகா பயனடைய முடிய வில்லை. எங்களை சர்க்கார் கைவிட்டாலும் கடவுள் கைவிடவில்லை. இந்த ராஜ்யத்தில் கடந்த பஞ்சத்தின்போது ஏராளமான மக்கள் அவஸ்தைப் பட்டபோது ஹொஸூர் தாலூகா லட்சக்கணக்கான மூட்டை உணவு தானி யங்களைக் கொடுத்திருக்கிறது என்பதை இந்த சந்தர்ப்பத்தில் நான் கர்வத் துடன் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அரசாங்கத்தார், ஹொஸூர் வாசிகள் மிகவும் அப்பாவிகள், வாயில்லாப்பூச்சிகள், என்பதைத் தெரிந்து கொண்டு இனிமேலாவது அத்தாலூகாவில் நல்ல நீர்ப்பாசனத் திட்டங்களை நிறைவேற்றுவார்கள் என்று நம்புகிறேன். சர்க்கார் அந்தத் தாலூகா விற்கு ஒரு நன்மையை மாத்திரம் செய்திருக்கிறுர்கள். அதாவது, இரண்டு வருடங்களுக்கு முன் அங்கே மின்சார வசதியை செய்து கொடுத்தார்கள். அதற்காக சர்க்காருக்கு ஹொஸூர் வாசிகள் சார்பில் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களை நிறைவேற்றி ஹொஸூர் தாலூகாவை அபிவிருத்தி செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

* **Sri W. P. A. R. CHANDRASEKHARAN** : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் மராமத்து அமைச்சர் பிரேரேபித்திருக்கும் நீர்ப்பாசன மானிய கோரிக்கையை ஆதரித்து சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். நீர்ப்பாசனத் திட்டங்களை பரிசீலிப்பதற்கு கனம் அங்கத்தினர்களுக்கு வாய்ப் பளிக்கும் வகையில் அவர் ஒரு அறிக்கையை கொடுத்திருக்கிறுர். அதற் காக அவருக்கு நான் நன்றி தெரிவித்துக்கொள்கிறேன். நமது ராஜ்யத் தில் பெரிய நீர்ப்பாசனத் திட்டங்களில் பல பூர்த்தியடைந்து விட்டன என் றும், பல முடியும் தருவாயில் இருக்கின்றன என்றும் அந்த அறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது. வைகைத் திட்டத்தை சீக்கிரம் பூர்த்தி செய்யவேண்டு மென்றும், ஏற்கெனவே பெரியாறு வாய்க்கால் பாசனத் திட்டத்தின் கீழ் இருக்கும் இடங்களில் நீர்ப்பாசன வசதியை ஸ்திரப்படுத்தும் வகையில் இந்தத் திட்டமும் பயன் படுமாறு நிறைவேற்ற வேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறேன்.

இந்த முறையில் பெரியாறு வாய்க்கால் வேலையில் **earth works** பகுதியில் பத்தாயிரம் ரூபாய் அனுமதிக்கப்பட்டிருக்கிறது. அங்கே பெரியாறு வாய்க்கால்களில் **sluices** என்று சொல்லக்கூடிய மதகுகளை சீர்படுத்தவேண்டியும் புதிதாக ஏற்படுத்தவேண்டியும் இருப்பதால், அவைகளை யும் அங்கே இடம் பெற அமைத்து வேலை நடைபெறுவதற்கு உதவுமாறு கேட்டுக்கொள்ளுகின்றேன். அதற்குத் தகுந்தபடி நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். 10-30 a.m.

மேலும், சாத்தியாறு, மஞ்சளாறு, கொடவனாறு திட்டங்களை சர்க்கார் அங்கீகரித்து ஆரம்ப வேலைகளை எடுத்திருப்பதற்காக அப்பகுதி மக்களின் சார்பாக நான் நன்றியையும், வணக்கத்தையும் தெரிவித்துக்கொண்டு, அவைகளை சீக்கிரமே மக்களுக்கு பயன்படும் ரீதியில் உபயோககர மாக நிறுவ வேண்டுமென்றும் அதற்கு வேண்டிய காரியங்களைக் கண் காணிக்க வேண்டுமென்றும் அமைச்சர் அவர்களை நான் கேட்டுக்கொள்ளு கின்றேன்.

எனக்கு முன்னால் பேசிய நண்பர், தன்னுடைய தாலூகா பஞ்சாபுக்குச் சமம் என்று குறிப்பிட்டார்கள். அவருடைய தாலூகாவில் ஐந்து ஆறுகள் ஓடிக்கொண்டிருப்பதாக வருணித்தார். நான் சொல்லிக்கொள்ள பிரியப் படுவதெல்லாம்

"நாரியிட பாக்களுக்கு நஞ்சளித்த பாவியென்று
வாரியிடம் போகாத வைகை—பாரில்
இடத்தும் வலத்தும் இரு புறமும் பாய்ந்து
நடத்தும் தமிழ் புலவர்—பாண்டிய நாடு."

என்று வைகை நதியைப் பற்றி ஒருவர் கூறும்போது, சமுத்திர ராஜனிடம் போகவில்லை என்று சிலேடையாகக் கூறி, ஆனால் இடமும் வலமும் பாய்ந்து, அது தமிழ்ப் பாண்டி நாட்டையும் நடத்திக்கொண்டிருக்கிறது என்று கூறியிருக்கிறார். இந்த நிலைமையில் பெரிய நீர்ப்பாசன வசதிகளைச் செய்ய, பெரிய கட்டுக்கோப்பான திட்டங்களை அமைக்கவேண்டிய நிர்ப்பந்தம் இருப்பதாலும், அப்படிச் செய்தாலும் அவைகள் நிறைவேறமுடியாமல் போய்விடுவதாலும், இன்னும் வேறு சேதங்கள் ஏற்படும் நிலையில், பெரிய ஆறுகள் இருக்கும் நிலையில் முன்னால் எல்லாம், ஆங்காங்கே இருக்கும் சிறு சிறு ஆறுகள் ஆங்காங்கே இருக்கும் மக்களுக்கு பயன்படக்கூடிய முறையில் சிறு பாசனத் திட்டங்களாக அமைக்கப்பட்டது என்பதுதான் அந்தப் பாட்டின் சிலேடைக் கருத்து என்று நான் கூறுவேன்.

அப்படிப் பார்க்கும்போது, வைகை நதியை உதாரணமாகச் சொன்னா லும், அநேகமாக தமிழ் நாட்டிலுள்ள எல்லா சிறு நதிகளுக்கும் அது பொருந்தும். ஆகவே, சிறு பாசனத் திட்டங்களை ஆங்காங்கே அமைப்ப தற்கு வேலைகள் மும்முரமாகச் செய்யப்பட வேண்டும் என்றும் அமைச்சர் அவர்களை நான் கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த ரீதியில் நமது ஒப்பற்ற பிரதமர் நேருஜீ அவர்களும், உணவு அமைச்சர் அவர்களும் கண்மாய் அபிவிருத்தியைப் பற்றியும், மராமத்து வேலைகளைப் பற்றியும் சமீபத்தில் நடந்த அகில இந்திய விவசாயிகள் சம்மேளனத்தில் கூறியதை இங்கே நமது சர்க்கார் அவர்களின் கவனத்திற்குக் கொண்டுவரப் பிரியப்படுகிறேன். இம்மாதிரி காரியங்களில் இந்தக் கண்மாய் மராமத்து என்று சொல்லப்படும் போது, மழை காலத்தில் வண்டல்களை அடித்து வந்து, ஆற்றிலிருந்து கண்மாய்களுக்குப் போகும் **supply channel** என்று சொல்லப்படும் வாய்க்காலிலும் கண்மாயிலும் நிரப்பி மேடு தட்டி விடுகிறது. அந்த ரீதியில் நதிகளைச் செப்பனிடும் வேலை, யாருடைய பொறுப்பு என்று நிர்ணயம் இல்லாமல், சரிவர நடைபெறாமல் இருப்பதால் தான் அங்கு பாசன வசதிகளில், அதிலும் முக்கியமாக ஜமீன்தார்களிடமிருந்து இப் பொழுது சர்க்காருக்குக் கைவசமாகிய இடங்களில், கஷ்டங்கள் இருக்கின்றன. அவைகள் மேடு தட்டி விடுவதால் மழை காலத்தில் தண்ணீர் வந்தாலும் குளம் முன்னால் நிறைந்த அளவு நிறைவது இல்லை. அந்த நிலைமையில் இருப்பதால் அந்த வெட்டு எடுக்கும் வேலைகளையும், இன்னும் வாய்க்கால் அமைப்பு, கண்மாயிலிருந்து நிலங்களுக்குப் போகும் வாய்க்கால்களின் முக்கியமான இடங்களை நல்ல தளவரிசை சிமெண்டு மூலமாக அமைத்துக் கொடுக்கவேண்டும். இம்மாதிரி வேலைகள் செய்வது மூலமாக நல்ல முறையில் விவசாயம் முன்னேறி நாடு வளம் பெறும் என்று சொன்னால் அது மிகையாகாது. அம்மாதிரி வேலைகளில் எப்போதும் **professional contractors** என்பவர்களுக்குப் பதிலாக அங்கேயே ஆயக்கட்டுகளில் இருக்கும் விவசாயிகள் சங்கத்தின் மூலமாக, அவர்கள்

முன் வந்தால், அவர்களிடம் **Contract system** என்று சொல்லப் படும் சில நியதிகளை **(conventions)** விலக்கு அளித்து அவர் களுக்கு ஊக்கம் அளித்து அந்த வேலைகளை அவர்களிடம் ஒப்படைத் தால் மிகவும் சரியாக நடைபெறும் என்று நான் கருதுகிறேன்.

அது மட்டுமல்ல. மீன் பிடித்தல் அல்லது கண்மாயில் தண்ணீர் இல்லாமலிருக்கும்போது விவசாயம் செய்துகொள்ளும் நிலை, இவை களை விட நீர்ப்பாசன வசதிக்காக முக்கியத்துவம் கொடுத்து, மற்றவை களெல்லாம் அதற்குப் பின்னால் தான் எடுத்துக்கொள்ளப்பட வேண்டும். நீர்ப்பாசன வசதி தான் முக்கியம். மீன் பிடித்தலோ, கண்மாயை வேறு விஷயங்களுக்குப் பயன்படுத்துவதோ முக்கியம் அல்ல என்ற கருத்தில் வேலை நடக்கவேண்டும். ஏனென்றால் சில சமயங்களில் மீன் பிடிப்பவர்களுக்கு இருக்கும் உரிமைக்காக நீர்ப்பாசன வசதியின் உரிமை பரிபோக்கப்படுகிறது அல்லது துஷ்பிரயோஜனப்படுத்தப்படுகிறது. இம்மாதிரி காரியம் ஏற்படாதபடி ஆங்காங்கே இருப்பவர்கள் கண்காணிக்க வேண்டுமென்று அரசாங்கம் உத்தரவு பிறப்பிக்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

அது மாத்திரமல்ல. இப்பொழுது நாடு பூராவும் வேலைகள் அதிகம் ஆவதன் நிமித்தம் இப்பொழுது எக்ஸிகியூடிவ் அஸிஸ்டெண்ட் இன்ஜினீயர் ஒருவர் இருக்கிறார் சப்-டிவிஷனல் ஹெட் குவார்ட்டர்ஸில். அது போல் ஹைவேஸ் அஸிஸ்டெண்டு என்ஜினீயர் இருக்கிறார். அதே மாதிரி **food production** அஸிஸ்டெண்ட் இன்ஜினீயர், மைனர் இரிகேஷன் அஸிஸ்டெண்ட் இன்ஜினீயர் இருக்கிறார். சப்-டிவிஷனல் ஹெட் குவார்ட்டர்ஸ்ஸில் இருக்கும் இவர்களையெல்லாம் தாலூகா ஹெட் குவார்ட் டர்ஸில் மாற்றி, அங்கே முதலாவதாக ஒரு அஸிஸ்டெண்டு இன்ஜினீர் ஏற்படுத்தி, அவர்கள் வேலைகள் எல்லாவற்றையும், ஹைவேஸ், எக்ஸி க்யூடிவ், இர்ரிகேஷன் மூன்றையுமே வேலை குறைவாக இருக்கும் தாலூகாவில் ஒருவரே பார்க்கும்படியாகவும், வேலை அதிகமாக இருக்கும் இடத்தில் சப்-டிவிஷனல் ஹெட் குவார்ட்டர்ஸில் இருப்பது போல் அஸிஸ் டெண்ட் இன்ஜினீர்கள் இருக்கும்படியும் செய்தால் அவர்கள் உடனடியாக காரியங்களைக் கவனித்து வேண்டியதை மக்களுக்குச் செய்ய வாய்ப்பும் வசதியும் இருக்குமென்று கூறிக்கொள்ள பிரியப்படுகிறேன்.

அது மட்டுமல்ல. இது சம்பந்தமாக நமது திட்டங்களை நிறைவேற்று வதற்கு நிலத்தின் முதலீட்டுத் தொகை 300 ரூபாய் என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது. அதை விசேஷ காரணங்களுக்காக உயர்த்தலாம் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அப்படியில்லாமல் இப்பொழுதிருக்கும் சூழ் நிலையை அனுசரித்து சாதாரண காரணங்களுக்காகவே சிறிது கணிசமாக உயர்த்தி, சின்ன திட்டங்களும் நிறைவேறுவதற்கு உதவவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்கின்றேன்.

* **Sri P. M. PERIA KARUPPAN AMBALAM :** கனம் சபாநாயகர் அவர்களே, நமது சர்க்காரால் நல்ல முறையில் செய்யப்பட்டு வரும் மராமத்து வேலைகளைப் பாராட்டுகிறேன். இத்துடன் முக்கியமாக மதுரை ஜில்லாவில் வைகை அணைக்கட்டின் மூலம், பெரியாறு ஆழப்படுத்தி யதின் மூலம் சர்க்கார் பல நல்ல காரியங்கள் செய்திருக்கிறார்கள். முக்கியமாக மதுரை ஜில்லாவில் அதிகமான குளங்கள் இருக்கின்றன. அதில் ஏ-1 குளங்கள், ஏ-2 குளங்கள் என்று இரண்டாகப் பிரித்திருக்கிறார்கள். ஏ-1 குளங்கள் சர்க்கார் மராமத்தில் இருக்கின்றன. ஏ-2 குளங்கள் சர்க்கார் மராமத்தில் இல்லாமல் குடி மராமத்தில் இருப்பதினால் குடிகள் அவை களைச் சரியாகச் செப்பனிடுவதில்லை. ஏ-2 குளங்களில்தான் பெரியாறு கழிவு நீர் போய்ச் சேருகிறது. அந்தக் குளங்கள் நல்ல முறையில் ஆழப்படுத்தப்படாமல், நல்ல பாய்ச்சல் கால்வாய் இல்லாமல், மடைகள் இல்லாமல் இருப்பதால் மழைக் காலங்களில் அதிகமான கழிவுத் தண் ணீர் வரும்போது தேக்கி வைக்கச் சந்தர்ப்பம் இல்லாமல் போகிறது. ஏ-2

குளங்களை ஏ-1 குளங்களாக மாற்றி சர்க்காரே நேரிடையாக மராமத்து செய்தால் அதிகமான நிலங்களுக்குப் பாசன வசதி செய்து கொடுக்க முடியும். விவசாய உணவுப் பொருள்களும் அதிகமாக உற்பத்தி செய்ய முடியும். முக்கியமாக மேலூர் தாலூகாவில்தான் குளங்கள் அதிகமாக இருக்கின்றன. மதுரை ஜில்லாவில் மொத்தமுள்ள ஏ-2 குளங்கள் 863. அவற்றில் மேலூர் தாலூகாவில் மட்டும் 766 குளங்கள் இருக்கின்றன. புயல் காரணமாகச் சில குளங்கள் செப்பனிடப்பட்டு இருக்கின்றன. ஆனால் இதர குளங்கள் ஆழப்படுத்தப்படாமல், செப்ப னிடப்படாமல் இருப்பதினால் அதிகமான தண்ணீரைத் தேக்கி வைத்துக் கொள்ள முடியவில்லை. அந்தக் குளங்களை ஏ-1 ஆக்கி, ஆழப்படுத்திச் செப்பனிட்டுக் கொடுக்கவேண்டும் என்பதாகவும், மேலூர் தாலூகாவில் வீணாக கடலுக்கு ஓடுகின்ற ஆறுகளுக்கு குறுக்கே அணைகட்டி அந்தத் தண்ணீரையும் பாசனத்திற்கு உபயோகப்படுத்த வசதி செய்து கொடுக்க வேண்டும் என்பதாகவும் கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

* **Sri M. KARUNANITHI :** சட்டப் பேரவைத் தலைவர் அவர்களே, நீர்ப்பாசன மான்யத்தின் மீது கொண்டுவரப்பட்டுள்ள வெட்டு பிரேரணைகளை—தோழர்கள் நல்லசிவம் அவர்களும், ஷண்முகம் அவர்களும் கொண்டு வந்துள்ள வெட்டுப் பிரேரணைகளை—ஆதரித்து என்னுடைய கருத்துக்களைக் கூற விரும்புகிறேன்.

தென்னகத்தில் நீர்வளம் நல்ல முறையில் பாதுகாக்கப்பட்டால்தான் நல்ல செழிப்பும், பசுமையும் இருக்க முடியும் என்கிற கருத்தினை அமைச்சர் அவர்களுக்கு நான் கூறி தெரிய வேண்டுமென்ற அவசியம் இல்லை.

பழைய காலத்திலே நம்முடைய தமிழ் மன்னர்கள் நீர் வளத்தைப் பெருக்கவேண்டுமென்ற நல்ல நோக்கத்தோடு பெரிய பெரிய திட்டங்களை உருவாக்கியிருக்கிறார்கள் என்றும், அவைகளுக்கு எல்லாம் சிகரம் வைத்தது போல கரிகாலப் பெருவளத்தான் கட்டிய கல்லணை இன்றையதினம் காட்சி தருகிறதென்பதையும் ஞாபகப்படுத்த விரும்புகிறேன்.

வசதிகளும், வாய்ப்புகளும் குறைந்திருந்த அந்தக் காலத்தில்—விஞ்ஞானப் பெருக்கம் இல்லாத அந்தக் காலத்தில்—அத்தகைய ஒரு கல்லணையைக் கட்டி அந்தப் பகுதியை செழிப்பாகவும், சீராகவும் ஆக்கிய அந்தப் பெருமையினையும், அதைவிட அதிகமான வசதியும், வாய்ப்பும் விஞ்ஞானப் பெருக்கும் மிகுந்துள்ள இந்த நேரத்தில் நாம் செய்கின்ற நீர்வளத் திட்டங்களையும் எண்ணிப் பார்க்கும்போது—அதையும் இதையும் ஒப்பிட்டுப் பார்க்கும் போது—மிக மிக குறைந்த அளவில் தான் நம்முடைய வேலைகள் நடைபெற்றிருக்கின்றன என்று கூற விரும்புகிறேன்.

இவைகளுக்கு எல்லாம் காரணம் என்ன என்று கூறும்போது—வரவு செலவு அறிக்கையில், நிதி அமைச்சர் அவர்கள் உரையிலும், இந்த நீர்ப் பாசன மானியத்தை கோரியிருக்கின்ற அமைச்சர் திரு கக்கன் அவர்கள் தந்திருக்கிற அறிக்கையிலும்—குறிப்பிடப்படுகிற ஒரே ஒரு காரணம் இயற்கையின் இடையூறுகள் நமக்குப் பெரும் முட்டுக்கட்டையாக இருக்கின்றன என்பதுதான். இயற்கையான வசதிகள் இல்லாத காரணத்தினால் நீர்ப்பாசனத் திட்டங்கள் நிறைவேற்றப்பட முடியவில்லை என்கிறார்கள். அதே நேரத்தில் நீர்ப்பாசன வசதியைப் பெருக்குவதற்கான வழித் துறைகள், அதற்கேற்ற இயற்கை வசதிகள் நம் மாநிலத்தில் எங்கெங்கே கிடக்கின்றன என்பதையும், அவற்றை எப்படிப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்பதையும் பற்றி பல முறை இந்தப் பேரவையில் பல அங்கத்தினர்களால் எடுத்துச் சொல்லப்பட்டு வந்தும் கூட அவை கவனிக்கப்படவில்லை என்பதை ஞாபகப்படுத்துகிறேன்.

26th March 1958] [Sri M. Karunanithi]

சேலம் மாவட்டத்தில் சேர்வராயன் மலையிலுள்ள வட பகுதியில் வாணியாற்றில் அணை கட்டப்படுமானால் ஹரூர் தாலுகா முழுவதும் பாசன வசதி பெறும் என்பதாக அந்தப் பகுதி மக்கள் பல பல மனுக்கள் எழுதி அனுப்பியிருக்கிறார்கள். அந்தத் திட்டத்திற்கு சர்வே செய்யப்பட்டு ஒரு லட்சத்திற்கு மேல் செலவு ஆகியிருந்தும் அந்தத் திட்டம் கைவிடப்பட்டதா, இல்லையா என்ற சந்தேகக் குறியோடு நின்று இருக்கிறது என்று குறிப்பிட விரும்புகிறேன்.

புதுக்கோட்டைப் பகுதியில் அக்கினியாறு, கோரையாறு, வெள்ளாறு, குண்டாறு போன்ற காட்டாறுகள் ஓடுகின்றன. அப்படி ஓடுகின்ற காட்டாறுகளை அந்தப் பகுதியிலுள்ள நிலங்களுக்குப் பாசன வசதி கொடுக்கும் வகையில் தடுத்துத் தேக்க சில திட்டங்கள் சொல்லப்பட்டன. அக்கினியாற்றுக்கு அணை கட்டினால் அந்தப் பகுதி நல்ல செழிப்பும், பசுமையும் அடையும் என்று அந்த வட்டாரத்து மக்கள் என்னைக் காணுகின்றபோதெல்லாம் சொல்கிறார்கள். அந்த வட்டாரத்திலுள்ள மந்திரி அவர்களைச் சந்தித்தும் கூறியிருக்கிறார்கள். 1950-ம் ஆண்டு என்று எனக்கு நினைவு—கனம் பக்தவத்சலம் அவர்கள் அக்கினியாறு திட்டத்தைப் பார்வையிட்டு, வழி முறைகளை எடுத்துக் கூறி, தண்ணீர் கணக்கு இவைகளையெல்லாம் போட்டு திட்டத்தை உருவாக்க நல்ல முயற்சி எடுப்பதாக கூறியிருக்கிறார். ஆனாலும் இன்றைக்கு அந்த முயற்சியும் கைவிடப்பட்டு விட்டதா, இல்லையா என்ற சந்தேகக் குறியோடு நின்று இருக்கிறது என்று குறிப்பிட விரும்புகிறேன்.

நெல்லை மாவட்டத்திலிருந்து வந்திருக்கிற மதிப்பிற்குரிய நண்பர்கள் பேசியிருக்கிறார்கள். கிரியாறு, வேம்பாறு, பம்பையாறு முதலிய நல்ல பல திட்டங்களை எல்லாம் எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். அந்தத் திட்டங்களை நிறைவேற்ற அரசினரின் முயற்சியை எதிர்பார்த்துத் தவங் கிடக்கின்றனர் என்று கூற விரும்புகிறேன்.

தென்னாற்காடு மாவட்டத்தில் கோமுக நதித் திட்டம் இன்னமும் நிறைவேற்றப்படாமல் இருக்கிறது. வடவாறு சீர்திருத்தம் செய்யப்படவில்லை. பனமலை ஏரித் திட்டம் நிறைவேற்றப்படவில்லை. அதோடு தென்னாற்காடு மாவட்டத்திலுள்ள நந்தன் கால்வாய் திட்டம், நந்தன் பெயர் பெற்ற அந்த மாவட்டத்திலே, நந்தன் பரம்பரைப் புகழை நிலை நாட்ட அந்தப் பரம்பரையில் இருந்தே வந்துள்ள அமைச்சர் அவர்கள் இன்னும் நிறைவேற்றாமலிருப்பதைக் கவனித்து உடனடியாகத் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இப்படி நம் மாநிலத்தில் இயற்கை வசதிகள் அதிகமாக இருந்தும் அவைகளைப் பயன்படுத்திக்கொள்ளும் முயற்சியில் ஈடுபடாமல், இயற்கை வசதி இல்லை என்று ஒரு வார்த்தையில் கூறி விடுகிறார்களே என்று வியப்படைகிறேன். அப்படிச் சொல்லி விடுவதின் காரணமாக நிறைவேற்றப்படவேண்டிய பல திட்டங்களை நிறைவேற்றாமல் விட்டு விடுகிறார்கள் என்று கூற விரும்புகிறேன்.

வடாற்காடு மாவட்டத்தைப் பொறுத்த வரையில் செய்யாறு அணைக்கட்டு, சதுப்பேரி, களம்பூர் ஏரி, வடவேடு ஏரி, கமண்டலநாக நதி திட்டங்கள் போன்ற பல திட்டங்கள் எடுத்துக் கூறப்பட்டும் கவனிக்கப்படவில்லை. குறிப்பாகவும், சிறப்பாகவும் என்னுடைய தொகுதியாகிய குளித்தலை பகுதியில் குடகநாறு திட்டத்தைப் பற்றி நான் மிக மிக விளக்கமாக பல முறை எடுத்துக் கூறியிருக்கிறேன். அந்தக் குடகனாறு திட்டத்தின்படி திண்டுக்கல் வட்டம் வேடசாந்தூருக்கு அருகேயுள்ள கல்வார்பட்டியில் ஒரு நீர்த்தேக்கம் கட்டி கிழ்ப்பக்கமாக சுமார் 20 மைல் நீள வாய்க்கால் வெட்டினால் என்னுடைய குளித்தலைத் தொகுதியில் 10 ஆயிரம் ஏக்கருக்கு மேல் பாசன வசதியைப் பெறும் என்று கூறியிருக்கிறேன். வருகிற எப்ரல் மாதம் 5-ந்தேதி கூட சர்வ கட்சித் தோழர்களைக் கொண்ட விவசாயி மகாநாட்டைக் கூட்டுவதாக இருக்கிறது. குடகனாறு திட்டத்தைப் பற்றி சென்ற ஆண்டு மந்திரி கக்கன் அவர்கள் சொல்லும்போது—சென்ற ஆண்டு

ஜுலை மாதம் 12-ந்தேதி என்று நினைவு—அமராவதி திட்டத்திற்குத் தண்ணீர் விடப்பட்டதும் அது கவனிக்கப்படும் என்று கூறியிருக்கிறார்கள். அமராவதி திட்டத்துக்கு தண்ணீர் விட்டாகி விட்டது. ஆகவே இதையும் கவனிக்க வேண்டுமென்று அமைச்சர் அவர்களைப் பணிவோடு கேட்டுக் கொள்கிறேன்.

தஞ்சாவூர் மாவட்டத்தில் காவேரி பிரிவில் தூர்ந்து போயிருக்கிற வாய்க்கால்களை சென்ற பத்து ஆண்டு காலமாக—சுதந்திரம் பெற்ற காலத்திலிருந்தே—மராமத்து செய்யவில்லை. அந்தக் காவேரி கால்வாய்களை வெட்டப்படுமானால் இன்னும் அந்தப் பிரதேசத்தின் வளம் அதிகமாகப் பெருக வழியேற்படும் என்று கூற விரும்புகிறேன்.

இவைகளையன்னியில் கிருஷ்ணா, கோதாவரி திட்டங்களுக்கு நம் சர்க்கார் செய்கிற முயற்சிகளைப் பாராட்டுகிறேன். இன்றைக்கு ஆந்திராவில் அந்நதிகளின் 10 சத வீதம் தண்ணீர்தான் உபயோகப்படுகிறது. அவர்களே அணை கட்டிக்கொண்டாலும் 40 சத வீதம் தான் அவர்களுக்கு பயன்படும் என்றும், மிச்சம் இருக்கிற 60 சத வீதம் வீணாகப் போகாமல் தமிழக மாவட்டங்களுக்குப் பயன்படும் வகையில் செய்யலாம் என்றும் குறிப்பிட விரும்புகிறேன். அந்த வேலையை 'விரைவில்' செய்ய திட்டமிட வேண்டும். அது அமைச்சர் அவை விரைவில் என்று சொல்கிற வார்த்தைக்கு கொள்கிற புதிய பொருள் போல் இல்லாமல் 'சீக்கிரமாக' நிறைவேற்றப்படவேண்டும் என்றும் கேட்டுக்கொள்கிறேன்.

அது போலவே, சென்ற ஆண்டு பாலாறு திட்டத்தைப் பற்றி எங்கள் தலைவர் அறிஞர் அண்ணா அவர்கள் எந்த வகையிலே பாலாற்றில் இருக்கிற தண்ணீரை 'சப் சாயில் வாட்டர்' மூலம் எந்த அளவு நிறைவேற்ற முடியும் என்று எடுத்துக் கூறியிருக்கிறார்கள். அதுவும் இது வரையில் கவனிக்கப்படவில்லை. அதிலும் அமைச்சர் அவர்கள் தங்கள் கவனத்தைச் செலுத்துமாறு நான் கேட்டுக்கொள்கிறேன். பெரிய திட்டங்களை நிறைவேற்ற முடியவில்லை என்று கூறும்போது 176 கோடி ரூபாய் செலவில் பக்ரா நங்கல் அணைக்கட்டுத் திட்டமும், 116 கோடி ரூபாய் செலவில் ஹீரா குட் திட்டமும், 140 கோடி ரூபாய் செலவில் தாமோதர் பள்ளத்தாக்குத் திட்டமும், இது போன்று பல பல திட்டங்களும் வடக்கே நிறைவேற்றப்படும் அதே நேரத்தில் இங்கு பெரிய திட்டங்களுக்கு வழியில்லை, பெரிய திட்டங்களுக்கு இயற்கை வசதியில்லை என்று கூறும்போது நான் இங்கு ஒன்றை உங்கள் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். அதாவது, சில ஆண்டுகளுக்கு முன்னர், ஸர் ஸி. பி. ராமசாமி அய்யர் அவர்கள், கங்கைத் தண்ணீர் குமரி வரையில் கொண்டு வரப்படுமானால் தென்னாடு வளம் பெறும் என்று ஒரு பெரிய திட்டத்தை வெளியிட்டிருக்கிறார்கள். நீங்கள் தான் தென்னாடு பிரிய வேண்டுமென்று கேட்கிறீர்களே, அந்தத் தண்ணீரை அவர்கள் கொடுப்பார்களா என்று கக்கன் அவர்கள் விடை பகரக் கூடும். தென்னாடு பிரிய வேண்டுமென்று நாங்கள் கூறும்போது நட்புறவு முறைகளோடு தான் ஒரு நாடு இன்னொரு நாட்டில் இருந்து விடுதலை பெற வேண்டுமென்று கூறுகிறோமே தவிர நதி, வளங்கள் போன்ற பல வளங்களைப் பகிர்ந்துகொள்ளக்கூடாது என்று நாங்கள் கூறவில்லை. கங்கையில் வீணாகப் போகும் தண்ணீரை தென்னகத்திற்குக் கொண்டு வரும் முயற்சியை ஸர் ஸி. பி. ராமசாமியின் 'ட்ரான்ஸ் கான்டினெட்டல் கனால்' திட்டத்தை வெகு விரைவிலே செய்து முடிப்பதற்கும், அதற்காகிற செலவை மத்திய அரசாங்கத்திலிருந்து கேட்பதற்கும் இந்த அமைச்சரவை துணிவு பெற வேண்டுமென்றும் நான் கேட்டுக்கொள்ளுகிறேன். கடைசியாக, வடக்குள்ள ராஜ்யங்களில் கட்டப்படுகிற அணைத் திட்டங்களுக்கு மத்திய அரசாங்கம் பண உதவி செய்கிறது. ஆனால் இங்கு நம் அமைச்சர் அவர்களால் காலையில் தரப்பட்ட இந்த அறிக்கையில், இங்கு கட்டப்படுகிற திட்டங்களுக்கும், இங்கு செய்யப்படுகிற பாசன வேலைகளுக்கும் மக்களிடமிருந்துதான் நாங்கள் பெரிதும் எதிர்பார்க்கிறோம் என்ற வாசகம் காணப்படுகிறது. இத்தகைய நிலைமை வடக்கில் உள்ள ராஜ்யங்களில் இருக்கிறதா, இல்லையா என்று தெரியவில்லை. ஏனென்றால் நான் அடிக்கடி வடக்கே போகாதவன்

ஆகவே, மக்களிடமிருந்து வாங்கித்தான் நாம் இக்காரியங்களைச் செய்ய வேண்டுமா என்று கேட்டுக் கொள்வதோடு, இந்த நீர்ப்பாசனத் திட்டம் மான்யத்தின்மீது கொண்டு வரப்பட்ட இந்த வெட்டுப் பிரேரணையை நான் ஆதரிக்கிற இந்த நேரத்தில் இந்த அணைக்கட்டுக்களையெல்லாம் இங்கு நீங்கள் கட்டவேண்டுமென்றும் இல்லாவிடில் நாங்கள் வடக்கிற்கும் தெற்கிற்கும் இடையே கட்டிக்கொள்கிற அணையையாவது அனுமதிக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டு எனது உரையை முடித்துக் கொள்கிறேன்.

10-40 a.m.

* **Dr. Srimathi T. S. SOUNDARAM RAMACHANDRAN** : உதவி சபாநாயகர் அவர்களே, பாசன வாய்ப்பிற்காக அமைச்சரவர்கள் கொண்டு வந்திருக்கிற பிரேரணையை ஆதரிப்பதுடன் ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். பெரிய பாசன வாய்ப்புகளுக்குள்ள நதிகள் நமக்கு இல்லை. அதிலும் நம் தமிழ் நாட்டில், பொன்னியாறு, வைகையாறு, காவேரியாறு போன்றவைகளில் இருந்து பாசன வசதி இனி பெறக்கூடிய வாய்ப்பில்லை. அதனால், மழைத்தண்ணீரை நம்பியிருக்கும் பிரதேசங்கள் அதிகமாக இருக்கிற தமிழ்நாட்டுப் பகுதிகளில் மழை பெய்யும் நேரத்தில் காட்டாறுகள், சின்ன சின்ன ஆறுகள், வாய்க்கால்கள் இவைகளில் ஓடும் தண்ணீரை சிறு சிறு அணைகள் போட்டுத் தடுத்து குளங்களை நிரப்புவதன் மூலம், அத்தண்ணீரைப் பாய்ச்சி உணவு உற்பத்தி செய்யக்கூடிய பாசனத் திட்டங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் கட்டத்தில் நாம் இன்று இருக்கிறோம். அப்படிப்பட்ட திட்டங்களுக்கு ப்ரையாரிட்டீஸ் கொடுத்து பஞ்சப் பிரதேசங்களில் உணவு உற்பத்தி செய்ய ஏற்பாடுகள் செய்யப்பட வேண்டும். எனக்கு முன் பேசிய கருணாநிதி அவர்கள் என் தொகுதியைப் பற்றியும் குறிப்பிட்டார்கள். என் தொகுதியைப் பற்றியும் குறிப்பிட்டிருக்கிறார்களே என்று நான் சந்தோஷப்பட்டேன். கடைசியில் பார்க்கும்போது தண்ணீரை நடுவில் இருக்கிற இடங்களுக்கு கொடுக்காமல் எப்படிக் கடத்திக்கொண்டு போவது என்பதைப் பற்றி குறிப்பிட்டது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. வேடசந்தூர், லக்ஷமணம்பட்டி அணைக்கட்டுத் திட்டம் சென்ற 16 வருஷங்களாக என் கவனத்தில் பட்டுக்கொண்டிருக்கிறது புது விஞ்ஞான முறைப்படி அதை அங்கோ அல்லது அதற்கு அடுத்துள்ள இடத்திலோ கட்டினால், பாசன வசதி எக்காலத்திலும் இல்லாத பாளையம் பிர்க்காவிற்கு, பாசன வசதி கிடைக்கும், இந்தக் குடவனாறு திட்டத்தை அமைத்துக் கொடுக்குமாறு நான் கேட்டுக்கொள்கிறேன். இது நீர்ப்பாசனக் கான்பரன்ஸில் பல தடவை கொண்டுவரப்பட்டும், எனக்குத் தெரிந்து ஒரு தடவைதான் தண்ணீர் விவரங்கள் எடுக்கப்பட்டிருக்கிறது. அமராவதி அணைக்கட்டு, திண்டுக்கல் குடி தண்ணீர் திட்டம் இவைகளின் வேலைகள் முடிந்து வருகிறது. மேலும் நான் சொல்ல விரும்புவது என்னவென்றால், பாளையம் பிர்க்காவில் சிறு குளங்கள் நிறைய இருக்கிறது. அதை நிரப்பிக் கொடுத்தாலே போதும். கிணற்றுத் தண்ணீரும், குளங்களில் உள்ள தண்ணீரும் நீர்ப்பாசனத்திற்கு உதவுபடியாகும். ஆகவே, நான் மீண்டும் இந்த சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன், பஞ்சப் பிரதேசமாகிய பாளையம் பிர்க்காவிற்கு பாசன வசதி செய்து கொடுக்க வேண்டுமென்று. அடுத்தபடியாக, அமைச்சர் அவர்களின் பேச்சிலே சில திட்டங்களுக்கு எஸ்டிமேட்டுகள் தயாரிக்கச் சொல்லப்பட்டிருக்கிறது என்று கூறியிருக்கிறார்கள். முக்கியமாக திருநெல்வேலி கொர்டனு நதி அணை எஸ்டிமேட் போடப்பட்டு சர்க்கார் வரை போயிருப்பதாகக் கேள்விப்படுகிறேன். இது, திருநெல்வேலி கெஸட்டியரில் குறிப்பிட்டிருக்கும் திட்டமாகும். அது, பெரிய பகுதிகளுக்கு தண்ணீர் கொடுக்கும் திட்டமல்ல. தண்ணீர் வராமல் இருக்கும் ஆயக்கட்டு பூமிகளுக்கு, ரிசர்வாயரைத் தடுத்து குளங்களை நிரப்பி ஆயக்கட்டுகளுக்கு தண்ணீர் கொடுக்கும் திட்டம் இதில் குறிப்பிட்டிருப்பது கண்டு நான் மகிழ்ச்சியடைகிறேன். ஏற்கனவே எஸ்டிமேட்டுகள் தயாரிக்கப்பட்டு, அதற்கு எதிர்ப்புகள் இல்லாதபடியாலும் 1958–59-ல் ஆவது இதை துவக்கம் செய்து கொடுக்க வேண்டுமென்று நான் சர்க்காரைக்

[Dr. Srimathi T. S. Soundaram Ramachandran]

[26th March 1958

கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக, மதுரையில் உள்ள சாத்தியாறு, மஞ்சளாறு திட்டங்களைப் பற்றி குறிப்பிட்டிருக்கிறார்கள். மஞ்சளாற்றில், வத்தல குண்டு பக்கத்தில் ஆலங்குளம் அணைக்கட்டு பற்றி நாலைந்து வருஷங்களுக்கு முன்னாலேயே பூர்வாங்க ஏற்பாடுகள் எல்லாம் செய்து முடிக்கப்பட்டுவிட்டன. இது சமுதாய வளர்ச்சிப் பரப்புத் திட்டத்திற்கு அப்பாற்பட்டதாக இருந்தாலும் அதற்கு வேண்டிய எல்லாம் செய்யப்பட்டு சர்க்காரால் அங்கீகரிக்கப்பட்ட திட்டமாகும். அங்குள்ள குளங்களுக்கெல்லாம் கூட எப்.டி.எல். **(F.T.L)** லெவல் கூட கட்டியாகிவிட்டது. அப்படியிருந்தும் இன்னும் சில வேலைகள் முடியாதிருக்கிற காரணத்தினால் அந்த அணைக்கட்டுத் திட்டம் பூர்ணம் அடையாமல் பிள்ளையார்நத்தம் போன்ற கிராமங்களுக்கு தண்ணீர் கிடைக்காமல் இருக்கிறது. அதோடு, மஞ்சளாறு திட்டத்தை சீக்கிரமாக அமுலாக்க வேண்டும். மஞ்சளாறு போகிற இடங்களில் செழிப்பான இடங்கள் இருந்தாலும் தண்ணீர் இல்லாமல் இருக்கிற வரண்ட பிரதேசங்களும் நிறைய இருக்கிறது. ஆகவே, இந்த சாத்தியார் திட்டம் வந்தால் அந்தப் பிரதேசங்கள் உண்மையிலேயே பொன் விளையும் பிரதேசங்களாக மாறும் என்று பலர் நினைக்கிறார்கள். அங்கு இரண்டு தடவை ரிவைஸ்ட் எஸ்டிமேட் போடப்பட்டிருக்கிறது. அதையும் ஆரம்பித்துக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு, பள்ளிப்பட்டி வட்டாரம் என்று ஒன்றிருக்கிறது. அது, கொடைக்கானல் ரோட்டிற்கு அருகில் இருக்கிறது. அதை மதுரை ஜில்லாவின் தோட்ட பூமி என்று சொல்வார்கள். அங்கு மாவத்தனது என்ற நீர் வீழ்ச்சியும் சிறிய ஆறும் இருக்கிறது. அந்த நீர்வீழ்ச்சியில் உள்ள தண்ணீர் ஆறாக பாய்ந்து வீணாக போகிறது. அதேசமயத்தில், 10, 15 நாட்களுக்கு தண்ணீர் இல்லாமல் ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்களில் பயிர் பாழாகிப் போகிறது. ஆகவே நான் சொல்வது என்னவென்றால், உள்ள தண்ணீரை வைத்துக் கொண்டு அதை ரெகுலெட் செய்து, ஒழுங்கு பண்ணிவிட்டால் நமது உணவு பற்றாக்குறையை நாம் பெருவாரியாக சமாளித்துக் கொள்ள முடியும். அத்துடன் இன்னொரு காரியத்தையும் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். அது, இரிகேஷனில் வருகிறதா, விவசாய அபிவிருத்தியில் வருகிறதா என்று தெரியவில்லை. பில்டர் பாயின்ட்ஸ் அமைத்து எலெக்ட்ரிக் மோட்டார் வைத்து ஓட்டினால் 10, 20 ஏக்கர் நிலங்களுக்கு தண்ணீர் பாய்ச்ச முடியும். ராமநாதபுரத்திற்குப் பக்கத்தில் நரிக்குடி வட்டாரத்தில் ஒரு ஆற்றங்கரையிருக்கிறது. அதன் கரைகளில் **filter points** போட வாய்ப்புண்டு.

அடுத்தபடியாக ஒரு ஆராய்ச்சி நமக்கு ரொம்பவும் அவசியமாக வேண்டியிருக்கிறது. அதாவது பெரியாற்று பாசனத்தில் 100-க்கு 110 உபயோகிக்கப்படுகிறது. அதோடு விளைச்சலும் அதிகமாகக் கிடைக்கிறது. ஆகவே தண்ணீரை குறைந்த அளவில் எவ்விதம் சிக்கனமாக உபயோகிப்பது என்பதை ஆராய்ச்சி செய்ய ஒரு ஆராய்ச்சி சாலையை ஏற்படுத்தினால் விவசாய அபிவிருத்தி ரொம்பவும் பயனுள்ளதாக இருக்கும். நமது சர்க்கார் இந்தமாதிரி ஒரு ஆராய்ச்சியை ஏற்படுத்தி விவசாய அபிவிருத்திக்கும் உணவு உற்பத்திக்கும் தீவிர முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டியது மிகவும் அவசியம். அதன் மூலமாக இப்போது இருக்கும் தண்ணீரைக்கொண்டு இன்னும் 25 சதமானம் நிலங்களுக்கு தண்ணீர் கொடுக்க முடியுமானால் அதுவே பெரிய காரியமாக இருக்கும். தோட்ட விவசாயிகளுக்கு இதைப்பற்றி நன்றாகத்தெரியும். அடுத்தபடியாக தண்ணீர் கட்டி நிற்கிற குளங்களை எல்லாம் செப்பனிட்டு அதில் தண்ணீரை நிரப்ப வழி செய்யவேண்டும். நமது மந்திரி கக்கன் அவர்கள் தாலூகாவைப்பற்றியே சொல்லுகின்றேன். நத்தம் பள்ளத்தாக்கிலும் அதற்கு பக்கத்திலும் தண்ணீர் வீணாக போய் கொண்டிருக்கிறது. பாலமேடு மலை பகுதிகளிலும், செங்குறிச்சி பக்கத்திலும், வட மதுரை பக்கத்திலும் வீணாகிக்கொண்டிருக்கிறது. இதை எல்லாம் சீரமைப்பு செய்தால் இந்த தண்ணீரை வைத்தே அதிகமான சாகுபடி செய்ய

லாம். உப்பாறு என்று ஒரு ஆறு இருக்கிறது. நூறு வருடங்களுக்கு முன்பே அங்குள்ளவர்களுக்கு அதில் பாத்தியதை இருக்கிறது. இதில் ஒரு அணையை கட்டினால் அங்கு சுமார் 700, 800 ஏக்கர்களுக்கு தண்ணீர் பாயும். இதை சரியானபடி கவனிக்கவில்லையானால் அந்த பகுதிகள் எல்லாம் இன்னும் பஞ்ச பிரதேசமாகவே இருக்கும். ஆகவே இந்த மாதிரி இருக்கும் சிறு திட்டங்களை எல்லாம் நிறைவேற்றுவதற்கு வேண்டிய நடவடிக்கை எடுக்கவேண்டும். அங்குள்ள அணைக்கட்டுக்கு அவர்களுக்கு பாத்தியதை இருக்கிறது. அதை சீக்கிரமாக சீராக்குவதின் மூலம் அங்கு விவசாயத்தை அபிவிருத்தியடையச் செய்து உணவு உற்பத்தியை அதிகரிக்க முடியும். முக்கியமாக விவசாயிகளுக்கு தண்ணீர் சிக்கனத்தைப் பற்றி அறிவிக்கவேண்டும். அதோடு எஸ்டிமேட் போடப்பட்டு இருக்கும் பல திட்டங்களை நிறைவேற்றுவதற்கும் சர்க்கார் உடனடியாக முயற்சிக்க வேண்டும். அதில் எஸ்டிமேட் போடப்பட்டிருக்கும் சாத்தியார் ஓடை போன்ற திட்டங்களை 1958–59-லேயே நிறைவேற்ற வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இதோடு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

**Sri P. S. K. LAKSHMIPATHI RAJ :** கனம் உப சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் மான்யப் பிரேரணையைப் ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். நீர்ப்பாசன திட்டங்களைப்பற்றி எனக்கு முன் பேசிய பலர் அரிய பெரிய யோசனைகளை தெரிவித்து இருக்கிறார்கள். நமது நாட்டின் எல்லைகளை தாண்டியும் செய்ய வேண்டிய திட்டங்களைப்பற்றியுள்ள யோசனைகளையும் ஞாபகப்படுத்தினார்கள். ஆனால் வளம் மிகுந்த எங்கள் பகுதியிலுள்ள சில குறைப்பாடுகளை அமைச்சர் அவர்களுக்கு எடுத்துக்கூற விரும்புகிறேன். ஏற்கனவே இருபது ஆண்டுகளுக்கு முன்பு பாலாறு-பொருந்தலாறு திட்டம் பரிசீலனை செய்யப்பட்டது. அதன் பின் காங்கிரஸ் மந்திரி சபை வந்த காலத்திலிருந்து மறுபடியும் பரிசீலனை செய்து இப்போது அரசாங்கத்தால் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது. இந்த திட்டத்தை நிறைவேற்றித்தரவேண்டுமென்று பழனி பகுதியிலுள்ள மக்கள் கடந்த 20, 25 ஆண்டுகளாக கேட்டுவருகிறார்கள். கோவை ஜில்லா, மதுரை ஜில்லா இவைகளுக்கு நடுவில் இருக்கிற நாங்கள் அங்கெல்லாம் ஏற்படும் திட்டங்களை பார்த்துவிட்டு எங்களுக்கு மாத்திரம் இதை நிறைவேற்றாமல் இருப்பதை பார்த்து மிகுந்த வேதனைப்பட்டுக்கொண்டு இருக்கிறோம். இந்த பகுதியிலுள்ள மக்கள் கிணறுகளில் கூட தண்ணீர் இல்லாமல் கால்நடைகளை வளர்ப்பதற்குக்கூட வழியில்லாமல் கஷ்டப்படுகிறார்கள். இது தவிர அங்கு நங்காஞ்சி ஆறு வருதமாநதி, குதிரையாறு போன்ற பல ஆறுகள் ஓடுகிறது. இவைகளில் ஒரு நதியின் மீதாவது அணைக்கட்டு கிடையாது. ஆனால் சில அணைக்கட்டுகள் மதுரை ஜில்லாவில் கட்டப்பட்டிருக்கிறது. இவைகள் சில செல்வாக்குள்ள மெம்பர்களின் முயற்சிகளினால் கட்டப்பட்டு வருகிறது. எந்தெந்த பகுதியிலுள்ள மெம்பர்கள் அதிகமாக சப்தம் போடவில்லையோ அந்தந்த பகுதிகளில் எல்லாம் இம்மாதிரி தடைகள்தான் இருந்து கொண்டிருக்கிறது. ஆனால் பழனி பகுதியிலுள்ள மக்களின் குரல் கடந்த 25, 30 ஆண்டுகளுக்கு மேலாக ஒலித்துக்கொண்டிருக்கிறது. அதை நிறைவேற்றி கொடுப்பதற்கு அரசாங்கம் முன்வருவதே கிடையாது. அப்படியே அரசாங்கம் முன்வந்தாலும் அங்குள்ள சில வாய்க்கால் தகராறுகளை காட்டி அந்த திட்டங்கள் ஒதுக்கி வைக்கப்படுகிறது. நான் நீர்பாசன அமைச்சர் அவர்களை கேட்டுக்கொள்கிறேன். குறிப்பாக கனம் கக்கன் அவர்கள் பொதுமக்களுடைய அபிலாஷைகளை தெரிந்துகொண்டிருக்கிறவர் என்ற காரணத்தால் இதை நிறைவேற்றித்தர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு வேறு ஒரு காரணமும் இருக்கிறது. தமிழ் கடவுள் என்று சொல்லப்படுகிற தண்டாயுதபாணி அங்கு இருக்கின்ற காரணத்தால் இந்த அணையைக்கட்டி ஆசியை பெருமாறு கேட்டுக்கொள்கிறேன். இப்போது அந்த தண்ணீர் எல்லாம் வீணாகப்போய்க்கொண்டிருக்கிறது. இதில் அணைகட்டவேண்டுமென்று சொல்லும்பொழுது தஞ்சாவூரிலுள்ள

ஒரு சிலர் இந்த நதியிலுள்ள தண்ணீரை பயன்படுத்திக்கொண்டிருப்ப தால் இதை எதிர்த்து வருகிறார்கள். நாங்கள் அணைகட்டவேண்டும் என்று முயற்சிக்கும்பொழுது திருச்சி, தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள சில மக்கள் இதை ஆட்சேபிக்கிறார்கள். இவர்களுக்கு தண்ணீர் குறைந்து விடும் என்று ஆட்சேபிக்கிறார்கள். இதற்காக இன்ஜினீயர்களை கண்டு இதை நிறுத்துவதற்கு வேண்டிய காரியங்களை எல்லாம் செய்து வைத்து விடுகிறார்கள். ஆகவே இந்த பாலாறு-பொருந்தலாறு திட்டத்தை நிறை வேற்றுவிட்டால் தாராபுரம், உடுமலைப்பேட்டை பகுதிகள் என்றென்றும் பஞ்சப்பிரதேசமாக போய்விடும் என்பதை சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அங்கு விளைச்சல் இல்லாத பகுதிகளுக்கு எல்லாம் வரி வஜா கொடுக்கப்பட்டு வருகிறது. ஆனால் இந்த தண்ணீரை கொண்டு வந்தால் இந்த வரி வஜாவை நிறுத்திவிடலாம் என்பதையும் சுட்டிக்காட்ட விரும்பு கிறேன். அதோடு இந்த திட்டம் நிறைவேறினால் மின்சாரம் கிடைப்பதற் கும் வழி இருக்கிறது. அங்கு உயரமான நீர்வீழ்ச்சி இருக்கிறது. பல ஊற்றுள்ள ஆறுகள் இருக்கின்றன. ஆகவே இதை நல்லமுறையில் பயன்படுத்திக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். குறிப்பாக எங்கள் பகுதியிலுள்ள ஒரு பெரிய கஷ்டத்தை குறிப்பிட விரும்புகிறேன். அமராவதி நதி எல்லையில் எங்கள் பகுதி இருக்கிறது. அந்த கரையில் இருந்து கொண்டிருக்கிற மக்கள் இந்த அணைக்கட்டினால் தங்களுக்கு நன்மை கிடைக்கும் என்று எதிர்ப்பார்த்துக்கொண்டிருந்தார்கள். ஆனால் அமராவதி தண்ணீர் தாராபுரம் தாலூகாவுக்குத்தான் சென்றதே தவிர அதன் கிழக்கு கரையிலுள்ள கிராமவாசிகளுக்கு பயன்படவில்லை. அங் குள்ள கிராமவாசிகள் தலைமுறை தலைமுறையாக தண்ணீர் இல்லாமல் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். ஆகையால் கிழக்குப் பக்கம் ஒரு மதகு வைத்து இவர்களுக்கு தண்ணீர் கிடைக்கச் செய்யவேண்டும். தண்ணீர் இல்லாத காரணத்தால் ருத்திரபாளையம், ஆண்டிப்பட்டி, குப்பம் பாளையம், பாப்பம்பட்டி போன்ற பகுதிகளில் இருக்கின்ற மக்கள் தண்ணீர் இல்லாமல் தவித்துக்கொண்டிருக்கிறார்கள். ஆகவே இந்த பகுதி மக்களுக்கு தண்ணீர் கிடைப்பதற்கு வேண்டிய முயற்சிகளை உடனே எடுக்க வேண்டும் என்று கனம் அமைச்சர் அவர்களை கேட்டுக்கொள்கிறேன்.

இந்த பழனி பகுதியிலே வருதமாநதித் திட்டம் பரிசீலனைசெய்யப்பட்டு அரசாங்கம் வைத்துக்கொண்டிருக்கிறது. அந்தத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்தால் 10,000 ஏக்கர் வரை தண்ணீர் பாய ஏதுவாக இருக்கும். ஜமீன் விவசாயிகள் காலம் எல்லாம் கிணறுகள் உடைந்து பாசன வசதியில் லாமல் கஷ்டப்படுகிறார்கள். அதற்கு தாசில்தார் வந்து ஏராளமான பணம் செலவழித்து ரிப்பேர் பார்க்கிறார்கள். இந்த மாதிரி ஏராளமாக பணம் செலவழிப்பதற்கு பதிலாக அரசாங்கம் கவனித்து ஒரு அணையைக் கட்ட முன் வந்தால் நலமாக இருக்கும். இத்துடன் இந்த வருதாமாநதியில் கட்டப்படும் அணையிலிருந்து மின்சாரம் உற்பத்தி செய்ய முடியும். இதை கட்டிக் கொடுத்து விவசாயிகளுக்கு உபயோகமாக தண்ணீர்கிடைக்க வழி செய்யவேண்டுமென்று கூறிக்கொள்ள விரும்புகிறேன். விவசாயிகளுடைய இந்தக் கவலையைப் போக்கியாகவேண்டும். ஒரு சிலர் இந்த வசதியைப் பெறுக்கிக் கொள்ளுகிறார்கள். வசதியில்லாத மக்களுக்கும் இந்த வாய்ப்புக் கிடைக்கவேண்டுமென்று கனம் மந்திரி அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

பழனி தாலூகாவிற்கு மற்ற ஜில்லாவிலிருந்து கிடைக்கக்கூடிய அனு கூலங்கள் கிடைக்க முடியாமல் இருக்கிறது. மேற்கு எல்லையில் இருக் கின்ற காரணத்தினால் மேடாக இருக்கிறது. இப்பக்கம் பார்த்தால் கோயமு த்தூர் ஜில்லாவின் எல்லையில் கடைசியில் இருக்கிறது. இரண்டு ஜில்லா விற்கு மத்தியில் இருக்கும் பழனி தாலூகாவிற்கு சரியான அபிவிருத்தி ஏற்பட முடியாமல் இருக்கிறது. ஆகவே, இங்குள்ள விவசாயிகளின் கண் ணீரைத் துடைக்க, பஞ்சத்தைப் போக்க பாலாறு-பொருந்தலையாறு திட்டத்தை வருகிற ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்து பொது மக்களுக்கும் விவசாயிகளுக்கும் உதவ வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

SRI A. VEDARATHNAM : ஆன் எ பாய்ன்ட் ஆப் பர்ஸனல் எக்ஸ்பிளனேஷன், ஸார் . . .

DEPUTY SPEAKER : உங்களைப் பற்றி அவர் ஒன்றும் சொல்லவில்லையே !

SRI A. VEDARATHNAM : என்னைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் தஞ்சை ஜில்லா மிராசுதார்களைப் பற்றிச் சொன்னார். அவர்கள் ஷண்முக நதியிலும் அமராவதி நதியிலும் அணை போட்டு பாசனத்திற்குக் கொண்டு வருவதை தஞ்சை ஜில்லா விவசாயிகளும், தஞ்சை மிராசுதார்களும் ஆட்சேபிப்பதாகச் சொன்னார்கள். இப்பொழுது எந்த விதமான செலவும் இல்லாமலேயே சில நிலங்கள் பாசனத்திற்கு வந்து விளைச்சல் நடந்து கொண்டிருக்கிறது. செலவுசெய்து அணை கட்டி அந்தத் தண்ணீரை இன்னொரு பக்கம் விட்டு, அதன் மூலமாக இப்போது சாகுபடியில் இருக்கும் நிலங்களைக் காயப்போடுவதைக் காட்டிலும், புதியதாக நிலங்களை சாகுபடி செய்ய வசதி எவ்வளவோ இருக்கும்போது, அம்மாதிரி செய்தால் தஞ்சை மிராசுதார்கள் யாரும் ஆட்சேபிக்க மாட்டார்கள், தடை செய்ய மாட்டார்கள், அதற்கு பதிலாக உதவி செய்ய முன் வருவார்கள் என்பதை கனம் அங்கத்தினர் அவர்களுக்கு சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே நீர்ப்பாசனத் திட்டம் மிக முக்கியமான ஒரு திட்டமாகும். இதை எப்படி நாம் பார்க்க வேண்டும். ஒரு மனிதன் வாழ்வதற்கு எப்படி தண்ணீரும் காற்றும் மிக மிக அத்தியாவசியம் என்று கருதுகிறோமோ, அதே போன்று இன்றைக்கு உணவுப் பொருள்களின் உற்பத்தியை அதிகப்படுத்துவதற்கும் குறைந்த விலையில் கிடைப்பதற்கும், இன்றைக்கு நீர்பாசனத் திட்டங்களை எந்த அளவுக்கு அதிகப்படுத்தி அதில் கவனம் செலுத்துகிறோமோ, அந்த அளவுக்கு உணவுப் பொருள்களின் உற்பத்தியை அதிகப்படுத்த முடியும். ஆகவே, இந்த நீர்ப்பாசனத் திட்டத்திற்கு ஒதுக்கப்பட்டிருக்கக் கூடிய பணம் மிக மிகக் குறைவாக இருக்கிறது என்பதை நான் ரொம்ப அழுத்தம் திருத்தமாக சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இதே சந்தர்ப்பத்தில் நமது ராஜ்யத்திலே எல்லா ஜில்லாக்களிலுமே நாங்கள் பல இடங்களில் அணைக்கட்டுகளை கட்டி விட்டோம், நீர்த்தேக்கங்களை கட்டிவிட்டோம், இனி கட்டுவதற்கு இயற்கை வசதி கிடையாது, அந்தக் காரணத்தினால் சென்ற ஆண்டை விட இந்த ஆண்டு ஒதுக்கப்பட்டிருக்கிற தொகை குறைவாக இருக்கிறது என்று சொல்லப்படுகிறது. ஆனால் ஆளும் கட்சி அங்கத்தினர்களும் சரி, எதிர் கட்சி அங்கத்தினர்களும் சரி, ஒவ்வொரு ஜில்லாவிலும் இன்றைக்கு எத்தனை இடங்களில் பல பாசனத் திட்டங்களை, அணைக்கட்டுகளை கட்ட வசதிகள் இருக்கின்றன என்பதை தெள்ளத் தெளிவாகக் கூறியிருக்கிறார்கள். அப்படி இருக்கும்போது இந்த நேரத்திலே அரசாங்கம் வசதி கிடையாது என்று சொல்வதானது அணைகள் கட்டுவதற்கு அரசாங்கம் மறுப்பது போலாகும்—உணவு உற்பத்தியை அதிகப்படுத்த மறுப்பது போலாகும்—என்பதைதான் நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

சமீபத்திலே மத்திய சர்க்கார் மந்திரி டே அவர்கள் ஒரு மாநாட்டுக்கு வந்தபோது குறிப்பிட்டார்கள். இந்த நீர்ப்பாசனத் திட்டங்களுக்காக எந்த அளவுக்கு பணம் செலவானாலும் நாங்கள் கேட்டால் கொடுக்கத் தயாராயிருக்கிறோம் என்று திட்ட வட்டமாக குறிப்பிட்டுப் போனார்கள். ஆனால் நமது ராஜ்யத்திலே ஒவ்வொரு ஜில்லாவிலேயும் ஏரிகள் போன்றவைகள் புதிதாகக் கட்ட வாய்ப்புகள் இருக்கின்றன. ஒவ்வொரு ஜில்லாவிலும் ஏரிகள் இருக்கின்றன. அணைக்கட்டுகள் கட்ட வசதிகள் இருக்கின்றன. அப்படி இருந்தும் கூட மத்திய சர்க்காரிடம் பணம் கேட்பதற்கு எதற்காகத் தயங்குகிறார்கள் என்பதைத்தான் நான் தெரிந்துகொள்ள ஆசைப்படுகிறேன்.

ஏதோ அவர் வந்த போக்கிலே அப்படி சொல்லிவிட்டுப் போகிருரோ, உண்மையிலே பணம் கேட்டுப் பார்த்தால் கொடுக்க மாட்டாரோ என்று கூட நினைக்கவேண்டிய நிலை இருக்கிறது. ஜனங்களை ஏமாற்ற வேண்டி இப்படிச் சொன்னுரே தவிர, பணம் கொடுக்க வேண்டுமென்று சொல்லவில்லை என்பதாவது இங்கு தெரிந்தாக வேண்டும். ஆகவே ஒவ்வொரு ஜில்லாவிலும் எல்லா இடத்திலும் கட்டிய பிறகு, குறிப்பாக வட ஆற்காடு ஜில்லாவிலே பல இடங்கள் வசதிகள் பெருமல், பலனடையாமல் இருக்கின்றன. வெள்ளையன் காலத்திலிருந்து, குறிப்பாக 1931-ம் ஆண்டு முதற் கொண்டு இந்த ஜில்லாவிலே ஷண்பகத்தோப்பு அணை தேக்கம், செய்யாறு அணை, மோர்தாணு அணை என்று சொல்லக்கூடிய திட்டங்களெல்லாம் பரிசீலனை செய்யப்பட்டுள்ளது. குடியாத்தம் தொகுதியிலே 1954-ம் ஆண்டிலே முதல் அமைச்சர் போட்டியிட்டு வெற்றி பெற்றவுடன் அவர் முதன் முதலாகச் செய்தது அங்கே இருக்கக் கூடிய என்ஜினியர்களைக் கொண்டு பார்த்து விட்டு, மோர்தாணு அணையைக் கட்டவேண்டுமென்று பல திட்டங்களைப் போட்டு, அதற்கு பிறகு கைவிடப்பட்டிருக்கிறது. ஆகவே, இதே போன்று இன்னும் பல தாலுக்காக்களில், பல கிராமங்களில் ஏரிகள் கட்ட வசதி வாய்ப்புகள் இருக்கின்றன. அவைகளைக் கட்டாமல் இருக்கிருர்கள். இதிலெல்லாம், அதிகாரிகளுக்கு எழுதினுல் என்ன காரணங்கள் கூறப்படுகிறது? பாலாறு பேசின் ரூல்ஸ் படி இதைக் கட்டினுல், பாலாற்றில் போய் விழக்கூடிய தண்ணீரைத் தேக்கி அங்கே குறுக்கே கட்டினுல், அந்த ஆற்றிலுள்ள ஸ்பிரிங்குகள் பாதிக்கும் என்று சொல்லக் கூடிய அளவிற்கு வெள்ளையன் காலத்திய சட்டத்தைக் குறிப்பிட்டு எப்போதும் சொல்லப்படுகிறது. பாலாறு ஆற்றின் கரையிலே பணக்கார விவசாயிகளுக்கு மட்டிலுமே எல்லா வசதிகளும் இருக்கிறதே தவிர ஏழை விவசாயிகளுக்கும் சிறு நில சொந்தக்காரர்களுக்கும் எந்தவிதமான வசதிகளும் கிடையாது. பாலாறு பேசின் ரூல்ஸ் எப்படி இருக்கிறது என்பதை இந்த நேரத்தில் குறிப்பிட ஆசைப்படுகிறேன். எப்படி என்று சொன்னுல் பாலாறு ஆற்றின் கரையில் இருக்கிற சிறு ஏழை விவசாயிகள் பம்ப் செட்டுகளை வைத்து, என்ஜின் வாங்கி விவசாயம் செய்ய கடன் கேட்டால், அந்த ஆற்றின் கரையிலிருந்து 200 கஜத்திற்கு அப்பால் இருந்தால்தான் கொடுப்போம் என்று சொல்லப்படுகிறது. பணக்கார விவசாயிகளாக இருக்கக்கூடியவர்கள் ஆற்றுக் கரையிலல்ல, ஆற்றிலேயே கூட கிணறு வெட்டி தண்ணீர் இறைக்க சட்டம் இடம் கொடுக்கிறது. வசதிப்பட்டவர்கள் என்ன வேண்டுமானுலும் செய்லாம். வசதியில்லாத மக்களுக்கு கடன் கொடுப்பதாகச் சொல்லி விட்டு மறுபக்கத்திலே இந்த சட்டங்களைப் போட்டு அவர்களுக்கு வாய்ப்பு வசதிகள் இல்லாத அளவிற்கு இது போன்ற சட்டம் இருக்குமானுல் அந்தச் சட்டத்தை தகர்த்தெரிந்து ஏழை விவசாயிகளுக்கு நல்ல முறையில் விவசாயம் செய்யக்கூடிய அளவிற்கு வசதி செய்யக்கூடிய சட்டத்தைக் கொண்டுவர வேண்டும். அதற்கு வேண்டி பாலாறு பேசின் ரூல்ஸைத் திருத்தவேண்டுமென்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

அதே நேரத்தில் இன்றைக்கு பல இடங்களில் ஏரிகள் வெட்டுவதற்கான வாய்ப்புகள் இருக்கின்றன. அதைச் சென்ற பட்ஜெட் கூட்டத்திலே கூட நான் குறிப்பிட்டிருக்கிறேன். ஒவ்வொரு ஜில்லாவிலேயும் 3 மாதத்திற்கு ஒரு முறை கூட்டங்கள் கூடுகிறது. இர்ரிகேஷன் கூட்டமோ, மற்றும் பிளானிங் போர்டு போன்ற கூட்டமோ கூடுகிறது. அந்தக் கூட்டங்களிலே ஒரு என்ஜினியர் வரும்போது கட்டுவதற்கு வாய்ப்பு இருக்கிறது, கட்டுவோம் என்று சொல்லுவார். இன்னொரு என்ஜினியர் வரும்போது, பாலாறு பேசின் ரூல்ஸ் இருக்கிற காரணத்தினுல் ஒன்றும் செய்ய முடியாது என்று சொல்லுகிற அளவிற்கு இருக்கிறது. இதேபோன்று, பழைய ஏரிகள், அதிலிருந்து தண்ணீர் பாய்ச்சி ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்களை விவசாயம் செய்யக்கூடிய அளவிற்கு வசதி இருக்கக்கூடிய ஏரிகள் இருக்கின்றன. அந்த ஏரிகளுக்கு தண்ணீர் போகக் கூடிய கால்வாய்கள் இருக்கின்றன. பல இடங்களில் அந்தக் கால்வாய்கள் பழுது பார்க்க முடியாத அளவிற்கு இருக்கின்றன. கனம் அமைச்சர் அவர்கள் சொல்லலாம், அதையெல்லாம் நீங்கள் எங்கள்

26th March 1958] [Sri V. K. Kothandaraman]

கவனத்திற்கு கொண்டு வந்து எழுதினல் கவனிக்கலாம் என்று. அமைச்சர் அவர்களுக்கு எழுதினல் அவர் மீண்டும் கீழே இருக்கக்கூடிய ஜில்லா அதிகாரிகளுக்குத் தான் அனுப்புகிருர். அவர்கள் என்ன சொல்லுகிருர்களோ அதைத்தான் அமைச்சர் அவர்களும் சொல்லக்கூடும். ஆகவே இதை அவசியம் உடனடியாக கவனிக்கவேண்டும். வட ஆற்காடு ஜில்லாவானது சிறு நில விவசாயிகளைக் கொண்ட ஒரு ஜில்லா மட்டுமல்ல, மிகவும் வறண்ட பிரதேசம். வறண்ட பிரதேசங்களை கவனிப்பதுதான் மிகமிக முக்கியம். அதற்கு பதிலாக "இதோ பாருங்கள், மற்ற மாகாணங்களை விட இந்த மாகாணத்தில் தான் அதிகமாக மின்சார வசதி வழங்கியிருக்கிறோம். இந்த மாகாணத்தில்தான் ரோடு வசதிகள் இருக்கின்றன" என்று சொல்லுகிற நேரத்தில், இந்த மாகாணத்தில் நீர்ப்பாசன வசதி மிகமிக மோசமாக இருக்கிறது என்பதைப் பார்க்கவேண்டும். இந்த நிலையில் பார்ப்போமேயானல், கங்கைத் தண்ணீரை இங்கே கொண்டு வர வேண்டியது அவசியமில்லை. ஆனல் ஆந்திராவில் இருக்கிற கிருஷ்ண, கோதாவரித் தண்ணீரை இங்கே கொண்டு வருவதற்கான வாய்ப்பு இருக்கிறது. அதைப்பற்றி பெரிய பெரிய நிபுணர்களும் கூறியிருக்கிருர்கள். அப்படி அந்தத் தண்ணீரை இங்கே கொண்டு வருவதாய் இருந்தாலும் அதை மைசூர் ராஜ்யத்திற்கு கொண்டுபோய், அங்கேயிருந்து நம்முடைய ராஜ்யத்திற்கு வருமேயானல், செங்கற்பட்டு, வட ஆற்காடு ஜில்லாக்களும், இன்னும் பல ஜில்லாக்களும் பயனடையும். இதைக் குறிப்பாக ஏன் சொல்லுகிறேன் என்ருல், இந்த ஆறு ஆரம்பமாவது மைசூர் ராஜ்யத்திலிருந்து. இதைப்போன்ற ஒரு திட்டம் வரக்கூடிய சந்தர்ப்பத்திலே, அந்தத் தண்ணீரை பாலாற்றிலே கொண்டுவருவார்களேயானல், பலவிதத்தில் உதவியாக இருக்கும். பாலாற்றில் சரியான அளவுக்கு தண்ணீர் வராத காரணத்தால், பாலாறு அணைக்கட்டுத் திட்டத்தையும், மோர்தனத் திட்டத்தையும் முதலமைச்சர் அவர்கள் போட்டிருக்கிருர்கள். அவர்கள் கூட இருப்பவர் தான் கனம் அமைச்சர் கக்கனும். ஆகவே இந்தத் திட்டத்தைக் கைவிடாமல் —அங்கே காங்கிரஸ் எம். எல். ஏ. தேர்ந்தெடுக்கப்பட்டிருந்த போதிலும் சரி, கம்யூனிஸ்டு எம்.எல்.ஏ. இருந்தாலும் சரி, அங்கே இருக்கக் கூடிய மக்கள் நல்ல முறையில் வாழவேண்டும் அங்கே இருக்கிற விவசாயிகளுக்கு நல்லது செய்ய வேண்டும் என்ற எண்ணத்துடன், இந்த ஆண்டிலே இல்லாவிட்டாலும் சரி, அடுத்த ஆண்டு பட்ஜெட்டிலாவது இதைச் சேர்க்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதே போன்று செண்பகத் தோப்பு அணைக்கட்டு, செய்யாறு அணைக்கட்டுத் திட்டங்களையும் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். 11-10 a.m.

**Sri V. S. MANICKASUNDARAM** : உதவி சபாநாயகர் அவர்களே, இந்தப் பாசன முதலீட்டு மான்யக் கோரிக்கையை நான் ஆதரிக்கிறேன். கனம், அமைச்சர் அவர்கள் தங்களுடைய முன்னுரையிலே பெரிய திட்டமான கீழ்பவானித் திட்டம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது என்றும், ஏறக்குறைய முடிந்துவிட்டது என்றும் சொன்னுர்கள். கீழ் பவானித் திட்டப்பகுதி மக்களின் பிரதிநிதி என்கிற முறையில் அத்திட்டத்தில் உள்ள சில சிக்கல்களை அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன்.

நீர்ப்பாசனத் திட்டங்களை நிறைவேற்றும்போது, திட்டப் பிரதேசங்களில் அதிகப்படியாக விளையக்கூடிய உணவு தான்யத்தைக் கொண்டுதான் திட்டத்தின் முக்கியத்துவத்தைப் பற்றி முடிவு செய்யப்படுகிறது என்றும் முன்னுரையில் கண்டிருக்கிறது. அப்படியானல், கீழ்பவானித் திட்டப் பகுதியில் நெல் பயிரிடக்கூடாது என்கிற தடை உத்திரவைப் பிறப்பித்ததற்குக் காரணம் என்ன என்று கேட்கிறேன். இம்மாதிரி உத்திரவானது இயற்கைக்கும், சட்டத்திற்கும் முரணனதாகாதா என்று கேட்க விரும்புகிறேன். அரசாங்கம் சட்ட நிபுணர்களைக் கலந்து மீண்டும் புனராலோசனை செய்து, அந்த உத்தரவை நீக்கி, அந்த பகுதி மக்கள் நஞ்சை சாகுபடிக்குத் தண்ணீர் எடுத்துக் கொள்ளும் வகையில் வழி செய்யுமாறு

கேட்டுக்கொள்கிறேன். கீழ்பவானித் திட்டத்தில் இந்த மாதிரி உத்தரவை அமல் நடத்துவதன் அனுபவத்தை மீண்டும் பரிசீலனை செய்து புதுத் திட்டங்கள் கொண்டு வருகிற சந்தர்ப்பத்தில் இந்தமாதிரி கட்டுத்திட்டத்தை புகுத்த வேண்டாமென்று கேட்டுக்கொள்கிறேன். நான் விசாரித்த வரையிலும் பரம்பிக்குளம் திட்டத்திலும் புஞ்சை தான்யங்களுக்குத்தான் தண்ணீர் கொடுக்கப் போவதாக நம்பகமான வட்டாரங்களிலிருந்து தெரிந்துகொள்ள நேர்ந்தது. ஆகவே, மராமத்து இலாகா இதை பரிசீலனை செய்து, கீழ் பவானிப் பிரதேசத்தில் இது எவ்வளவு தூரம் வெற்றிகரமாக நடைபெறு கிறது என்று தெரிந்துகொண்டு, அதற்கு பிறகு இதைப் பரம்பிக்குளம் திட்டத்திற்கு அமலுக்குக் கொண்டுவரும்படிக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, கீழ் பவானிப் பிரதேசத்தில் தண்ணிர் விநியோகிக்கும் விஷயத்தில் ஒரு தகராறு பிரச்னை இருந்து கொண்டே வருகிறது. விவசாயிகளுக்குத் தண்ணிர் விநியோகிப்பது யார் என்று தீர்மானிக்கப்படாமல். ஒரு நிரந்தரமான நிலைமை ஏற்படாமல் இருக்கிறது. சட்டத்திலே "**whether a land is actually irrigated with water or not, he shall be levied a tax**" என்று இருப்பதன் காரணமாக, அந்தப்பகுதியை அநுகூலமாக எடுத்துக் கொண்டு யாருமே தண்ணீர் விநியோகிக்கும் பொறுப்பை எடுத்துக்கொள் ளவில்லை. ரெவின்யூ இலாகாவிடம் போய்க் கேட்டால், மராமத்து இலாகா வைப் போய்க் கேளுங்கள் என்று சொல்லுகிறார்கள். மராமத்து இலா காவைப் போய்க் கேட்டால், 200 எக்கருக்கு உட்பட பொறுப்பு ரெவின்யூ டிபார்ட்மெண்டைச் சேர்ந்தது என்று சொல்லுகிறார்கள்.

நானும் ஈரோடில் கீழ் பவானி பிராஜெக்ட்டுக்கு சார்ஜ் ஆக இருக்கும் எக்ஸிகூடிவ் என்ஜியரும் சித்தோடு அருகே உள்ள ஒரு நிலத்திற்குப் போய் இருந்தோம். சென்ற ஐந்து வருஷங்களாக அந்த விவசாயியின் நிலத்திற்கு அருகே வாய்க்கால் இருந்தும் கூட அவன் நிலத்திற்குத் தண் ணீர் கிடைக்கவில்லை. ரெவின்யூ டிவிஷனல் ஆபீசர் அவனுக்கு வரி விலக்கு அளிக்கவில்லை. நிலத்திற்கும் தண்ணீர் கிடைக்கவில்லை. அவர் களிடம் போய்க் கேட்டதற்கு '**whether a land is actually irrigated with water or not, he shall he levid a tax**' என்று இருப்பதனால், வரி விலக்கு அளிக்க முடியாத நிலையிலே இருக்கிறேன் என்று சொல்லிவிட்டார். எக்ஸிகூடிவ் எஞ்சினியரிடம் போய்க் கேட்டதில் "தண்ணீரை விநியோகிக்கும் பொறுப்பு என்னிடத்தில் இல்லை, ரெவின்யூ டிவிஷனல் ஆபீசரிடம் போய்க் கேளுங்கள்" என்று சொல்லி விட்டார். தனியாக மதகு வைத்துக் கொடுங்கள், அல்லது தண்ணீர் முறை வைத்துக் கொடுங்கள், அல்லது ஆயக்கட்டிலிருந்து நீக்குங்கள் என்று சொன்ன தற்கு ஒருவராலும் ஒரு உதவியும் செய்ய முடியவில்லை. கேட்கிற வர்களுக்கு எல்லாம் மதகு வைத்துக் கொடுப்பதற்கு **P.W.D.** சட்டம் இடம் கொடுக்கவில்லை என் று சொல்லுகிறார்கள். இதை ஒரு உதாரணத்திற்காக சொன்னேன். இந்த மாதிரி சங்கடமான நிலைமை அநேக விவசாயிகளுக்கு ஏற்பட்டிருக்கிறது. தண்ணீர் விநியோகித்துக் கொடுக்கும் முறையில் சில சட்ட ரீதியான சிக்கல்கள் இருக்கின்றன. சுமார் 100 அல்லது 200 எக்கர் களுக்குப் பாயக்கூடிய அளவில் அரசாங்கத்தின் செலவில் ஆர்ஜிதம் செய்து ஒரு வாய்க்கால் வெட்டிக் கொடுத்திருக்கிறார்கள். நிலச்சுவான் தார்கள் தங்களுடைய சொந்த பூமியிலே, தாங்களே செலவு செய்து வாய்க் கால் வெட்டிக் கொள்ள வேண்டும் என்று சொன்னதற்கு அரசாங்கம் உத்திரவு போட முடியாது என்று சொல்லி வந்தார்கள். 1957-ம் ஆண்டு ஜனவரியில் அப்பொழுது கோயமுத்தூர் ஜில்லா கலெக்டராக இருந்த ஸ்ரீ ஆர். ஸி. ஜோஸப் அவர்கள் ஒரு அறிக்கையை வெளியிட்டார்கள். அதன்படி நிலத்திற்குரிய கிரயத்தை ஒரு விவசாயி அரசாங்க கஜானாவில் கட்டிவிட்டால், அரசாங்கம் அந்த நிலத்தை ஆர்ஜிதம் செய்து, அதற்கான செலவையும் கட்டிவிட்டால், வெட்டிக் கொடுப்பதாகச் சொன்னார்கள். ஆனால், நடைமுறையில் பல சிக்கல்கள் இருக்கின்றன. ஒரு தனி மனித

னிடமிருந்து கிரயம் வாங்கிக் கொண்டு நிலத்தை ஆர்ஜிதம் செய்வதற்கு அரசியல் அமைப்புச் சட்டம் இடம் கொடுக்கவில்லை. ஏறக்குறைய ஒரு வருஷத்திற்கு முன்னதாக இந்த அறிக்கை வெளியிடப்பட்டிருந்தும், பரவலாக விளம்பரம் செய்யப்பட்டிருந்தும் கூட ஒரு விவசாயிக்காவது நிலம் ஆர்ஜிதம் செய்யப்பட்டு வாய்க்கால் வெட்டிக் கொடுக்கப்படவில்லை. அரசாங்கத்தின் பணம் ஒரு பகுதியாவது வந்தால்தான் " Land acquisition" செய்ய முடியுமென்று அரசியல் அமைப்பு சட்டம் கூறுகிறது.

இந்த கால்வாய்களை சரியாக பரிசீலனை செய்து, பிரபோசல்ஸ் அனுப்பி, அவைகளை வெட்ட ஏற்பாடு செய்ய வேண்டும். பிற்பாடு தேவையானால் அரசாங்கம் அத்தியாவசியம் என்று கருதினால், அதற்கான செலவுகளை மட்டும் பின்னால் விவசாயிகளிடமிருந்து வசூல் செய்து கொள்ள வேண்டுமே தவிர, அவர்கள் கஜானாவிற்கு சென்று பணம் கட்ட வேண்டும் என்று சொல்வது நியாயம் அல்ல. 11-20 a.m.

கீழ்ப் பவானி திட்டப் பிரதேசத்தில் இன்னும் இரண்டொரு சட்டப் பிரச்னைகள் எழ முடியும் என்பதை அமைச்சர் அவர்கள் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன்.

அங்கு பயிர் கட்டுப்பாடு அமல் நடந்து கொண்டு வருகிறது. ஒரு விவசாயி தனக்கு இஷ்டப்பட்ட பயிர்களை பயிர் செய்யலாம் என்று அரசியல் அமைப்புச் சட்டத்தில் உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது. அது அவனுடைய ஜீவாதார உரிமை. இந்த சட்டசபைக்கோ அல்லது வேறு எந்த ஸ்தாபனத்துக்கோ அதை கட்டுப்படுத்துவதற்கு அதிகாரம் கிடையாது என்று நான் நினைக்கிறேன். ஆகையால் அரசாங்கம் தக்க சட்ட ஆலோசகர்களை கலந்து ஆலோசித்து முடிவுக்கு வர வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

கீழ் பவானி திட்டத்தின் கீழ் பாசனமாகும் பிரதேசங்கள் எல்லாம் ரயத்துவாரி பிரதேசங்கள். சட்டக் கல்லூரியில் படிக்கும்போது முதன் முதலாகக் கற்றுக்கொடுப்பது ரயத்துவாரி பிரதேசங்களில் அவர்கள் எப்படி வேலை செய்ய வேண்டும் என்பது தான். " மைனிங் ஆக்ட் ", " ட்ரஷர் ட்ரோவ் ஆக்ட் " இவைகளுக்கு உட்பட்டு என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்பது தான். ஆகையால் அவர்கள் கிணறு வெட்டுவதைத் தடுப்பது அரசியல் அமைப்புச் சட்டப்படி மனிதனுடைய ஜீவாதார உரிமையை பாதிப்பதாகும். ஆகையால் இந்த விஷயத்திலும் சர்க்கார் நன்றாக ஆலோசனை செய்து ஒரு முடிவுக்கு வரவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

இந்த பிரதேசத்தில் மின்சார விஸ்தரிப்பையும் கட்டுப்படுத்துகிறார்கள். கீழ் பவானி மக்கள் என்ன பாவம் செய்தார்கள் என்று எனக்கு தெரியவில்லை. தமிழ் நாடு முழுவதும் மின்சார திட்டம் விஸ்தரிக்கப்படும் பொழுது கீழ் பவானி பகுதியில் மட்டும் மின்சார விஸ்தரிப்பை கட்டுப்படுத்துவது நியாயமாகுமா, அவர்களுடைய ஜீவாதார உரிமைகளை பாதிப்பது ஆகாதா என்று கேட்க விரும்புகிறேன்.

அதோடு சுண்ணும்பு ஓடை, பெரும்பள்ளம், குரங்கம்பள்ளம், நொய்யல் முதலிய இடங்களில் இருக்கும் பள்ளங்களை தடுத்து தண்ணீரை வாய்க்கால் மூலமாக விட்டால் பாசனத்துக்கு வசதியாக இருக்கும். ஆகையால் இந்த திட்டங்களை உடனே பரிசீலனை செய்து, எடுத்துக் கொண்டு, நிறைவேற்ற வேண்டும் என்று கேட்டுக் கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

**Sri R. CHIDAMBARA BHARATHI:** கனம் சட்ட மன்ற உதவி சபாநாயகர் அவர்களே, இன்றையதினம் சபையின் முன் வந்துள்ள நீர்ப்பாசன கோரிக்கையை நான் ஆதரிக்கிறேன். இந்த வருஷத்தில் புதிதாக 190,000 எகர் நிலம் அதிகப்படியாக விவசாயத்திற்கு கொண்டு வரப்பட்

டிருக்கிறது. ஒன்பது நல்ல திட்டங்களை எடுத்துக் கொண்டு நான்கு திட்டங்கள் நிறைவேற்றும் தருவாயில் இருப்பதைப் பார்த்து நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். இந்த சமயத்தில் சர்க்காருக்கு ஒன்று, ஞாபகப் படுத்த ஆசைப்படுகிறேன். 1805-ம் வருஷத்திலே ராமனுதபுரம் ராஜா கிழவன் சேதுபதியும், அவருக்கு முதல் மந்திரியாக இருந்த முத்துவீரப் பிள்ளையும் பெரியாறு திட்டத்தை கட்ட முடியும் என்று சொன்னார்கள். 1815-ம் வருஷத்தில் இருந்த ஒரு எஞ்ஜினியர் இந்த திட்டத்தை நடைமுறையில் கொண்டு வருவது சாத்தியம் இல்லை என்று சொல்லி விட்டார்கள். அதற்கு பிறகுதான் இந்த திட்டத்தை ஆரம்பித்து நடத்துவதற்கு முயற்சிகள் எடுத்துக்கொள்ளப்பட்டன. ராமனுதபுரம் ராஜாவும், அவருடைய முதல் மந்திரியும் எடுத்துக்கொண்ட முயற்சிகள் படி இந்த திட்டம் நிறைவேற்றப்படாமல் வேறு வகையில் நிறைவேற்றப்பட்டிருக்கிறது, அதைப்பற்றி நான் வருத்தம் தெரிவிக்கவில்லை. ஆட்சேபிக்கவும் இல்லை. இந்தத் திட்டத்தினால் வைகை நதிக்கு தண்ணீர் வருவதற்கு ஏது இல்லாமல் போய்விட்டது. இந்த வைகை நதி பாசனத்தில் ஏற்கெனவே மூன்று லட்சம் ஏகர் நிலங்கள் இருக்கின்றன. அவைகள் பாதிக்கப்பட்டுவிட்டன. பாதிக்கப்பட்டுக் கொண்டு வருகின்றன என்பதை சர்க்கார் ஆலோசிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இது சம்பந்தமாக கோர்ட்டுகளில் பல வழக்குகள் நடந்து கொண்டிருந்தாலும், இந்த விஷயத்தைப்பற்றி அப்பொழுதே சர்க்காரிடம் கேட்பதற்கு இந்த மூன்று லட்சம் ஏகருக்குச் சொந்தமான மக்கள் சக்தியற்றவர்களாக இருந்த போதிலும், தர்மம், நியாயம் என்ற அடிப்படையில் அவைகளை திரும்பவும் ஆலோசிக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். ஆங்கிலேயர்கள் 100 வருஷ காலம் ஆண்ட காலத்தில் மூன்று பெரிய திட்டங்களைத் தான் நிறை வேற்ற முடிந்தது. அவை பெரியாறு, மேட்டூர், பாபநாசம் என்னும் திட்டங்கள். ஆனால் மக்கள் ஆட்சி ஏற்பட்ட பிறகு 10 வருஷ காலத்தில் ஒன்பது திட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. 190,000 ஏகர் நிலங்கள் விவசாயத்திற்கு கொண்டு வரப்பட்டிருக்கின்றன.

நடைமுறையில் வந்து கொண்டிருக்கும் வைகை திட்டம் 20,000 ஏகர்களுக்கு பயன்படும் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதில் 10,000 ஏகரா திருமங்கலம் தாலூகாவில் உள்ள நிலங்களுக்கு ஒதுக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. மீதி உள்ள 10,000 ஏகருக்கு உள்ள தண்ணீரை வைகை நதியின் வழியாக விடுவார்களேயானால் பல ஆயிரக்கணக்கான, பல லட்ச கணக்கான, ஏகர் நிலங்களுககு பயன்படும். வாய்க்கால்களை வெட்ட வேண்டிய அவசியம் ஏற்பட்டாலும், அதை வெட்டி அந்த செலவை ஜனங்களிடமிருந்து வசூல் செய்ய ஏற்பாடு செய்ய முடியும். இந்தப் பிரதேசத்தில் உள்ள நிலங்கள் மிகவும் வளப்பம் உள்ளவை. மண் வண்டல்கள் அதிகம் நிறைந்தவை. அங்கு தண்ணீர் வசதி மிகவும் குறைவாக இருக்கும் போதே அங்குள்ள விவசாயிகள் மிகவும் கஷ்டப்பட்டு வைகை ஆற்றில் 2 அல்லது 3 கெஜம் தோண்டி கண்மாயில் தண்ணீரை நிரப்பி விவசாயம் செய்கின்றனர். இப்படி விவசாயம் செய்யும்போது அவர்களுக்கு ஏகருக்கு 20 அல்லது 30 மூட்டை நெல் கிடைக்கிறது. இந்த விவசாயிகளுக்கு தண்ணீர் வசதி சரியாக இருக்குமானால் 30 மூட்டைகள் அல்லது 40 மூட்டைகள் உற்பத்தி செய்ய ஹேது ஏற்படும்.

பெரியார் ஏரியைப் பொறுத்த வரை அங்கு ஒரு தனி என்ஜினியரிங் இலாகா இருப்பதன் காரணமாக புயல் வந்த போது எந்த விதமான பாதகமும் ஏற்படவில்லை. வைகை ஆற்றைப் பொறுத்த வரை திட்டவட்டமாக கண்டிரோல் இல்லாதபடியால் பல கண்மாய்கள் உடைந்துபோயின. அதனால் விவசாயத்தில் பிரதிகூலங்கள் ஏற்பட்டன. புயலால் இந்த கண்மாய்கள் உடையவில்லை. தண்ணீர் அதிகமாக தேங்கிவிட்டதின் காரணமாக இந்த கண்மாய்கள் உடைந்து போயின. அங்கு விவசாயம் சரிவர நடைபெறுவதற்கு ராமனுதபுரம் டிவிஷனிலிருக்கும் என்ஜினியரிங் டிபார்ட்மெண்டுக்கு திட்டவட்டமாக அதிகாரங்களைக் கொடுத்து வைகை பாசனத்திற்கு ஏற்றபடி கண்மாய்களையும், வாய்க்கால்களையும் ஏற்படுத்த திட்டங்கள்

26th March 1958] [Sri R. Chidambara Bharathi]

வகுக்க வேண்டும். அந்த வாய்க்கால்களின் மூலமாக தண்ணீரை சரிவர ஒழுங்குபடுத்தி விடுவதற்கு " சுலுயிஸ்கள் " போடுவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.

ஆகவே இப்பொழுதுள்ள மக்கள் இந்த சர்க்காருக்கு மிக மிக கடமைப் 11–30 a.m.
பட்டிருக்கிறார்கள். அப்படிக் கடமைப்பட்ட போதிலும் இந்த சர்க்காருக்கு அதிகப்படியாக நன்றி செலுத்துகிறார்கள். அப்படி தங்களுடைய நன்றியைத் தெரிவித்துக் கொண்டு மகிழ்ச்சியும் அடைகிறார்கள். மகிழ்ச்சி அடைந்தவர்களாகவும் இருக்கிறார்கள். ஆங்கிலேயர் காலத்தில் ஏற்பட்ட பெரியாறு திட்டம் இப்பொழுது நிறைவேற்றப்பட்டு விட்டது. அந்த பெரியாறு திட்டத்தை முதலில் ஆரம்பிக்க வேண்டும் என்று சொன்னது ஆங்கிலேயர்கள் அல்ல. அப்பொழுது ராமநாதபுரம் ராஜாவாக இருந்தவர் தான் அந்த திட்டத்தை ஆரம்பிக்க வேண்டும் என்று சொல்லி வந்தார். பெரியாற்றிலிருந்து வரக்கூடிய தண்ணீரை வேறு வழியாகத் திருப்பி வைகையாற்றில் விட்டு பக்கங்களிலுள்ள குளங்கள் கண்மாய்களுக்கு விட்டு அவைகளை நிரப்பிக் கொள்ளக்கூடிய வசதி ஏற்படுத்த வேண்டும். அதற்கு என்று இப்பொழுது தனியான ஒரு டிபார்ட்மெண்டை அமைத்திருக்கிறார்கள். மதுரையில் ராமநாதபுரத்திற்கு என்று தனியாக ஒரு டிபார்ட்மெண்டை அமைத்திருக்கிறார்கள். அதை ஒரு பெரிய ஏரியாவாக அமைத்து அதற்கு தனியாக இலாகாவை வைத்திருக்கிறார்கள். விவசாய விஸ்தரிப்பை அதன் ஆதிக்கத்தின் கீழ் வைத்திருக்கிறார்கள். அதன் மூலமாக அங்குள்ள பிரதேசங்களுக்கு நீர்ப்பாசன வசதிகளைச் செய்து கொண்டு வருகிறார்கள். இன்னும் ஒரு நிமிஷம் கொடுத்தால் இன்னும் ஒரு விஷயத்தை மட்டும் சொல்லிக்கொண்டு முடித்துக்கொள்கிறேன். ஒரு பத்து ஏக்கருக்கு என்று ஒரு தனி இலாகாவை ஏற்படுத்தி இருக்கிறார்கள்.

* Sri M. MUNI REDDI: Mr. Deputy Speaker, I rise to support the Cut Motion under discussion. Before I offer my suggestions with regard to Minor Irrigation, I wish to state that my hon. Friend Sri Appavoo Pillai has spoken at length about the irrigation needs in Hosur taluk. Many a time, these needs have been stated, and restated on the floor of the House. We will be submitting a memorandum also very soon. We do not want that the Government should spend the money drawn from other areas. In Hosur taluk we have 390 square miles of forests and they fetch not less than Rs. 7 to 8 lakhs of rupees income every year. Even if one-fourth of the amount is spent on this backward area, much of the complaints could have been avoided, and the area improved.

As for the irrigation needs of our taluk, besides the points referred to by Sri Appavoo Pillai, I wish to bring one or two points to the notice of the Government. The Hon. Minister was pleased to visit Vepanapalli in Krishnagiri taluk and a memorandum was presented to him with regard to the repair of Thimmama cheruvu. Representations on this subject have been made on the floor of the House as well as outside, for the past 8 or 9 years. So far, no action has been taken. I hope the Hon. Minister will pay due attention to the backward areas and specially the areas I represented in 1952 to 1956 and now. We would like the Government to pay more attention to the backward areas. It has been stated that in respect of the irrigation schemes, if contributions were forthcoming the Government would consider the question of undertaking them

Whenever we raise this question in the Irrigation Conferences, or during the budget discussion or when we speak on the Demands, the same reply is usually given. I would like to submit that the Government have spent some amounts on Minor Irrigation Schemes year after year. But, we have no idea as to how and when they will be completed and how many are completed. In this connection I wish to point out that so far as Minor Irrigation Schemes are concerned, from 1946 to 1951, a sum of about Rs. 2,311 lakhs has been spent. We do not know how many of these schemes have been completed for the amount earmarked and spent. In the subsequent year, a sum of Rs. 95 lakhs was provided and in 1954 or so, the Central Government were pleased to sanction a sum of Rs. 94 lakhs or so for the improvement of Minor Irrigation Schemes, and specially renovation of tanks, etc. To this day, we have not heard anything in this regard on the budget. It is, however, stated that a certain amount has been earmarked for the de-silting of tanks. More than this, we do not know anything.

I wish to offer a few suggestions with regard to the minor irrigation schemes, repair and renovation of tanks, etc. In this State, we have 386 lakhs of acres out of which 48 lakhs of acres are under irrigation. They are irrigated by major projects, small anicuts and tanks and wells. Out of the 48 lakhs, more than 22 lakhs of acres are under cultivation by tanks only. In the composite State, we had 35,000 tanks and now it is stated that we have about 22,000 tanks and out of these 48 lakhs of acres, more than 22 lakhs of acres are under irrigation by tanks only. In this connection, I would request the Hon. Minister to devote more attention to renovation of tanks. Only a sum of Rs. 10 lakhs has been set apart as per the budget speech of the Hon. Finance Minister for the improvement and renovation of tanks or de-silting of tanks. Well, I wonder it will take 500 to 600 years to achieve any substantial results in this regard at this rate. Tanks are the real wealth of our State. As for our food requirements, the Hon. Finance Minister has stated that we required about 48 lakh tons per year at the rate of one pound per head. There is the increase of one tenth population every year. We have to feed 30 lakhs of people which means that we have got to produce 1,500 to 1,700 tons more every year. How are we going to achieve this? For the past so many years, we have been stating that the Government must take up in right earnest the work of renovating the tanks. If only they could improve the tanks, we could get a better yield. Sri Ananda Rao, the Chief Engineer is repeatedly saying that the Government will take up improvement of tanks as Major Irrigation resources in our State have more or less been exhausted. But the work so far done is most unsatisfactory. The Government and the Chief Engineer must duly consider the suggestions made from time to time. The Mysore Government is using the bulldozers to remove the silt in tanks. I have been representing this for the last 7 years. The Mysore Government is successfully solving this.

26th March 1958] [Sri M. Muni Reddi]

Apart from this I have been suggesting various schemes such as construction of bunds to obstruct silt getting into tanks when floods rush in the winters and clearing of the silt and cementing the supply channels to regulate water-supply. If only we could improve these tanks, we would be able to tide over the food crisis to a certain extent. I even went to the extent of suggesting on the floor of the House at one time that even cranes could be used to remove the silt from the tanks. In the year 1949 the Tanks Improvement Act was passed. From that year onwards, we see that a sum of Rs. 80 to 90 lakhs has been earmarked every year. I take this opportunity to thank the Government for constituting the Electricity Board. I would request the Government to consider in all earnestness, the question of constituting an Irrigation Board. There may not be any difficulty in regard to this. There are now so many tanks under the supervision of the Irrigation Department and the Revenue Department. There are also 11–40 a.m.
major tanks under the supervision of the Public Works Department. So much so, there is lot of confusion and delay is caused for improving tanks. So in this connection, the suggestion I want to make is that we must form an Irrigation Board. This has also been suggested in one of the cut motions, cut motion No. 126. In that cut motion it has been suggested to discuss the imperative need for establishing a separate unit in the Public Works Department in every district to concentrate on the investigation and execution of Minor Irrigation Schemes and on the de-silting or repairing of the existing ones. But I suggest that we must form a Board. There are at present a host of officials in this Department. In 1950 in the composite State there were two Chief Engineers, ten Superintending Engineers, 75 Executive Engineers, 304 Assistant Engineers and 990 supervisors. So much so the number of officers and staff is also increasing in view of the various schemes at hand. If the Irrigation Department is to be consolidated and is to be well-organized, a Board as suggested must be constituted. Then the public may also have opportunities to offer valuable criticisms on the resources available and the Government also can investigate all the available resources.

The second suggestion that I want to make is with regard to the construction of bunds obstructing silt coming into the tanks. During the winter time, lot of silt is brought into the tank by floods in winter. So much so, most of the tanks become silted up. If the Government spend about 7 or 8 lakhs in this respect, they will be only giving a helping hand to the ryots.

Then there is also another suggestion, namely, cementing of canals. There is a channel or Roja kalvai nearly one mile from sluice to the tail end. If the sluice is fully opened and close all the outlets, the entire water do not reach the tail end. There is percolation of water. The Engineer who came to me, examined this and said that this is not feasible. Immediately I spoke on the

floor of this House, some friend of mine who is working in the Thungabhadra Dam wrote that they too have worked out a scheme and said that it is a very profitable one and lot of water can be saved by this kind of device.

Sir, I want to make another suggestion for the construction of what is called 'Community Well', that is a tank within a tank. In a memorandum I have sent this proposal to the Department. I have even sent it to the Secretary and to the Chief Engineer also. So far no action has been taken, nor I have been informed. So much so, I hope to submit a memorandum with a detailed note as to the suggestions I have made now. With regard to the community well, I submit that it is only exploitation of sub-soil or underground water from tank. Wherever this is possible, we must construct such 'Community Wells'. Because in tanks due to uneven rainfall there is the scarcity of water for wet crops. The ryots will have to raise only dry crops or leave the lands shallow. By spending about Rs. 40,000 we can construct such a community well in places and specially in tanks where there is good sub-soil water.

*** SRI M. A. MUTHIAH CHETTIAR :** கனம் தலைவர் அவர்களே, நீர் பாசன வசதிகள் விஷயமாக இப்பொழுது விவாதம் நடைபெற்று வருகிறது. இது சம்பந்தமாக முதன்முதலாக சென்னை அரசாங்கத்தையும், இது விஷயமாக கவனித்து வரும் இன்ஜினீயர்களையும், இந்த இலாகா சம்பந்தப்பட்ட செக்ரடேரியட்டையும் நாம் மிகவும் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். பொதுவாகக் குறிப்பிடும்போது தமிழ் நாட்டில் இனிமேல் பெரிய நீர்ப் பாசன திட்டங்களை அமைப்பதற்கு இடமே கிடையாது என்று கூட சொல்லப்படுகிறது. இருக்கக்கூடிய திட்டங்கள் எல்லாவற்றையும் எடுத்து நிறைவேற்றப்பட்டு விட்டன என்றும் சொல்லப்படுகிறது. இனிமேல் பெரிய திட்டங்கள் கிடையாது என்றும் சொல்லப்படுகிறது. நாம் சென்ற இரண்டு வருஷங்களாகப் பேசிக் கொண்டு வருகிறோம். முதல் ஐந்தாண்டு திட்டம் வந்த போது சொன்னார்கள், ப்ளானிங் கமிஷன் சிபாரிசு செய்யும் பொது திட்டங்கள் எல்லாவற்றையும் சென்னை சர்க்கார் முன் கூட்டியே யோசித்து ஆரம்பித்து இருக்கிறார்கள் என்று சொன்னார்கள். அதைக் கண்டு நாம் பெருமைப்பட வேண்டியதாக இருக்கிறது. ப்ளானிங் கமிஷன் சொல்வதற்கு முன்னதாகவே சென்னை அரசாங்கம் இந்த திட்டங்களை யெல்லாம் யோசித்து ஆரம்பித்திருப்பதைப் பார்த்தால் அது பெருமைப்படக்கூடிய விஷயம் தான். நமக்கு அப்படிப்பட்ட ஒரு பெருமை கிடைத்தது என்று கூட நாம் எண்ணிக்கொள்ளலாம். ஒரு விஷயத்தைப் பற்றி நான் ஐந்தாறு வருஷங்களாகவே சொல்லிக் கொண்டு வந்திருக்கிறேன். நமக்குக் கொடுக்கப்படும் பணம் போதாது என்றும் இன்னும் அதிகமாகக் கொடுக்கப்பட வேண்டும் என்றும் நான் ஐந்தாறு வருஷங்களாகவே சொல்லிக் கொண்டு வந்திருக்கிறேன். நமக்கு 25 கோடி, 30 கோடி, என்று தான் கொடுக்கிறார்கள். அப்படி இருக்கக்கூடாது. அத்துடன் முன்னால் ஒரு ஒன்றைச் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்றும், அந்த அளவில் நமக்கு பணம் கொடுக்க வேண்டும் என்றும், அதாவது 125 கோடி அல்லது 130 கோடி நமக்குக் கொடுக்க வேண்டும் என்றும் நான் சொல்லிக்கொண்டு வருகிறேன். மேட்டூர் அணைக்கட்டு போன்ற பெரிய அணைக்கட்டுகள் கட்ட வேண்டியதாக இல்ல விட்டாலும் சிறிய திட்டங்கள் அநேகம் இருக்கின்றன. அவைகளை எல்லாம் எடுத்து நிறைவேற்ற வேண்டியதாக இருக்கிறது என்பது என்னுடைய அபிப்பிராயம். இதைப்பற்றி பல சந்தர்ப்பங்களில் நான் சொல்லிக்கொண்டு வந்திருக்கிறேன். சிறு திட்டங்கள் என்றால்

மைனர் இரிகேஷன் போன்ற கண்மாய் மராமத்து, முதலியவைகளை அல்ல. இரண்டு அல்லது மூன்று கோடி ரூபாயில் முடிக்க கூடிய பல சிறிய திட்டங்கள் இருக்கின்றன. அவைகளை யெல்லாம் எடுத்து நடத்த வேண்டும். பல தாலூகாக்களில் இப்படிப்பட்ட சிறிய திட்டங்கள் இருக்கின்றன. பல அங்கத்தினர்கள் அவரவர்களுடைய தாலூகாவில் இருக்கக் கூடிய திட்டங்களைப்பற்றி யெல்லாம் சொல்லிக் கொண்டு வருகிறார்கள். ஆனால் சென்ற வருஷங்களில் நான் பேசும்போது அப்படிப்பட்ட தனிப்பட்ட முறையில் என்னுடைய தொகுதியைப்பற்றி சொல்வது இல்லை. பொதுவாகத்தான் சொல்லிக் கொண்டு வந்தேன். அதன் காரணமாக நான் பேசவில்லை என்று சொல்லுகிறார்கள். குறிப்பிட்டு சொல்லாததால்தான் நான் பேசவில்லை என்று சொல்லுகிறார்கள். பொதுவாகச் சொன்னால் ஒன்றும் பிசகு இல்லை. அரசாங்கத்திற்கும், செக்ரடேரியட்டுக்கும் இஞ்ஜினியர்களுக்கும் தெரியாத திட்டங்கள் நமக்கு மட்டும் தெரிந்து விட முடியாது. நாம் சொல்வது என்றால் அதையே திரும்பச் சொல்வதாகத்தான் இருக்கும். பரம்பிக்குளம் திட்டம் இருக்கிறது, அது சுமார் 36 கோடி ரூபாயில் நடக்கப் போகிறது என்று சொல்லுகிறார்கள். கேரள சர்க்காருடன் பஞ்சாயத்து செய்து அதன் மூலம் அனுகூலம் நமக்குக் கிடைக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. அதைக் கண்டு நாம் கொஞ்சம் திருப்திப்படலாம். அத்துடன் குந்தா திட்டம் இருக்கிறது. அதை பெரும்பாலும் மின்சாரத்திற்காக வைத்துக்கொள்ளலாம். ராமனாதபுரம் ராஜா அவர்கள் மந்திரியாக இருந்த ஐந்து வருஷ காலத்தில் அவரிடம் பல்வேறு சந்தர்ப்பங்களில் பல்வேறு ஸ்கிம்களைப் பற்றி சொல்லப்பட்டது. அவைகளைப்பற்றி கவனிப்பதாகச் சொன்னார்கள். பொதுவாகப் பேசும்போது தனிப்பட்டு பேசவில்லை என்று சொல்லுகிறார்கள். (மிஸ்டர் ஸ்பீக்கர் தலைமை வகித்தார்). கனம் சபாநாயகர் அவர்களே, பொதுவாக இப்படிப்பட்ட விவாதத்தில் குறிப்பிட்ட தாலூகாவைப்பற்றி பேசிப் பழக்கம் எனக்கு இல்லை. பொதுவாகத்தான் பேசி பழக்கம். பொதுவாகப் பார்க்கும் அந்தந்தப் பகுதியிலிருந்து வரக் கூடிய அங்கத்தினர்கள் தங்களுடைய பகுதியிலுள்ள திட்டங்களைப்பற்றி தான் சொல்லுவார்கள். குறிப்பிட்ட ஸ்கீம்களைப்பற்றி சொன்னால் ஒரு விதமான தவறும் இல்லை. நான் எல்லா இடங்களுக்கும் போனது கிடையாது. அதனால்தான் குறிப்பாக பேசுவது இல்லை. அவரவர்கள் தங்களுடைய தொகுதிகளில் இருப்பதைத் தெரிந்திருப்பதால் தான் அவர்கள் குறிப்பாகச் சொல்லுகிறார்கள். இலாகாவில் வேலை செய்யும் அதிகாரிகளுக்குத் தெரியாத ஸ்கீம்கள் கிடையாது. அவர்களுக்குத் தெரியாத புது ஸ்கீம்கள் ஒன்றும் இல்லை. நான் ஒன்றும் சொல்லவில்லை என்று சொல்வதால் குறிப்பாகச் சொல்ல வேண்டியதாக இருக்கிறது. உண்மையைச் சொல்லுகிறேன். உண்மையைச் சொன்னால் பிசகு ஒன்றும் இல்லை. செங்கம் தாலூகாவில் சில திட்டங்கள் இருக்கின்றன என்று சொல்லுகிறார்கள். பொதுவாக நாம் சொல்ல வேண்டியது என்னவென்றால் தமிழ் நாட்டிற்கு அதிகப்படியான பணம் வரவேண்டும் என்றுதான் நாம் சொல்ல வேண்டும். அப்படிச் சொன்னால் தான் நாம் அரசாங்கத்திற்கு பலமாக இருப்பதாகத் தோன்றும். அப்படிச் சொல்லித்தான் அதிகப்படியான பணம் வருவதற்கு வழி தேடிக்கொள்ள வேண்டும். இதற்கு முன்னதாக நிதி மந்திரி அவர்கள் பட்ஜெட் தயாரித்திருப்பதைப் பார்த்தால் 25 கோடி ரூபாய் என்றுதான் இருக்கும். எந்த ஸ்கீமை எடுத்துக் கொண்டாலும் அதற்கு 25 கோடி ரூபாய் என்று தான் இருக்கும். இந்த 25 என்பது எந்த அளவில் வந்தது என்பது புரியவில்லை. அந்த 25-க்கு முன்னால் ஒன்றைச் சேர்த்துக் கொண்டு ஏன் 125 என்று போடக்கூடாது என்று கேட்கிறேன். யு.பி.க்கு 750 பம்பு செட்டுகள் கொடுக்கிறார்கள். என்றால் நமக்கு 75 செட்டுகள் தான் கொடுக்கிறார்கள். ஒரு பூஜ்யம்தான் வித்யாசம். (சிரிப்பு). புதிய திட்டங்களைப்பற்றி இங்கே சொல்ல வேண்டியது இல்லை. சாதாரணமாக செக்ரடேரியட்டுக்கோ, அல்லது இஞ்ஜினியருக்கோ, மின்சார போர்டு சேர்மனுக்கோ, சீப் இஞ்ஜினியருக்கோ ஒரு கடிதம் எழுதினால் போதும். அதை வைத்துக்கொண்டே அவர்கள்

நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளுவார்கள். இங்கே பேசுவதால் மட்டும் கவனம் எடுத்துக் கொள்ளுவார்கள் என்பது அல்ல. இங்கே பேசும் போதெல்லாம் மந்திரி இருப்பார் என்பது இல்லை. பட்ஜெட் பொது விவாதம் நடக்கும்போது நிதி மந்திரிதான் இருப்பார். இப்படிப்பட்ட டிமாண்ட் சம்பந்தப்பட்ட விவாதம் நடக்கும்போது அது சம்பந்தப்பட்ட மந்திரிதான் இருப்பார். இதைப்பற்றி எவ்வளவோ தடவை இந்த சபையில் சொல்லியும், அதாவது எல்லா மந்திரிகளும் இருக்க வெண்டும் என்று எவ்வளவோ சொல்லியிருக்கிறோம். அதைப்பற்றி எந்தவிதமான நடவடிக்கையும் எடுத்துக் கொண்டதாகத் தெரியவில்லை. டில்லியில்கூட இப்படிப்பட்ட புகார் இருப்பதாகத் தெரிய வருகிறது. எந்த விவாதம் நடக்கிறதோ அது சம்பந்தப்பட்ட மந்திரிதான் இருக்கிறார். பொது விவாதத்தில் கடைசியாக பேசுகிறவருக்கு பதில் சொல்லிவிட்டு உட்கார்ந்துகொண்டு விடுவார். கடைசியில் மங்களம் பாடுவதுபோல் இருக்குமே தவிர எல்லாவற்றிற்கும் பதில் சொல்வதாக இருக்காது. இதையெல்லாம் மந்திரிகள் கவனத்தில் எடுத்துக்கொள்ள வேண்டும். இப்பொழுது மராமத்து இலாகா சம்பந்தமாக கனம் கக்கன் இருக்கிறார் அவர் பதில் சொல்லப்போகிறார். அவருக்கு எல்லாவற்றிற்கும் பதில் சொல்ல முடியாது. ஆகவே நாம் சொல்வதெல்லாம் அப்படியே நோட்டில் இருக்கும். பொது விவாதத்தில் நாம் சிரமப்பட்டு டயம் வாங்கி பேசும்போது சில திட்டங்களைப்பற்றி சொன்னால் அவைகள் எல்லாம் அப்படியேதான் இருக்கும். அப்படி இல்லாமல் மந்திரிகள் அதை கவனிக்கிறேன என்று சொன்னாலும் பரவாயில்லை. இங்கு பேசுவதையெல்லாம் சுருக்கெழுத்தில் எடுத்துக்கொண்டு அதை அந்தந்த டிபார்ட்மெண்டுகளுக்கு அனுப்புகிறார்கள். அங்கே அவைகளின் பேரில் நடவடிக்கை எடுத்துக்கொள்ளுவார்கள். நாம் சொல்லும் யோசனைகளையெல்லாம் யோசிக்கிறோம் அல்லது நடவடிக்கை எடுத்துக்கொள்ளுகிறோம் என்று சொன்னால் கூட போதும். நாம் சொல்வதெல்லாம் டிபார்ட்மெண்டில் இருக்கும். பைல் ஆறு மாதம் அல்லது ஒரு வருஷத்தில் பைசல் செய்யட்டும் அதனால் பரவாய் இல்லை. உண்டு அல்லது இல்லை என்றுவது பதில் சொல்ல வேண்டும். ஒரு விஷயத்தை 5, 6 வருஷங்களாக சொல்லிக் கொண்டு வருகிறேன். ராமனாதபுரம் ராஜா அவர்கள் மந்திரியாக இருக்கும் பொழுதே சொல்லியிருக்கிறேன். இப்பொழுதுதாவது அதை மந்திரி அவர்கள் கவனிப்பார்கள் என்று நினைக்கிறேன். இது டிபார்ட்டுமெண்டுக்கு தெரிந்த விஷயம் தான். மதுரையிலிருந்து திருச்சிக்குப் போகும் வழியிலே கொட்டாம்பட்டிக்கு பக்கத்தில் ஒரு அணை கட்டவேண்டுமென்று சொன்னேன். அதற்கு $1\frac{1}{2}$ கோடி அல்லது 2 கோடி ரூபாய் செலவாகும். அப்பொழுது "காஜ்" எடுக்க முடியாது, மழை இல்லை என்று சொன்னார்கள். இப்பொழுது 5, 6 வருஷமாக மழை பெய்திருக்கிறது. இந்த ஸ்கீம் நிறைவேற்றப்பட்டால் 20,000 ஏகர்களுக்கு சௌகரியமாக இருக்கும். இதை ராமனாதபுரம் ராஜா அவர்கள் மந்திரியாக இருக்கும் பொழுதே கவனிப்பதாக உறுதி சொன்னார்கள். வரப்போகிற வருஷத்தில் இதற்காக ஒரு லட்ச ரூபாயாவது ஒதுக்கி "இன்வெஸ்டிகேஷன்" செய்யட்டும்.

இன்னும் ஒரு பெரிய விஷயம். குமாரசுவாமி ராஜா அவர்களுக்குத் தெரியும். ராஜபாளையத்திற்கு மேற்கே போய் விழும் தண்ணீரை அணை போட்டு ஒரு டன்னல் கட்டி இந்தப் பக்கம் திருப்ப வேண்டுமென்று சொன்னேன். வைகையில் தண்ணீர் ஜாஸ்தியாக இல்லை. அதனால் அதை அந்தப்பக்கம் கொண்டு போவதற்கு வசதி இல்லை. திருமங்கலம் வரையில் தான் கொண்டு போயிருக்கிறார்கள். இந்த ஸ்கீமை நிறைவேற்றினால், ராமனாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்களுக்கு உதவியாக இருக்கும். "டீடைல்ஸ்" நமக்குத் தெரிவதில்லை. இந்த ஸ்கீம்களையெல்லாம் கவனித்து மந்திரி அவர்கள் ஒரு அறிக்கை விடவேண்டும். அல்லது இவைகளையெல்லாம் கவனித்து ரிஸல்டு என்ன ஆயிற்று என்பதை இன்னொரு சந்தர்ப்பத்தில் பேசும்போதாவது மந்திரி அவர்கள் சொல்ல வேண்டும். இம்மாதிரி திட்டங்களையெல்லாம் நிறைவேற்றினால் எவ்

வளவோ சௌகரியம் ஏற்படும். இன்னும் சொல்லுவது என்றால் எத்தனையோ ஸ்கீம்கள் இருக்கின்றன. ரூபாய் ஒரு கோடி, இரண்டு கோடி, மூன்று கோடிக்கு ஸ்கீம்கள் போட்டு மொத்தமாக கூட்டிப்பார்த்தால் ரூபாய் 40, 50 கோடி ஆகிவிடுகிறது என்று சொல்லப்படுகிறது. டெல்லியிலிருந்து இன்னும் அதிகமாக பணம் கேட்டு வாங்கவேண்டும். டெல்லியிலும் பணத்திற்கு முடையாக இருக்கிறது, அந்த கவர்ன்மெண்ட்டை "எம்பராஸ்" செய்யவேண்டாம் என்று நினைக்கக்கூடாது. அம்மாதிரி மற்ற ராஜ்யங்களில் இருப்பதாக தோன்றவில்லை. எனக்கு வருகிற தகவல்படி அவர்கள் அதிகமாக சத்தம் போட்டு பணம் வாங்குகிறார்கள். ஆகவே, நாமும் அதிகமாக சத்தம் போட்டு அதிக பணம் வாங்கவேண்டும். நாம் சண்டைபோட்டு டெல்லியிலிருந்து அதிகமாக பணம் வாங்கவேண்டுமென்பதுதான் என்னுடைய அபிப்பிராயம்.

அடுத்தப்படியாக காவேரி ஸ்கீம் பற்றி சொல்ல விரும்புகிறேன். 1922–23-ல் ஸ்ரீ ஸி. பி. ராமசுவாமி அய்யர் அவர்கள் மந்திரியாக இருந்த காலத்தில் காவேரி தண்ணீரை புதுக்கோட்டை சமஸ்தானத்திற்கு கொண்டு வருவதற்கு ஏற்பாடாகியது. திருச்சிக்கு 6-வது மைல் என்ஜினியர் தங்குவதற்காக முஸாபரி பங்களா கூட கட்டப்பட்டுவிட்டது. ஆனால் அந்தக்காலத்தில் இருந்தவர்கள் புதுக்கோட்டையில் வாட்டர் ரேட் கூடிவிடும் என்று ஆட்சேபித்து அதை நிறுத்தி விட்டார்கள். கலிபுல்லா இருக்கும்பொழுது நான் 3 கோடி ரூபாய் கடன் ஏற்பாடு செய்து கொடுக்கிறேன் என்று சொன்னேன். அப்பொழுது அட்மினிஸ்டிரேடராக இருந்த பாடன்ஹாம் அவர்கள் தனக்கு வயது ஆகிவிட்டது, செய்ய முடியாது என்று சொல்லிவிட்டார். குளித்தலைக்கு அருகில் திருச்சி பரமசிவன் பிள்ளை ஒரு கெனால் போடுவதற்கு ஏற்பாடு செய்தார். காவேரியில் 4 வருஷங்களில் ஒரு வருஷம்தான் தண்ணீர் இல்லாமல் இருக்கிறது. ஆகவே 4 வருஷங்களில் 3 வருஷங்களிலாவது தண்ணீர் கிடைக்கும். திருச்சியிலிருந்து புதுக்கோட்டை வழியாக தொண்டி வரையில் ஒரு கெனால் கட்டவேண்டும். கொட்டாம்பட்டியிலும் ஒரு கெனால் கட்டவேண்டும். அது மந்திரி அவர்கள் இருக்கும் ஊருக்கு பக்கத்தில் இருக்கிறது. இம்மாதிரி ஸ்கீம்களையெல்லாம் இன்வெஸ்டிகேட் செய்வதற்காவது முதலில் ஏற்பாடு செய்யவேண்டும். ரூபாய் 2, 3 கோடிக்கு ஸ்கீம்கள் போட்டு மொத்தத்தில் ரூபாய் 50 கோடிக்கு ஆகிவிட்டது என்று சொல்லிவிட்டால் போதாது. இன்னும் அதிகமான ஸ்கீம்கள் போடவேண்டும். நம் நாட்டில் மின்சார வசதி அதிகமாக செய்யப்பட்டிருக்கிறது. அப்படி செய்தும் புண்ணியம் இல்லை. மின்சார வசதி. . . .

**MR. SPEAKER** : காலையில் அங்கத்தினர்கள் தயவுசெய்து இந்த விவாதத்தில் 10 நிமிஷங்களுக்கு மேல் பேசக்கூடாது என்று சொன்னேன். காலையில் இங்கே இல்லாதபடியால் அங்கத்தினர் அவர்களுக்கு அது தெரியவில்லை என்று நினைக்கிறேன். ஆகவே, அவர் சீக்கிரம் பேச்சை முடித்துக்கொள்ள வேண்டுமென்று சொல்லுகிறேன்.

**SRI M. A. MUTHIAH CHETTIAR** : சபாநாயகருக்கு வந்தனோபசாரம் சொல்லவேண்டியதுதான் பாக்கி. இதோ முடித்துக்கொள்ளுகிறேன்.

**MR. SPEAKER** : வந்தனோபசாரம் சொல்லாவிட்டால் பரவாயில்லை.

**SRI M. A. MUTHIAH CHETTIAR** : நான் மீண்டும் சொல்ல விரும்புவது என்னவென்றால், அங்கத்தினர்கள் எல்லோரும் மந்திரிகளுக்கு உதவி புரிந்து அதிகமான பணத்தை டெல்லியிலிருந்து கொண்டு வருவதற்கு முயற்சி செய்யவேண்டும். அப்படி அதிகமான பணத்தை நாம் பெறமுடிந்தால், நம்முடைய என்ஜினீயர்களின் திறமையைக் கொண்டு பல திட்டங்களை வெற்றிகரமாக நிறைவேற்றுவதற்கு உபயோகப்படுத்திக்கொள்ளலாம் என்பதில் சந்தேகம் இல்லை என்பதை தெரிவித்துக் கொள்ளுகிறேன். வணக்கம்.

**MR. SPEAKER :** காலையில் கனம் அமைச்சர் அவர்கள் பதில் அளிப்பதற்கு ½ மணி நேரம் போதும் என்று சொன்னார்கள். இப்பொழுது என்னிடம் 1 மணி நேரம் வேண்டும் என்று சொல்லியிருக்கிறார். ஆகவே, இன்னும் ஒரு அங்கத்தினருக்கு பேசுவதற்கு சந்தர்ப்பம் கொடுத்துவிட்டு, அதற்கு பிற்பாடு கட்சித் தலைவர்களை கூப்பிடுகிறேன்.

**SRI K. G. PALANISWAMY GOUNDER :** கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் நீர்ப்பாசன மான்யத்தை நான் முழுமனதுடன் ஆதரிக்கிறேன். இந்த மான்யத்திலே பரம்பிகுளம் திட்டத்தை நிறைவேற்றுவதற்காக சொல்லப்பட்டிருப்பதை நான் முழு மனதுடன் ஆதரித்து, என்னுடைய தொகுதி எப்படி இருக்கிறது என்பதைப் பற்றி மாத்திரம் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். எங்கள் தாராபுரம் தாலுகாவை பொறுத்தமட்டில், காங்கயம் பிரதேசம் பரம்பரையான பஞ்சப் பிரதேசம். காங்கயம் வட்டாரத்தைப் பற்றி நமது அமைச்சர் அவர்களுக்குத் தெரியும். கோயம்புத்தூர் கலெக்டரிடமிருந்து ரிபோர்டு வரவழைத்தால் நன்கு தெரியும். எவ்வளவு காலம் இந்தப் பிரதேசத்திலே ரெவின்யூ கலெக்ஷன் செய்யாமல் நிறுத்தி வைத்திருக்கிறார்கள், எவ்வளவு தடவைகள் "பாமின் ரிலீப்" செய்திருக்கிறார்கள், எவ்வளவு பணம் அதற்காக செலவழிக்கப்பட்டிருக்கிறது என்பதைப் பார்த்தால் ரிபோர்டிலிருந்து தெரியும். காங்கயம்
11–50 a.m. வட்டாரத்திலுள்ள மக்கள் பரம்பிகுளத் திட்டம் தங்களுக்கு ஒரு வரப்பிரசாதம் என்று நினைக்கிறார்கள். இந்தத் தொகுதி மக்கள் பரம்பிக்குளத் திட்டம் ஒன்று தான் தங்களுக்கு பிரயோஜனப்படும், அந்தத் திட்டம் நிறைவேற்றப்படாவிட்டால், தாங்கள் வாழமுடியாது என்ற உறுதியுடன் இருக்கிறார்கள். இந்தத் திட்டத்தை பஞ்சப் பிரதேசமாக இருக்கக்கூடிய எங்கள் தாலுகாவிற்கு முழுக்க முழுக்க பிரயோஜனப்படுத்தவேண்டும். காங்கயம் பிரதேசத்தில் வெள்ளை கோயில், கொடுங்குழி முதலிய இடங்களிலுள்ள மக்கள் படும் அல்லல் சொல்ல முடியாது. பத்து வருஷ காலமாக இந்த இடங்கள் பஞ்சப் பிரதேசமாக இருந்துகொண்டுவருகிறது. பல தடவைகள் இந்தப் பிரதேசத்தில் அமைச்சர் அவர்கள் லோன் வசூல் செய்வதையும், கிஸ்தி வசூல் செய்வதையும் ஒத்திவைத்திருக்கிறார்கள். இதை இப்பொழுது கண்டிப்பாக வசூல் செய்யும்பொழுது, விவசாயிகள் படும் கஷ்டம் சொல்ல முடியாது. அந்த நிலைமையில் இருக்கும்பொழுது மக்களுக்கு நன்மை பயக்கக்கூடிய பரம்பிக்குளத் திட்டத்தை நமது சர்க்கார் அவசியம் நிறைவேற்றவேண்டும். சீப் என்ஜினியர் அவர்களும் இதை நன்றாக ஆராய்ந்து அமைச்சர் அவர்களுக்கு ஆதரவு கொடுக்க வேண்டுமென்று மன்றாடி கேட்டுக் கொள்ளுகிறேன்.

இந்த சந்தர்ப்பத்தில் சிறு நீர்ப்பாசன திட்டங்களைப் பற்றி சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். எங்கள் தொகுதியில் சிறு சிறு கரைகள், ஓடைகள் இருக்கின்றன. ஒரே ஓடைக்கு பல பெயர்கள் இருக்கும். நிழலை வட்டமலை, உத்தமபாளையம் இப்படி பல பெயர்கள் இருக்கும். இதில் 10, 12 அயக்கட்டுகள் இருக்கின்றன. அவைகளெல்லாம் தூர்ந்துபோய் இருக்கின்றன. சிறு நீர்ப்பாசன திட்டத்தின் கீழ் இவைகளையெல்லாம் செப்பனிட வேண்டுமென்று வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறேன். இதைப் பரிசீலித்து இந்தத் திட்டத்தை நிறைவேற்றினால் ஆயிரக்கணக்கான கிணறுகளிலிருந்து பாசன வசதிக்கு அங்கே வகை செய்யலாம் இந்தத் திட்டத்தையும் எடுத்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அங்கே கிணறுகள் வெட்டுவதற்கு சர்க்கார் 500 ரூபாய், 700 ரூபாய் மானியம் கொடுத்திருக்கிறார்கள். விவசாயிகள் ஏராளமான பேர் மானியம் வாங்கி கிணறுகள் வெட்டினார்கள். ஆனால், 40–50 அடி வெட்டியும் அங்கே தண்ணீரைக் காணமுடியவில்லை. அந்தப் பணத்தையெல்லாம் கடனாக பாவித்து திரும்பப்பெற வேண்டுமென்று சர்க்கார் உத்திரவிட்டிருக்கிறார்கள். இதுபற்றி கலெக்டரிடமும் அமைச்சரிடமும் நான் சொல்லியிருக்கிறேன். எங்கள் பகுதி பஞ்சப் பிரதேசமாக இருப்ப

தால் அந்தப் பணத்தையெல்லாம் மானியமாகவே பாவிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். தாராபுரத்துடன் இணைந்திருக்கும் பழனி தாலூகாவும் நிரந்தர பஞ்சப் பிரதேசமாக இருப்பதாக கனம் அங்கத்தினர் ஸ்ரீ லக்ஷ்மிபதிராஜ் சொன்னார். எங்கள் தாலூகாவுடன் இணைந்திருக்கும் தாலூக்காக்களுக்கும் கஷ்டங்கள் இருக்கின்றன. பரம்பிக்குளத் தண்ணீரை பூரணமாக நாம் பயன்படுத்தக்கூடியவகையில் திட்டத்தை நிறைவேற்ற வேண்டுமென்று மறுபடியும் மன்றாடிக் கேட்டுக்கொள்கிறேன்.

கீழ் பவானி ஆயக்கட்டிலிருந்து எங்கள் தாலூகாவில் 20,000 எக்கர் வரையில் தண்ணீர் பாய்கிறது. அங்கே நிறையத் தண்ணீர் கிடைப்பதில்லை. ஆயக்கட்டுதாரர்களின் கிணறுகளிலிருந்து தண்ணீர் பாய்ச்சலாம் என்றால், அதற்கும் மின்சார வசதி கிடைப்பதில்லை. நாங்கள் வாய்க்காலின் கடைக் கோடியில் இருக்கிறோம். அங்கே சில கிராமங்களுக்குத் தான் மின்சாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. பாக்கியுள்ள கிராமங்களுக்கும் மின்சாரம் கொடுக்கவேண்டும். 200 கிணறுகளுக்கு மின்சாரம் கொடுத்தார்கள். அப்போது கோபி தாலூகாவிற்குக் கொடுக்கப்பட்டது. அப்போது தாராபுரத்தில் ஒரு கிணற்றுக்குக்கூடக் கொடுக்கப்படவில்லை. கீழ் பவானி ஆயக்கட்டிலுள்ள எல்லா கிணறுகளுக்கும் மின்சாரம் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். பஞ்சாப் பிரதேசமாயுள்ள எங்கள் தாலூக்காவுக்கு பரம்பிக்குளம் தண்ணீரை நாம் பூரணமாகப் பயன்படுத்தக்கூடியவகையில் பரம்பிக்குளத் திட்டத்தை நிறைவேற்ற வேண்டுமென்று சர்க்காரை மறுபடியும் கேட்டுக்கொள்ளுகிறேன். பேசுவதற்கு எனக்கு சந்தர்ப்பமளித்த தங்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

**Sri V. K. RAMASWAMY MUDALIYAR :** Sir, to-day it was unanimously agreed that all members would be given only ten minutes' time to speak on the demand and the Minister would take only 45 minutes to reply to the debate. But now I find the Hon. Minister wants an hour to reply to the debate. This would considerably cut short the time available to Members on both sides of the House who are anxious to speak on the demand. I consulted the Hon. Minister and he has no objection to the House sitting till 2 o'clock. I suggest that if the Hon. Speaker has no objection we can sit till 2 o'clock.

**The Hon. Sri P. KAKKAN :** எதிர்க்கட்சி தலைவர்கள் அவ்வாறு கேட்பதால் நான் ஒத்துக்கொள்கிறேன்.

**Mr. SPEAKER :** ஆறு கனம் அங்கத்தினர்கள் பேச வேண்டுமென்று சொல்கிறார்கள். அந்த ஆறு கனம் அங்கத்தினர்களும் ஒவ்வொருவரும் 5 நிமிஷங்கள் தான் பேசமுடியும். அதற்குமேல் பேசவேண்டுமானால், ஒரே ஒரு வழி இருக்கிறது. அதாவது, கடிகாரத்தை நிறுத்திவிட்டால் எல்லோரும் எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் பேசலாம். (சிரிப்பு). ஆறு கனம் அங்ககத்தினர்களை பேச அனுமதிக்கிறேன். அவர்கள் ஒவ்வொருவரும் 5 நிமிஷங்களுக்குமேல் எடுத்துக்கொள்ளக்கூடாது. I will give five minutes to each Speaker and call six more hon. Members to speak one from the D.M.K. one from among the Independents and four from the Congress benches.

**Sri T. IRUSAPPAN :** கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் கோரும் நீர்ப்பாசன மானியத்திற்குக் கொடுக்கப்பட்டிருக்கும் வெட்டுப் பிரேரணையை ஆதரிக்கிறேன். என் தொகுதி நீர்வளம் நிலவளம் நிறைந்த தொகுதி. என் மாவட்டம் சேலம். அந்த மாவட்டத்தில் மேட்டூர் நதிகளும் எரிகளும் இருந்தாலும் அவைகளால் அந்த மாவட்டம் பயனடைய முடியவில்லை. எங்களைப்பொறுத்தவரை, அந்த மாவட்ட நதி

கள் "கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை" என்று சொல்வதற்குரிய நிலையில் இருக்கின்றன. அங்கே நிறைவேற்றுவதற்கேற்ற சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களையாவது சீக்கிரம் நிறைவேற்றி அங்குள்ள விவசாய மக்களுக்கு உதவ வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். என் வட்டாரமாகிய ஆத்தூர் தாலூகாவில் விவசாயத்திற்குரிய நிலங்கள் ஏராளமாக இருக்கின்றன. இருந்தாலும், அது வறண்ட பிரதேசமாக இருக்கிறது. ஏனென்றால், அங்கே பல ஏரிகள் 15 ஆண்டுகளாக செப்பனிடப்படாமல் இருக்கின்றன. சீரியம்பாடி ஈச்சம்பாடி ஏரிகளுக்கு வரும் வாய்க்கால் பாழடைந்திருக்கின்றது. இதுவரையிலும் அது செப்பனிடப்படவில்லை. அந்த இரு ஏரிகளையும் சீர்திருத்தினால் 70 எக்கர் நிலங்கள் நல்ல பாசன வசதி பெறும். மேலும், பங்கம்பாடு, சங்கமசமுத்திரம் வாய்க்கால்கள் தூந்துபோயிருக்கின்றன. அதன் காரணமாக பல விவசாயிகள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். அவைகள் செப்பனிடப்படவில்லை. மேலும் இந்த ஆண்டு மழை இல்லாததால் அங்குள்ள விவசாயிகள் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். இப்போது அவர்கள் சர்க்காருக்கு செலுத்த வேண்டிய வரியைக்கூட செலுத்தமுடியாமல் இருக்கிறார்கள். இந்தத் தடவை நல்ல மகசூல்கள் கிடைக்கவில்லை. எல்லாம் காய்ந்துவிட்டது. மேலும், தலைவாசல் பெரி ஏரி கிராமத்தில் ஏரிக்கு வரும் வாய்க்கால் உடைந்துபோயிருக்கிறது. இதைச் செப்பனிடவேண்டுமென்று சென்ற ஆண்டு கலெக்டரைப் பார்த்து விண்ணப்பம் கொடுத்தோம். அது இன்னும் செப்பனிடப்படவில்லை. அதையும் செப்பனிட வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். பக்கத்திலுள்ள புத்தூர், வேப்பநத்தம் என்ற ஊர்களிலிருக்கும் ஏரிகளும் தூந்துபோயிருக்கின்றன. அதனால் அங்குள்ள விவசாயிகள் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். அதையும் செப்பனிட வேண்டும். சிறு நீர்ப்பாசனத் திட்டங்களைப் பொறுத்தவரையில் அங்கே உடனடியாக புதுத் திட்டங்களை ஆரம்பிக்கமுடியாவிட்டாலும், உடனடியாக பழைய ஏரிகளையாவது ஆழப்படுத்த வேண்டுமென்றும், பாழடைந்த வாய்க்கால்களைச் செப்பனிட வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

SRI M. ALAGIRISAMY: கனம் சபாநாயகர் அவர்களே, மதிப்பிற்குரிய மராமத்து மந்திரி அவர்கள் பிரேரேபித்திருக்கும் நீர்ப்பாசன மானிய கோரிக்கையைக் குறித்து ஒரு சில கருத்துக்களை வெளியிட விரும்புகிறேன். நமது தலைவர் நேருஜீ உணவுப் பொருள் உற்பத்தியைப்பற்றிப் பேசும்போது, உணவுப் பிரச்னைக்கு நாம் முடிவுகாணவிட்டால் உணவுப் பொருள் உற்பத்தியை போதிய அளவு பெருக்காவிட்டால்—நம் திட்டங்கள் எல்லாம் உயிரற்ற திட்டங்களாகத்தான் இருக்கும் என்று கூறியிருக்கிறார். இதை மனதில் வைத்துக்கொண்டு தான் அரசாங்கத்தார் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தை வகுத்தார்கள். முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் உணவுப்பொருள் உற்பத்திப் பெருக்கத்திற்கு முக்கியதுவமளித்து, பல பெரிய நீர்ப்பாசனத் திட்டங்களைக் கட்டிக்கொடுத்தார்கள். இரண்டாவது திட்டத்திலும்கூட நீர்ப்பாசனத் திட்டங்களுக்கு முக்கியத்துவமளித்திருக்கிறார்கள். நம் ராஜ்யத்தைப் பொறுத்தவரையில், முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் பெரிய திட்டங்கள் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. அதை யாரும் மறுக்கமாட்டார்கள். நம் நாடு ஒன்றுபட்ட நாடு. நீர்ப்பாசன திட்டங்களைப் பொறுத்தவரையில், நம் நாடு ஒன்றாகத் தான் இருக்க வேண்டுமென்று கூறுபவர்கள் மத்திய அரசாங்கத்தின் கொள்கைக்கும் ராஜ்ய அரசாங்கத்தின் கொள்கைக்கும் இடையே எந்த விதமான முரண்பாட்டையும் காணமாட்டார்கள். திராவிட நாடாகவோ தமிழ் நாடாகவோ இந்த ராஜ்யம் பிரியவேண்டுமென்ற கொள்கையைக் கொண்டவர்கள் மத்திய அரசாங்கத்தின் கொள்கைக்கும் ராஜ்ய அரசாங்கத்தின் கொள்கைக்கும் இடையே முரண்பாடு காணத்தான் செய்வார்கள். ஆகவே, இந்த முரண்பாடே அரசியல் கட்சிகளின் கொள்கைகளின் அடிப்படையில் தான் எழுகிறது என்பதை கனம் அங்கத்தினர்கள் உணர்வார்கள் என்று நான் நம்புகிறேன்.

எங்களைப் பொறுத்தமட்டிலும், நிர்வாகத்தில் இருக்கக்கூடியவர்களைப் பொறுத்தமட்டிலும், மத்திய சர்க்காருடைய கொள்கைக்கும் இந்த ராஜ்ய சர்க்காருடைய கொள்கைக்கும் எந்தவிதமான முரண்பாட்டையும் நாங்கள் காணவில்லை. இந்தியா முழுவதையும் ஒன்றாகப் பார்த்து அந்த அடிப் படையின் கீழ் தான் கொள்கைகள் வகுப்பது என்ற முறையில் வகுத்து வேலைத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டு வருகின்றன. 12-10 p.m.

நம்முடைய ராஜ்யத்தைப் பொறுத்தமட்டிலும் நீர்ப்பாசனத் திட்டத் திற்கு முதலிடம் அளித்து வருகிறார்கள் என்பதை எல்லா அங்கத்தினர் களும் உணருவார்கள். இன்னும் நடக்கவேண்டிய வேலைகள் பல இருக் கின்றன என்று அனேக அங்கத்தினர்கள் எடுத்துக்கூறுவதிலிருந்து இந்த உணவு உற்பத்திப் பெருக்கத்திலே கனம் அங்கத்தினர்கள் எல்லோ ரும் ஒன்றுபட்ட கருத்துடையவர்களாக இருக்கிறார்கள். உணவு உற்பத்தி இந்த நாட்டிலே பெருகினால்தான் மற்ற திட்டங்களெல்லாம் சரிவர நிறை வேற்றப்பட முடியும் என்ற தத்துவத்தை எல்லா அங்கத்தினர்களும் உணர்ந்திருக்கிறார்கள் என்பதைப் பார்க்க நாங்கள் மிகவும் மகிழ்ச்சி அடைகிறோம்.

குறிப்பாக மதுரை மாவட்டத்தில் என்னுடைய தொகுதியாகிய கொடைக் கானல் பகுதியிலே பல திட்டங்கள் நிறைவேற்றப்பட இருக்கின்றன. மந்திரி அவர்கள் கொடுத்திருக்கும் அறிக்கையில், மதுரை மாவட்டத்தில் சத்தையாறு, மஞ்சளாறு, கொடவனாறு திட்டங்களை நிறைவேற்றுவதற் குரிய மதிப்பீட்டைத் தயாரிக்குமாறு நீர்ப்பாசன தலைமை இன்ஜினீர் அவர்கள் கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறார் என்று குறிப்பிடப்பட்டிருக் கிறது. அதற்காக அந்த வட்டார மக்களின் சார்பாக நான் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். குறிப்பாக, மஞ்சளாறு அணைக்கட்டுத் திட்டத்தைப்பற்றி அந்தப் பிராந்தியத்திலுள்ள மக்கள் பல வருஷங்க ளாகக் கிளர்ச்சி செய்து வருகிறார்கள். அந்தத் திட்டத்திற்கு மதிப்பீடு தயார் செய்வதோடு நின்றுவிடாமல், 1958-59 இலே அதை எடுத்து வேலையைத் துவக்குவார்களானால் அந்தப் பகுதியிலுள்ள மக்கள் மேலும் நன்றிசெலுத்தக் கடமைப்பட்டிருப்பார்கள் என்று கூறிக்கொண்டு நான் என் வார்த்தையை முடித்துக்கொள்ளுகின்றேன்.

**Sri A. R. SUBBIAH MUDALIAR** : தலைவர் அவர்களே, மராமத்தி லாகா மந்திரி அவர்கள் கொண்டுவந்த மானியக் கோரிக்கையை ஆதரித்து எனக்குள்ள குறைகளையும் சொல்லப் பிரியப்படுகிறேன்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஐந்து திட்டங்கள் சேர்க்கப் பட்டிருப்பதாக சொல்லப்படுகிறது. அதில் எங்களுடைய தொகுதியிலுள்ள கீரியாறு திட்டத்தைப்பற்றி ஒரு வார்த்தையும் சொல்லப்படவில்லை. 1954-ல் இராமநாதபுரம் ராஜா அவர்கள் அமைச்சராக இருந்தபோதே அவருடைய உரையில் வாக்குக் கொடுத்திருக்கிறார். அதாவது, "The Giriyar Project was one of the subjects then dealt with. It is very likely that it might be included in the Second Five-Year Plan at least" என்று சொல்லியிருக்கிறார்.

இப்பொழுது மராமத்து அமைச்சராக இருப்பவரும் அந்தக் கீரியாறு திட்டத்தைப்பற்றி 1957-ம் வருஷம் ஜூலை மாதம் 12-ந்தேதி-ல் சட்ட சபையில் உறை நிகழ்த்தும்பொழுது ஸ்ரீமான் சுப்பையா முதலியார் கீரி யாறு திட்டத்தைப்பற்றி சொன்னார். பம்பையாறு திட்டம் கவனிக்கப்பட்டு வருகிறது ; இந்தத் திட்டம் இதர மாகாணத்தவருடன் கலந்து ஆலோசிக்க வேண்டிய விஷயம். அப்படி ஆலோசித்து ஒரு முடிவுக்கு வந்துவிட்டால் மற்ற திட்டத்திற்கு அவசியமில்லை. கனம் நிதி அமைச்சர் அவர்கள் இந்த திட்டங் களைப் பார்த்து பேச்சுவார்த்தை நடத்தப்போகிறார்கள் என்று சொல்லி யிருக்கிறார். அவர் இப்படிச்சொல்லி வருஷம் ஒன்று ஆய்விட்டது. உபகேள்வி கேட்டபோது கூட, கீரியாறு திட்டத்தைப்பற்றி ஒரு விதமான முடிவும் சொல்லவில்லை. பரம்பிகுளம் திட்டம் பற்றி முடிவு செய்ததற்குப் பிறகு

தான் சீரியாறு திட்டத்தைப்பற்றி பேசவேண்டும் என்று சொல்லப்படுகிறது. இப்படி எங்களுக்கு **step-motherly treatment** கொடுப்பதை சர்க்காரிடத்தில் நாங்கள் ரொம்ப வருத்தத்துடன் சொல்ல வேண்டியிருக்கிறது. ஒரே இடத்தில்போய் பேச்சு வார்த்தை நடத்தும்போது எல்லாத் திட்டங் களைப் பற்றியும் பேசக்கூடாதா ? ஒரு திட்டத்தைப்பற்றி மட்டும் பேசி, மற்ற திட்டங்களைப்பற்றி பின்னல் பேசலாம் என்று சொல்வது ரொம்ப வருந்தத் தக்கதாக இருக்கிறது. நாங்கள் பத்து வருஷங்காளாக கஷ்டப்படுகிறோம். பலவிதமாக முறையிடுகிறோம். சீரியாறு திட்டம் வேண்டுமென்று அங் குள்ள மக்கள் சொல்கிறார்கள். 36 ஆயிரம் ரூபாய் செலவு செய்து இன்வெஸ் டிகேஷன் செய்யப்பட்ட திட்டத்தைப்பற்றி ஏன் கேரள சர்க்காரிடம் எடுத்துச் சொல்லவில்லை ? அந்தப் பகுதி மக்களுடைய கோரிக்கையை அவர்களிடம் தெரிவித்தால் என்ன ? மக்களுடைய கோரிக்கையை நாங்கள் இந்தச் சபையில் எடுத்துச் சொன்னதன் பயன் என்ன ? நாங்கள் அப்பகுதி மக்க ளுக்கு என்ன சொல்வது ? மந்திரி அவர்களுடைய போக்கு இப்படி இருக்கிறது ? முதலில் பரம்பிகுளம் திட்டத்தை முடித்து விட்டு மற்றதைப் பற்றி பிறகு பேசலாம் என்று சொல்கிறார்கள் என்பதை நோக்கும் போது எங்களுக்கு உண்மையிலேயே **step-motherly treatment** தான் அளிக்கப்படுகிறது என்று நான் மீண்டும் சொல்லி வேதனைப்படுகிறேன்.

**MR. SPEAKER :** ரொம்பக் கோபமாகப் பேசுகிறீர்களே ! என்?

**SRI A. R. SUBBIAH MUDALIAR :** எனக்குக் கொடுத்திருக்கும் நேரம் ஐந்து நிமிஷமே ஆதலால், என்னுடைய வேகத்தை அதன் மூலமாகத் தெரியப்படுத்த வேண்டியிருக்கிறது. என் தொகுதி மக்களுக்கு நான் பதில் சொல்லக் கடமைப்பட்டவன். அப்படியிருக்கும்போது நான் உருக்கமாக மன்றாடிக் கேட்டும் மந்திரி அவர்கள் வாக்குக் கொடுத்தும், உப கேள்வி கேட்கும்போது அதைப்பற்றிச் சொல்லும் பதில் ரொம்ப **step-motherly treatment** ஆக இருக்கிறது. இன்வெஸ்டிகேட் செய்யப்பட்ட திட்டத்தைப்பற்றி தயவு செய்து கேரள அரசாங்கத்துடன் பேச்சு வார்த்தை ஆரம்பிக்கும்படி தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

நீர்ப்பாசன பிரதம இன்ஜினீர்களிடம் கேட்கும்போதுகூட, " திட்டம் தயாராக இருக்கிறது ; நாங்கள் நடத்தத் தயாராக இருக்கிறோம் ; சர்க்கார் எடுத்து நடத்தச்சொன்னல் நாங்கள் நடத்த முடியும் ; அப்படியில்லாத போது நாங்கள் என்ன செய்வது ? " என்று சொல்லி வருத்தப் படுகிறார்கள். ஆகவே, சீரியாறு திட்டத்திற்கு 36 ஆயிரம் ரூபாய் இன்வெஸ்டிகேஷனுக்குச் செலவு செய்துவிட்டு, பத்து வருஷமாக " பென் டிங் " ஆக வைத்துக்கொண்டு, அதைப்பற்றி ஒன்றும் பேசாமல் இருந்து, பரம்பிகுளத் திட்டத்தை எடுத்து முடித்துவிட்டபிறகுதான் சீரியாறு திட்டத்தைப்பற்றி பேச்சு வார்த்தை நடத்துவோம் என்று சொல்வது பொருத்தமில்லை என்று நான் மீண்டும் வருத்தத்துடன் தெரிவித்து" கொள்ளுகிறேன்.

இன்வெஸ்டிகேஷன் ஜில்லாவாரியாக நடத்தப்படுகிறது. நல்ல வேலை நடக்கிறது. இன்வெஸ்டிகேஷன் பார்ட்டி ஒவ்வொரு பாசனத்திலும் சில கோட்பாடுகளுக்கு உட்பட்டு சீர்திருத்தம் செய்வதற்கு வாய்ப்பு கொடுத்தால் இன்வெஸ்டிகேஷன் பார்ட்டி நல்ல நிலைமையில் வேலை செய்யும்.

பி.டபிள்யூ.டி., ரெவினியூ இவ்விரு இலாகாவையும் ஒன்றாகச் சேர்த்து இருப்பது **Duel Control** ஆக இருக்கிறது. சில கால்வாய்களை பி.டபிள்யூ. டி. மெயின்டெயின் செய்கிறது. ஆனல், டிஸ்ட்ரிப்யூஷன் வேலை ரெவினியூ டிபார்ட்மெண்டுக்கு இருக்கிறது. ஆகவே, இரண்டு பேர்களிடமும் போகும்போது ஜனங்கள் கஷ்டப்படுகிறார்கள். கால்வாய்களையும் குளங் களையும் பி.டபிள்யூ.டி. மெயின்டெயின் செய்வதால் டிஸ்ட்ரிப்யூஷனையும் பி.டபிள்யூ.டி.-க்கே கொடுத்தால் நீர்ப்பாசனம் நன்றாக நடக்கும். ரெவினியூ டிபார்ட்மெண்டுக்கு போவதினல் எங்களுக்கு ஏற்படும் பல விதமான கஷ்டங்களும் நீங்கும் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

26th March 1958] [Sri A. R. Subbiah Mudaliar]

மைனர் இரிகேஷன் விஷயம் தாசில்தார் பொறுப்பில் இருந்து கொண்டிருக்கிறது. அதுவும் "நான்-டெக்னிகல் பீபிள்" பார்க்கும் போது, பலவிதமான ஊழல் ஏற்படுகிறது. நீர்ப்பாசன விஷயம்பற்றி தாசில்தாரவர்களுக்கு ஒன்றும் தெரியாதவராக இருப்பதால் அவர் கீழ் மைனர் இரிகேஷன் ஓவர்சீர் நல்ல வேலே செய்ய முடியவில்லே. மைனர் இரிகேஷன் வேலையை பி.டபிள்யூ.டி..க்கு கொடுக்கும்படி கேட்டுக்கொள்ளு கின்றேன்.

ஸில்ட் க்ளியரன்ஸுக்காக பத்து லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. 1952–53ல் அப்பொழுதிருந்த மந்திரி திரு. ரெங்கா ரெட்டி அவர்கள் **The quickest way of giving more food to people is to renovate the tanks and restore their lost capacities. This renovation is particularly important in respect of a large number of tanks in Zamin areas which are taken by Government. The object of the scheme is not so much to bring new lands under irrigation as to ensure adequate supplies to lands already growing wet crops.**

என்று சொல்லியிருக்கிருர். ஆகையால், ஸில்ட் கிளியரன்ஸ் செய்தால் முக்கியமான நன்மைகள் ஏற்படும். ஸ்டோரேஜ் கபாசிடியை அதிகப்படுத்த முடியும். அதன் மூலமாக தொடர்ந்து சப்ளே கிடைக்கக்கூடிய நல்ல வாய்ப்பு ஏற்படும். ஜமீந்தாரி ஏரியாவுக்குச் சலுகை கொடுக்கவேண்டுமென்று 1952–53-ல் திரு. ரங்கா ரெட்டி அவர்கள் சொல்லியிருக்கிருர்.

**The object of the scheme is not so much to bring new lands under cultivation but assured supply to existing ayacuts.** என்று அப்போதே அவர்களுடைய பேச்சில் சொல்லப்பட்டிருக்கிறது.

அதுபோக, சிவகிரி கிராமத்தில் செம்பகவல்லி திட்டத்திற்கு ஒரு லட்சம் 35 ஆயிரம் ரூபாய் செலவாகும் என்று எஸ்டிமேட் போடப் பட்டிருக்கிறது. ஒரு கேள்விக்கு பதில் சொல்லும்போது, "இன்வெஸ்டி கேஷன் முடிந்துவிட்டது, சாங்ஷன் செய்யப்பட்டுவிட்டது, ஆனல், எடுத்து நடத்தவில்லே, கேரள கவர்ன்மெண்டுடன் பேச்சு நடத்தவேண்டும்" என்று சொல்லப்படுகிறது. ஆனல், விசாரித்ததில் அந்தத் திட்டத்திற்கும் கேரளா வுக்கும் சம்பந்தமே இல்லே என்று சொல்கிருர்கள். இவர்களேக் கேட்டால் "அது நம்முடைய இடத்தில் இல்லே, கேரளாவும் சம்பந்தப்பட்ட விஷயம்" என்று ஒரு வார்த்தையில் சொல்லி தப்பித்துக்கொள்ளுகிருர்கள். அதற் கும் கேரளாவுக்கும் சம்பந்தமே இல்லே. அது பூராவும் நம்முடைய பொறுப்பில் இருக்கிறது.

அதுபோக சென்ற வருஷத்தில் நீர்ப்பாசனம் சம்பந்தமாகப் பேசும் போது 4, 5 யோசனைகள் சொன்னேன். ஆனல், ஒன்றும் நடக்கவில்லே. ஏதோ நாங்கள் பேசிக்கொண்டிருக்கிரேம். ஆனல், நடைமுறையில் ஒன்றும் வருவதில்லே என்பதைத்தான் பார்க்கிரேம். அடுத்த வருஷம் வந்துவிட்டது. நாங்கள் யோசனே சொல்லி 12 மாதங்கள் கடந்துவிட்டன. நாங்கள் சொன்னதைப்பற்றி "உண்டு, இல்லே" என்று இரண்டில் ஒன்று சொல்லிவிடக்கூடாதா? சட்ட சபையில் எடுத்துச்சொல்லும் வாய்ப்பு இருக்கிறதே தவிர, அதனல் ஒருவிதமான நன்மையும் இல்லே. ஆகையால், சர்க்காரைக் கேட்டுக்கொள்ளுகிறேன். நாங்கள் ஏதாவது ஒரு கவலேப்படக்கூடிய காரியத்தை இங்கே எடுத்துச் சொன்னல், அதைப் பற்றி "உண்டு, இல்லே" என்று இந்த 12 மாத காலத்திற்குள் சொல்ல முடியாமலிருப்பது உண்மையிலேயே வருத்தத்தைத் தருகிறது என்று சொல்லிக்கொண்டு, இப்பொழுது பேசுவதற்கு வாய்ப்பு அளித்த தங்களுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

**Sri D. S. AUTHIMOOLAM:** மிஸ்டர் ஸ்பீக்கர் ஸார், எனக்கு முன் பேசிய கனம் திரு. ஏ. ஆர். சுப்பையா முதலியார் அவர்கள் ரொம்ப உத்வேகமாகப் பேசினர்கள். அதற்குக் காரணம் என்ன என்று நான்

பார்க்கும்போது, கனம் மராமத்து இலாகா மந்திரி அவர்கள் கொடுத்திருக்கும் அறிக்கையின் நான்காவது பக்கத்தில் முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் மேற்கொள்ளப்பட்ட திட்டங்கள், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் சில திட்டங்களை நிறைவேற்றப்போகிறோம் என்று சொல்லியிருக்கிறது. அதே நேரத்தில் இன்னும் உருவாகக்கூடிய சில திட்டங்களை நாங்கள் ஒரு ஸ்பெஷல் இன்ஜினீரிங் டிவிஷன் வைத்து பரிசீலனை செய்யப்போகிறோம் என்று சொல்லியிருக்கிறார்கள். பத்து வருஷங்களாக அந்த திருநெல்வேலி ஜில்லாவை வளப்படுத்த ஒரு முக்கியமான திட்டம் வகுக்கப்பட்டு, பேசப்பட்டு வந்தது. அந்தக் கீரியாறு திட்டத்தைப்பற்றி இங்கே காணப்படவில்லை. அந்தத் தொகுதி மெம்பர் என்ற முறையில் அவர் மிக அழகாகப் பேசியது நியாயமானதுதான் என்று நான் ஒப்புக்கொள்கிறேன்.

என் இதைச் சொல்கிறேன் என்றால் என்னுடைய கடையம் தொகுதியில் கரணையாறு திட்டத்தை மைனர் இரிகேஷன் என்ற முறையில் செய்வதற்கு வாய்ப்பு இருக்கிறது. அதைப்பற்றி கனம் அமைச்சர் அவர்கள் தன்னுடைய சுருக்கமான அறிக்கையில் " பரிசீலனை செய்கிறோம், 1958–59-ம் வருஷத்தில் அத்திட்டம் கவனிக்கப்படும் " என்று குறிப்பிட்டிருக்கிறார். அதற்காக கனம் அமைச்சர் அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

12–20 p.m. திருநெல்வேலி ஜில்லாவில் கீரியாறு ஒரு முக்கியமான திட்டம். பத்து ஆண்டு காலமாகப் பரிசீலனை செய்தும்கூட இன்றைக்கு அந்தத் திட்டம் உருப்படாமல் போவதைக் கண்டு என்னுடைய தொகுதி கரணையாறு திட்டமும் எவ்வாறு ஆகிவிடுமோ என்று அஞ்சித்தான் அவ்வாறு சொல்கிறேன். காரணம், போதுமான நிதி இந்தத் திட்டங்களுக்காக ஒதுக்கப்படவில்லை. முதலீட்டுச் செலவினத்தில் $3\frac{1}{2}$ கோடி என்றுதான் இருக்கிறது. இது $13\frac{1}{2}$ கோடியாக இருக்கவேண்டும். மத்திய சர்க்கார் நமக்கு ஒதுக்குகிற பணம் மிகவும் குறைவு. சென்னை சர்க்கார் நேஷனல் டெவெலெப்மெண்டு கவுன்ஸிலில் போய் வாதாட வேண்டும். " நீங்கள் கொடுத்திருக்கிற பணம் போதாது. வடக்கு வாழ்கிறது, தெற்கு தேய்கிறது என்கிற அபிப்பிராயம் பலமாக வளர்ந்து வருகிறது. எங்கள் கட்சியைச் சேர்ந்த முத்தையா செட்டியார் போன்றவர்கள் பேசியிருக்கிற பேச்சுக்களையே பாருங்கள் " என்று பைல்களை எடுத்துக்கொண்டு டெல்லிக்குப் போகும்போதே தீர்மானமாக உறுதியாக வாதாடி அதிகப் பணம் வாங்கிவரவேண்டும். " முதல் அமைச்சர் அவர்கள் கிராமங்களுக்குப் போகும் போது நாம் எல்லாத் திட்டங்களையும் நிறைவேற்றிவிட்டோம். இனி நம் ராஜ்யத்தில் எடுத்துக்கொண்டு வேலை செய்வதற்குப் பெரிய திட்டங்களே கிடையாது " என்பதாகச் சொல்லி வருகிறார்கள். ஆனால் ஒரு கோடி இரண்டு கோடி ரூபாய் செலவில் அநேக திட்டங்கள் இன்னமும் நிறைவேற்றப்பட இருக்கின்றன என்பதை அவர்கள் வலியுறுத்த வேண்டும். ஏதோ பணம் ஒதுக்குகிறோம் என்றால் அந்தப் பணம் ஜனங்களிடத்தில் போய்ச் சேராது. அடுத்த தேர்தல் ரொம்ப கஷ்டமாகப் போய்விடும் என்று வலியுறுத்தி அதிகத் தொகை பெற்றுவரவேண்டும் என்பதாகச் கேட்டுக்கொள்கிறேன். அதோடு எங்கள் தொகுதியில் சொல்லப்படுகிற கரணையாறு திட்டத்தை சீக்கிரமாகவே பரிசீலனை செய்து கட்ட வேண்டும் என்பதாகவும் கேட்டுக்கொள்கிறேன். இப்போது இரண்டு போக நஞ்சை சாகுபடிக்குத் தீர்வை கட்டுகிறார்கள். ஒரு போகம்கூட விளைவிக்க முடியவில்லை. சீக்கிரமாகவே இரண்டுபோக சாகுபடிக்குத் தண்ணீர் கிடைக்கும் என்ற நம்பிக்கையில்தான் கட்டி வருகிறார்கள். இந்த வருஷம் அதிருஷ்டவசமாக மழை பெய்திருக்கிறது. ஆகவே இந்த அணைக்கட்டைக் கட்டினால் ஐந்தாயிரம் ஏக்கராவுக்கு சாகுபடி வசதி கிடைக்கும் என்று சொல்லிக்கொள்கிறேன்.

26th March 1958]

SRIMATHI KOLANTHAI AMMAL : கனம் சபாநாயகர் அவர்களே, இன்று கொண்டுவரப்பட்டிருக்கிற பாசன திட்டத்தின் கீழே நம்முடைய அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கிற மானியக் கோரிக்கையை ஆதரித்து என்னுடைய தொகுதியில் செய்யவேண்டிய சில காரியங்களை நினைவுபடுத்தலாமென்று நினைக்கிறேன்.

ஒரு சில மாதங்களுக்கு முன்பு என்னுடைய தொகுதியில் சிரவணம்பட்டி பஞ்சாயத்தின் சார்பில் மேல்பவானி திட்டம் கொண்டுவரவேண்டுமென்று தீர்மானம் போட்டு எல்லாத் தலைமை அதிகாரிகளுக்கும் அனுப்பப்பட்டிருப்பது ஞாபகம் இருக்கும். அந்தத் திட்டமானது பல ஆண்டுகளாக என்னுடைய தொகுதி மக்கள் ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிற ஒரு திட்டமாகும். ஏனென்று கேட்டால் எங்கள் தொகுதியில் கிணறுகள் 120 அடி, 130 அடி ஆழம் வரைக்கும் தோண்ட வேண்டியிருக்கிறது. பலபல வருஷங்களாக அவர்கள் எவ்வாறு விவசாயம் செய்து வருகிறார்கள் என்று சொன்னாலும் ஒவ்வொரு ஆண்டும் அந்தக் கஷ்டத்தை ஏற்றுக்கொண்டு பொறுமையோடு இருப்பார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. மேல்பவானித் திட்டமானது வருமா இல்லையா என்பது எங்களுக்கு முடிவாகத் தெரியவில்லை. ஆகவே அமைச்சர் அவர்கள் என்ன பதில் சொல்லப்போகிறார்கள் என்று நான் எதிர்பார்க்கிறேன்.

அடுத்தபடியாக ஒவ்வொரு ஆண்டும் எங்கள் ஊரில் சங்கனூர் பள்ளமென்னும் காட்டாறு ஓடிவந்து கிராமத்திலுள்ள மக்களின் வாழ்க்கையை நாசப்படுத்திக்கொண்டிருக்கிறது. அந்தப் பள்ளத்தின் தண்ணீரை தேக்கி குளங்கள் மூலமாக விவசாயம் செய்யலாம் என்று 42 ஆயிரம் ரூபாய்க்கு எஸ்டிமேட் போட்டு தண்ணீர் அந்தக் காட்டாற்றில் வராத காரணத்தினால் பணம் திரும்பி வந்துவிட்டது என்று நினைக்கிறேன். மீண்டும் போன ஆண்டில்தான் தண்ணீர் வந்து ஏராளமான நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. சிரவணம்பட்டி, சின்னவேடம்பட்டியில், ஒரு குளம் ஏற்படுவதற்கு பொதுமக்களுக்கு அறிவிப்பு கொடுக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. அந்தத் திட்டத்தை நல்லமுறையில் நிறைவேற்றவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன். குளத்தில் தண்ணீர் தேங்கி நின்றால் சுற்றியுள்ள கிணறுகளில் எல்லாம் தண்ணீர் ஊற்று எடுக்க வசதி இருக்கும். மழை காலத்தில் குளம், குட்டைகளில் எல்லாம் தண்ணீர் தேங்கும். ஆகவே இத்திட்டத்தில் கவனம் செலுத்த வேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக பல்லடம் தாலுக்கா இருக்கிற தாலுக்காக்களில் எல்லாம் மிகவும் பஞ்சமானது. அதில் ஒடும்படியான சிறு வாய்க்கால்கள் எல்லாம் மேடு அடைந்து சிராஜ வாய்க்கால், கண்ணம்பாளையம், பள்ளபாளையம் குளம் மூன்று நான்கு ஆண்டு காலமாக செப்பனிடப்படுவதற்காக பணம் ஒதுக்கப்பட்டிருந்தும் வேலை வெற்றிகரமாக நடைபெறவில்லை. அதற்காக நல்ல முறையில் வேலை எடுத்துக்கொண்டால்தான் பல்லடம் தாலுக்காவும் ஓரளவு செழிப்பு அடைய முடியும் என்று நான் ஞாபகப்படுத்த விரும்புகிறேன். அதனால் இருபோக நஞ்சை விவசாயம் செய்வதற்கு வாய்ப்பு கிடைக்கும்.

மேலும் எனது தொகுதியில் கரவளிமாதப்பூர் என்ற ஓர் ஊர் இருக்கிறது பெயர் மிகப் பழமையானது. அங்கே கம்புகூட வெள்ளாமை செய்ய முடியாத நிலைமை ஏற்பட்டுவிட்டது. ஆனால் கரவளிக்கு என்ன தீர்வை கட்டுகிறார்களோ அதுவேதான் கட்டப்பட்டு வருகிறது. காரணம் ஒன்றிரண்டு வருஷங்களில் கரவளிக்குத் தண்ணீர் வசதி கிடைக்கும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அங்கும் நல்லமுறையில் குளங்களைச் செப்பனிட்டுக் கொடுக்கவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன். இப்படி ஆண்டு ஒன்றுக்கு இரண்டு குளங்களையாவது செப்பனிடுவது என்று எடுத்துச் செய்தால் ஐந்தாண்டுகளில் பத்து குளங்களைச் செப்பனிட்டுவிடலாம். எங்கள் தாலுக்காவைப் பொறுத்தவரையில் கீழ்

பவானி திட்டத்தை நிறைவேற்றிக் கொடுத்ததற்கு நான் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். 11 கோடி ரூபாய் வாங்கிக்கொண்டதற்காகவும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். வணக்கம்.

**SRI P. R. SRINIVASA PADAYACHI :** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த நீர்ப்பாசன மானியத்தை நான் ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல முன் வந்திருக்கிறேன். தென்னாற்காடு ஜில்லாவில் சில பகுதிகள் வறண்ட பிரதேசமாக உள்ளன. அதற்குப் பாய்ச்சல் வசதி கொஞ்சங்கூட கிடையாது. திருச்சி ஜில்லாவிலுள்ள கண்டசீலம் அணையின் மூலமாக எமினேரி இருக்கிறது. அதற்கும் அணைக்கட்டுக்கும் 21 மைல் நீளத்தில் வாய்க்கால் வெட்டி அந்த ஏரிக்கு ஜலத்தைக் கொண்டுவந்தால் திருக்கோவிலூர் தாலுக்கா, விருத்தாசலம் தாலுக்கா, சிதம்பரம் தாலுக்கா முதலியவற்றுக்குப் பாசன வசதி அதிகமாக ஏற்படும் என்று நான் சொல்ல முற்படுகிறேன். அந்தத் திட்டத்தை லெவெல் எடுத்துப் பார்த்தால் எவ்வளவு தூரம் வெற்றி அடைய முடியும் என்று அறிந்துகொள்ள முடியும். அதற்குக் கீழே லோயர் அணைக்கட்டு இருக்கிறது. அந்த லோயர் அணைக்கட்டில் இருந்து வீராணம், வாலாஜா, பெருமாணம் ஆகிய மூன்று ஏரிகளுக்கும் தண்ணீர் சப்ளை செய்யப்படுகிறது. அந்த ஏரிகளையும் அபிவிருத்தி செய்யவேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன். கடலூர் தாலுக்காவில் பெருமாள் ஏரி இருக்கிறது. அதனால் சுமார் 20 ஆயிரம் ஏக்கரா நிலங்கள் விவசாயம் செய்ய முடியும். முப்போகம் சாகுபடியாகக்கூடிய நிலங்கள்கூட இருக்கின்றன. அந்த ஏரியின் எதிர்ப்புறத்தில் நான்கைந்து காணி விஸ்தீரணத்திற்கு மண் எக்கல் மேடு இருக்கிறது. அந்த எக்கல் மேட்டைத் தீர்ப்பதற்கு விவசாய நீர்ப்பாசன மகாநாட்டில்கூட எடுத்து முறையிட்டோம்.

12-30 p.m. அதை எடுப்பதற்கு எங்களிடம் எந்தவிதமான இயந்திரங்களும் இல்லை. அதை எடுப்பது என்பது மிகவும் கஷ்டமாயிருக்கிறது என்று சொல்கிறார்கள். அங்கு, கலங்கல் மூலம் ஏரிகளுக்கு விடப்படும் தண்ணீரானது கலங்கள் மூலம் வழிந்து ஓடுகிறது. ஏரி நிறைவதற்குள்ளாக ஏரியின் கலங்கள் மூலம் தண்ணீர் வெளிப்படுகிறது ஆகவே, மண்ணை எடுத்துக் கொடுத்து ஏரியை இன்னும் அதிகமாக அபிவிருத்தி செய்ய வேண்டுமென்று நான் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். பெருமாள் ஏரியில் அதிக விஸ்தீரணம் ஏற்படுத்தலாம். பி. டபிள்யூ, டி. என்ஜினியராக சுப்பாராவ் அவர்கள் இருக்கும்போது பாண்டியன் ஸ்கீம் என்ற ஸ்கீமைப் போட்டார்கள். 37,000 ரூபாய் எஸ்டிமேட்டில் பாசன வசதிக்காக ஊமையன் மதகு மூலம் இரண்டு போக நஞ்சைக்கு கடலூர் தாலூகாவில் பாய்ச்ச வசதி செய்தார்கள். அந்தத் திட்டத்தை இப்பொழுது நிறுத்தி வைத்திருக்கிறார்கள். அதை மறுபடியும் எடுத்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். கடாதி நதியில் திருவந்திபுரம், வானமதி போன்ற அணைக்கட்டுகள் வழி ஆயிரக்கணக்கான ஏக்கர்களுக்கு வாய்க்கால் மூலம் தண்ணீர் பாய்கிறது. ஆனால், அவ்வாய்க்கால்களை சீர்படுத்த பி. டபிள்யூ. டி. ஒன்றும் செய்ய வில்லை. ஆகவே, அந்த வாய்க்கால்களை சீர்படுத்த வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அந்த வாய்க்கால்களை வெட்டுவதற்கு, 500 ஏக்கர் அளவில் அந்த வாய்க்கால் இருந்தால் அவைகளையும் சீர்படுத்த சர்க்கார் உத்தரவிட வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். கடலூர், விருத்தாசலம், சிதம்பரம்

**MR. SPEAKER :** ராமஸ்வாமி முதலியாருக்கு கொடுத்திருக்கும் நேரத்தில் ஐந்து நிமிஷம் குறைத்துக் கொண்டிருக்கிறார்.

12-30 p.m. ***SRI V. SUBBIAH :** திருநெல்வேலி ஜில்லாவில் ஆறில் ஒரு பங்குள்ள கோவில்பட்டி தாலூகாவில் கிட்டத்தட்ட நாலரை லட்சம் ஜனத்தொகையுள்ள ஒரு பரந்தயிடத்தில் இன்றையதினம் நீர்பாசனத்திட்டங்களே இல்லை. குறிப்பாக ஜமீன் பிரதேசமாகிய எட்டயாபுரம் போன்றயிடங்களில் பல குளங்கள் இன்று சிறு நீர்ப்பாசனத் திட்டத்தின் கீழ் வேலை செய்ய முடியாமல்

இருக்கிறது. பெரும் பகுதியும் வானம் பார்த்த பூமியாக, இருப்பதால் மழையை நம்பியே வாழ்கிறார்கள் அங்குள்ள மக்கள். மதிப்பிற்குறிய சுப்பையா முதலியார் அவர்கள் குறிப்பிட்ட கீரியார், பம்பையார் போன்ற திட்டங்கள் எங்கள் பகுதியில் இருக்கிறது. அதை அரசாங்கம் எடுத்து நடத்த வேண்டும். நிதியமைச்சர் அவர்கள் இன்று முதலிடம் கொடுப்பது அவர்களின் தொகுதியில் உள்ள, கோயம்புத்தூரில் வரக்கூடிய சோலேயார், பரம்பிக்குளம் திட்டங்களுக்குத்தான் முதலிடம் கொடுக்கிறார்கள். பனகல், பொப்லி ராஜா போன்றவர்களும் எங்கள் ஜில்லாவின் மதிப்பிற்குறிய தலைவராயிருந்த சிவஞானம் பிள்ளை மந்திரியாக இருந்தபோது கீரியார், பம்பையார் போன்றவைகள் அப்பொழுதே நடைமுறையில் வரவேண்டுமென்று சொல்லிக் கொண்டிருந்த அப்பேர்ப்பட்ட திட்டங்கள் எல்லாம் இன்று முதலிடம் பெறாமல் சமீப காலத்தில் வந்த திட்டங்கள் கோயம்பத்தூர் பகுதியில் கொண்டு வரப்படுகிறது, என்று மக்களால் பேசப்படுகிறது. நமது நிதியமைச்சர் அவர்கள் பாரபட்சம் காட்டுகிறார்கள் என்றும் பொது மக்கள் கூறுகிறார்கள். அதைப்பற்றி சுப்பையா முதலியார் அவர்கள் அழுத்தந்திருத்தமாக கோபத்துடன் சொன்னார்கள். எங்கள் பகுதியில், முதலமைச்சர் அவர்களின் பகுதியான சாத்தூரில், போகக்கூடிய வைப்பாறு போன்றயிடங்களில் நீர்ப்பாசனத்திற்கு வசதியின்றி, அணைக்கட்டுகள் இல்லாத காரணத்தினால் தண்ணீர் வங்காளக்குடாக்கடலில் போய் விழுகிறது. ஆக, கோவில்பட்டி ராயலசீமாப் போன்று இன்று காட்சியளிக்கிறது. ஆகவே, அங்கு நீர்ப்பாசன வசதி செய்து கொடுத்தால், கோவில்பட்டி, ஸ்ரீவில்லிப்புத்தூர், சாத்தூர் போன்ற இடங்களில் உள்ள விவசாய மக்களுக்கு வாழ்வு தேடிக்கொடுத்தவராவர்கள். அங்கு, முத்திலாபுரம் என்ற பகுதியில் ஒரு பெரிய பாலம் கட்டுகிறார்கள். அங்கு இரண்டு கால்வாய்கள் வெட்டி விட்டால் பல கண்மாய்கள் நிறைந்து பயிர் விளைந்து மக்கள் நன்கு வாழ முடியும். ஆறுகளில் ஓடும் தண்ணீரை, மழைக்காலத்தில் ஓடும் தண்ணீரை தேக்கி வைக்க வேண்டும். அந்தளவு கூட எங்கள் பகுதியில் ஒரு திட்டமும் இல்லை என்று நான் வருத்தத்துடன் சொல்லிக்கொள்கிறேன். கவிசக்ரவர்த்தி பாரதி பிறந்த எட்டயாபுரம் எங்கள் பகுதி. அங்கு நீர்பாசன வசதி கிடையாது. அங்குள்ள மக்கள் குடி தண்ணீருக்குக்கூட எங்கும் நிலையில் இருக்கிறார்கள். கப்பல் ஓட்டிய தமிழன் வ. உ. சி. பிறந்த ஒட்டப்பிடாரத்தில் தண்ணீர் வசதியற்று இருக்கிறது. அங்கு கால்வாய்கள் வெட்டப் படவில்லை. வீர பாண்டிய கட்டபொம்மன் பிறந்த தாலுகா, எங்கள் தாலுகா. சரித்திரப் பிரசித்தி பெற்ற சாலிக் குளம் கண்மாய் இன்று ரிப்பேரற்ற நிலையில் இருக்கிறது. இந்த நாட்டின் சரித்திரத்தை தட்டி எழுப்பிய முப்பெரும் தலைவர்கள் பிறந்த கோவில்பட்டி தாலுக்கா நீர்பாசன வசதியற்று ராயலசிமாப் போல் காட்சியளிக்கிறது. பேசுவதற்கு நேரம் இல்லாததால், எங்கள் தாலுக்காவை தனியாகக் கவனித்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொண்டு எனது உரையை முடித்துக் கொள்கிறேன்.

**Sri C. N. ANNADURAI:** சட்டமன்றத் தலைவர் அவர்களே, நீர்பாசனத் துறைக்கு ஒதுக்கப்பட்டிருக்கிற தொகையில் ஒரு வெட்டுத் திட்டத்தைக் கொடுப்பதின் மூலம் எதிர்தரப்பில் உள்ள நாங்கள் நீர்பாசனத் திட்டத்தை நிறைவேற்றுகிற தன்மையில் இருக்கிற சில பல குறைகளைச் சுட்டிக் காட்டிக் கொண்டிருக்கிறோம். இன்றைய தினம் நடைபெற்ற விவாதத்தின் போது நான் நம்முடைய மராமத்து இலாக்கா அமைச்சர் கனம் கக்கன் அவர்களைக் பற்றி எண்ணிக் கொண்டிருப்பதை விட நம் நிதியமைச்சர் கனம் சுப்பிரமணியம் அவர்களைப் பற்றித்தான் அதிகமாக எண்ணிக் கொண்டிருந்தேன். ஏனென்றால், சென்ற தடவை நீர்பாசனத்துறையைப் பற்றிய விவாதம் நடந்தபோது நிதியமைச்சரவர்கள் சொன்னார்கள், "நாட்டிலே எங்கேயாவது கொஞ்சம் தண்ணீர் ஓடினால் அதை அணைகட்டி தேக்க வைக்கவேண்டும் என்ற

ஆசை தோன்றுவது இயற்கைதான், ஆனால் அப்படி அணை கட்டுவதற்கு, தேக்கங்கள் கட்டுவதற்கேற்றளவு நாட்டில் நீர் வீணாகிப் போய்விடவில்லை" என்று சொல்லி, ஒரு ஆசிரியர் மாணவர்களுக்கு பாடம் சொல்லிக் கொடுப்பது போன்ற எண்ணத்தில் நாட்டில் எந்த அளவு மழை பெய்கிறது, எந்தளவு கடலில் நீர் போய் விழுகிறது என்று கணக்கெடுத்துப் பார்த்தால் இங்கு பெருமளவுப் நீரைப் பயன்படுத்துகிறோம், தண்ணீர் வீணாகி விடவில்லை என்று கூறினார். மழை பெய்து தண்ணீர் ஓடும் இடங்களிலெல்லாம் அணை கட்டுவது என்பது முறையல்ல என்றெல்லாம் சொன்னார்கள். இன்று கனம் அங்கத்தினர்கள், சீர்கொழிக்கும் சீமையான திருநெல்வேலி மாவட்டத்தில் இருந்து வருகிறவர்களும், மற்ற துறைகளில் நல்ல முன்னேற்றத்தைக் கண்டிருப்பதாக கருதப்படுகிறவர்களான கோவை மாவட்டத்தைச் சேர்ந்தவர்களும், தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்தவர்களும் ஆங்காங்குள்ள ஆறுகளில் தேக்கங்கள் கட்டலாம் என்று சொன்னதைப் பார்க்கும்போது சென்ற ஆண்டு நிதியமைச்சர் அவர்கள் செய்த வாதத்தை இந்த சபை ஏற்றுக்கொள்ளவில்லை என்ற முடிவிற்குத்தான் நான் வரவேண்டியவனாக இருக்கின்றேன். நாட்டில் நிறைவேற்றப்பட வேண்டிய திட்டங்கள் ஏராளம் இருக்கின்றன, நிதியமைச்சர் அவர்கள் பாடம் சொல்லிக் கொடுப்பது போல் வாதிட்டும் கூட அதை ஏற்றுக்கொள்ள மறுத்திருக்கிற கனம் உறுப்பினர்கள் அதன் மூலம் தங்கள் தங்கள் தொகுதிகளில் மட்டுமல்ல, நாட்டிற்கே பொதுவாக நல்லதொரு காரியத்தை செய்திருக்கிறார்கள், நல்லதொரு தொண்டாற்றியிருக்கிறார்கள் என்று அவர்கள் எல்லோருக்கும் நான் நன்றி கூற கடமைப் பட்டிருக்கிறேன். காங்கிரஸ் அமைச்சரவையே வெளியிட்டிருக்கிற அறிக்கையில், "In the British regime Madras ranked second only to the Punjab in the matter of irrigation, etc." என்று குறிப்பு காணப்படுகிறது. பாஞ்சாலத்திற்கு அடுத்தபடியாக சென்னை மாநிலத்தில்தான் நீர்பாசனத் திட்டம் செவ்வையான முறையில் இருக்கிறது என்று வெள்ளைக்காரன் காலத்திற்குப் பிறகு காங்கிரஸ் அமைச்சரவை ஏற்பட்ட போது வெளியிடப்பட்ட நீர்பாசன அறிக்கையில் ஒரு குறிப்பு காணப்படுகிறது. ஆக, வெள்ளைக்காரன் கூட தான் செய்ய வேண்டிய கடமையை ஓரளவு உணர்ந்து செய்திருக்கிறான் என்றாலும் நம்மவர்கள் ஆட்சியில் நம்மவர்கள் கேட்கிற சில பல காரியங்களைக்கூடச் செய்வதற்கு இந்த அமைச்சரவையால் முடியவில்லை என்பது இன்றைய தினம் ஆளும் கட்சியைச் சார்ந்தவர்களும், பல்வேறு கட்சியைச் சார்ந்தவர்களும் தங்கள் தங்கள் தொகுதிகளைப்பற்றி எடுத்துப் பேசியதில் இருந்து தெளிவாகத் தெரிகிறது. ஓரளவு கூட நம் குறைபாடுகளை, நம் அமைச்சரவை நீக்க முடியாத நிலையில் இருப்பதற்குக் காரணம் என்னவென்று எண்ணிப் பார்க்க வேண்டும். இந்த ஒரு துறையில் பேசுகிறபோதாவது வடக்கு தெற்கு என்று பேசாமல் இருக்கலாம் என்று நான் ஆசைப்பட்டேன்.

12-40 p.m. ஆனால் காங்கிரஸ் தரப்பில் உள்ளவர்கள் வடக்கு தெற்கு என்று நாங்கள் பார்க்கமாட்டோம் என்று சொன்னார்கள். உண்மையிலேயே அவ்விதம் பார்க்காமல் இருக்கிறவர்கள் காங்கிரஸ் அங்கத்தினர்கள் என்றால் ஏன் அவர்கள் வடக்கே உள்ள நீர்பாசனத் திட்டங்களைக் கண்டு திருப்தி அடைந்து விடாமல், இங்கே, தெற்கே, நீர்பாசனம் சரியாக செய்யப்படவில்லை என்று குறைபட்டுக் கொள்ளவேண்டும்? வடக்கேயே கோதுமையை விளைவித்து மலிவான விலைக்கு வாங்கி சாப்பிட்டுக்கொள்ளலாம்— வடக்கே நெல்லை விளைவித்து மலிவான விலைக்கு வாங்கி சாப்பிட்டுக்கொள்ளலாம். அதற்காக மற்றொரு பக்ராநங்கல் திட்டத்தையோ, மற்றொரு தாமோதர் அணைகட்டையோ அங்கேயே கட்டச் சொல்லி சிபாரிசு செய்திருக்கலாம். நம்முடைய மாநிலம்—நம்முடைய இராஜ்யம்—நம்முடைய நாடு பின்னேக்கி சொல்கிறது என்று காண்கிறநேரத்தில் "வடக்கு–தெற்கு" என்ற உணர்ச்சி அதே விதத்தில் வராவிட்டாலும் மாநில சர்க்கார் மத்திய சர்க்கார் என்ற உருவிலே உங்கள் உள்ளத்திலே புகுந்து குடையத்தான் செய்கிறது. அமைச்சர் அவர்கள் தந்திருக்கின்ற அறிக்கையில் பல இடங்களில் நான் பார்க்கிறேன், மத்திய சர்க்காரை இன்னும் எந்த அளவுக்கு நம்பிக்

கொண்டிருக்கிறார்கள் என்று. "1958–59-ல் இந்த வேலைகளுக்கு மானியம் ரூபாய் 21 இலட்சம், கடன் ரூபாய் 11 இலட்சமும் தரும்படியாக இந்திய அரசாங்கத்திடம் கேட்கப்பட்டிருக்கிறது. அவர்களுடைய அனுமதி எதிர்பார்க்கப்படுகிறது" என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். உண்மையிலேயே கேட்கப்படுகிற பணம் நிச்சயம் கிடைத்துவிடும் என்ற நம்பிக்கை அமைச்சரவைக்கு இருக்குமானால் மத்திய சர்க்காரிடமிருந்து மானியமாக 21 இலட்சம் ரூபாயும் கடனாக 11 இலடசம் ரூபாயும் நாங்கள் பெற்று கனம் அங்கத்தினர்கள் சொல்லியிருக்கின்ற இந்த சிறு சிறு திட்டங்களை நிறைவேற்றித்தருவோம் என்று தெளிவாக திட்டவட்டமாக எடுத்துச்சொல்ல முடியும். ஆனால் அனுமதி எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். அதற்கு மறுபக்கத்திலே "1958–59-ம் ஆண்டில் இந்த வேலைகளுக்காக ரூபாய் ஆறு லட்சம் மானியமும் ரூபாய் ஒரு லட்சம் உதவித் தொகையும் அளிக்குமாறு இந்திய அரசாங்கத்தினிடம் கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறது. அவர்களுடைய அனுமதி எதிர்பார்க்கப்படுகிறது." என்று இப்படி பக்கத்திற்கு பக்கம் "எதிர்பார்க்கிறோம்" என்ற நிலைமையில் இருக்கிற காரணத்தால் காங்கிரஸ் கட்சியைச் சார்ந்த ராஜா ஸர் முத்தையா செட்டியார் அவர்கள் காங்கிரஸ் அமைச்சர்களுக்கு உற்சாகம் தருகிற வகையில் அமைச்சர்களுக்கு உண்மையிலேயே துணிவு ஏற்பட வேண்டும் என்றும், டெல்லியிடம் சண்டை போட்டு பணத்தை கேட்டு வாங்கவேண்டும் என்றும் எடுத்து குறிப்பிட்டு சொல்லியிருக்கிறார், ஆனால் அந்த நேரத்தில் மத்திய சர்க்கார் பணம் தரக்கூடிய நிலையில் நம்மிடத்தில் இருக்கிறார்களா என்று அறிய வேண்டுமானால் மத்திய சர்க்காருடைய நீர்பாசன திட்டக்கொள்கை எந்த வகையில் அமைந்திருக்கிறது என்பதை நாம் பார்க்க வேண்டியிருக்கிறது. விருப்போடு விரும்பினாலும் விரும்பா விட்டாலும்—இன்றையதினம் இந்திய கூட்டணக்சண்டம் என்ற அரசியல் அமைப்பில் இருக்கிற காரணத்தால் மத்திய சர்க்கார் எந்தெந்த திட்டங்களை எப்படி எப்படி அமுலாக்குகிறார்களோ அதைப் பொறுத்து நம்முடைய திட்டங்களுக்கு மாற்று உருவங்களை கொடுக்கவேண்டியோ குறைக்கவேண்டியோ அல்லது அதிகரிக்கவேண்டியோ ஏற்படுகிறது. அந்த நிலைமை இருக்கிறது. இதில் ஐந்தாண்டு திட்டத்தில் மத்திய சர்க்கார் போட்ட நீர்பாசனத் திட்டங்கள் அத்தனையும் மலை போன்ற அணைகட்டுகளுக்குத் தான் பெருவாரியாக பணம் ஒதுக்கப்பட்டதே தவிர சிறு சிறு நீர்பாசன திட்டங்களைப் பற்றி மத்திய சர்க்கார் கவலைப்படவில்லை. அவர்கள் கவலைப் படாதது மிகுந்த தவறுடையது என்று மத்திய சர்க்காரைச் சேர்ந்தவர்களே இன்றைய தினம் உணர்ந்து முதல் ஐந்தாண்டு திட்டத்தில் பெரிய நீர்பாசன திட்டங்களுக்கு பல கோடிக்கணக்கான ரூபாய்களைச் செலவழித்து விட்டோம், ஆனால் எதிர்பார்த்த பலன் கிட்டவில்லை என்று அவர்களே கொஞ்சம் கழிவிரக்கத்துடன் பேசியிருக்கிறார்கள். தாமோதர் அணைகட்டு கட்டப்பட்டதாலும், பக்ரா நங்கல் கட்டப்பட்டதாலும் அங்கே கிடைக்கிற தண்ணீரை அந்த பகுதி மக்கள் சரியான படி பயன்படுத்திக் கொள்ளவில்லை என்று மத்திய அரசு இன்றையதினம் மனம் நொந்து பேசியிருக்கிறது. இப்படி பேசியிருக்கிறார்கள் என்றால் மிக தாராளமாக கோடிக்கணக்கான ரூபாய்கள், நூற்றுக்கணக்கான கோடி ரூபாய்களை வாரி இறைத்தான பிறகு பேசியிருக்கிறார்கள் என்பதை தெரிந்து கொள்ள வேண்டும். இங்கே பெரிய ஆறுகள் இல்லை, ஆகவே அணைகள் கட்டுவதற்கில்லை என்று பேசுகிற அமைச்சர்கள் முதல் ஐந்தாண்டு திட்டத்தில் இவ்வளவு கோடிக்கணக்கான ரூபாய்களை வடக்கே செலவழிக்கப்பட்ட நேரத்தில் நம்முடைய சிறு நீர்பாசன திட்டங்களுக்காக என்று ஏன் பெரிய தொகை கேட்டு வாங்கவில்லை. இனியாவது கேட்டு வாங்குவதற்கு, அந்த துணிவு அவர்களுக்கு இருக்கிறதா என்றால் அவர்கள் அறிக்கையில் "அனுமதி எதிர்பார்க்கப்படுகிறது" என்று சொல்லுகிறார்கள். இவர்கள் அனுமதி எதிர்பார்ப்பதை தான் "வடக்கு–தெற்கு" என்று நாங்கள் சுருக்கமாகச் சொல்லுகிறோம். அனுமதி நீங்கள் எதிர்பார்க்கவேண்டியது நாட்டுமக்களுடைய கண்களிலிருந்து—அனுமதி நீங்கள் எதிர்பார்க்க

வேண்டியது வரண்டு கிடக்கிற வயல்களிலிருந்து—அனுமதி நீங்கள் எதிர் பார்க்கவேண்டியது தேய்ந்து போகிற நம்முடைய விவசாயத்தைப் பார்த்தே தவிர பணப்பெட்டியை கையிலே வைத்துக்கொண்டு இருக்கிற வேறு ஒரு இடத்திலிருந்து அனுமதியை எதிர்பார்த்துக்கொண்டிருந்தால் நிச்சயமாக பயன் இல்லை, சரியல்ல. திருநெல்வேலிச் சீமையைச் சேர்ந்தவர்கள்—தேச விடுதலை வரலாற்றை எடுத்துச்சொல்லி இப்படிப்பட்ட சீமையை நீங்கள் பட்டினி போடுகிறீர்களே என்று கேட்டால் அவர்கள் குரல், உண்மையிலேயே அந்த சீமையிலே இருக்கிற மக்கள் எந்த அளவுக்கு குமுறிக்கொண்டிருக்கிறார்கள் என்று குறிப்பிடும் அளவுக்கு இருக்கிறது. இரண்டாவது ஐந்தாண்டு திட்டம் நிச்சயமாக வெற்றி பெறவேண்டுமென்றால் நம்முடைய விவசாயத்திலே கிடைக்கும் விலை பொருள்களின் வளர்ச்சி 100–க்கு 42 பங்கு அதிகமாக வேண்டும் என்று பிளானிங் கமிஷன் திட்டவட்டமாக தெரிவித்திருக்கிறது. 100 கலம் விளைந்து கொண்டிருந்த இடத்தில் ஐந்து வருடத்திலே 142 கலமாக விளைய ஆரம்பித்தால் நமக்கு ஏற்பட்டிருக்கிற வெளிநாட்டு கடன்களை கூட நம்மால் நீக்கிக் கொள்ள முடியும் என்று பிளானிங் கமிஷன் திட்டவட்டமாக சொல்லியிருக்கிறது. இராஜ்ய சர்க்கார் தலைவர்கள் 100–க்கு 42 பங்கு என்று முடியாவிட்டாலும் 100–க்கு 28 என்ற அளவுக்கு அதிகம் வளர்ச்சி செய்து காட்டுகிறோம் என்று உறுதி அளித்திருக்கிறார்கள். பெரிய ஆறுகள் இல்லை—பாக்ரா நங்கல் கட்டுவதற்கு, சிறிய ஆறுகள் இருக்கின்றன—ஆனால் அவைகளில் தண்ணீர் அதிகம் இல்லை, தண்ணீர் அதிகம் இருந்தாலும், சிறு நீர்பாசனத் திட்டங்களைக் கட்டுவதற்கு பணம் இல்லை—என்று சொல்லிக் கொண்டிருந்தால்—நூற்றுக்கு 28 பங்கு என்ற வளர்ச்சியை எப்படி நிறைவேற்ற முடியும்? நூற்றுக்கு 28 பங்கு என்ற அளவுக்கு உணவுப் பொருள்களை நாம் அதிகப்படுத்திக் காட்டாவிட்டாலும், வெளி நாடுகளிலிருந்து வாங்கிய கடன் தொகைகளைத் திருப்பித் தருகிற காலம் வரும்போது எதிலிருந்து திருப்பித் தரப்போகிறோம்? இப்படி வாங்கிய கடன் தொகைகளை மத்திய சர்க்கார்தான் அதிகப் பொறுப்போடு கவனிக்க வேண்டுமென்றாலும், மாநில சர்க்கார் இந்தப் பொறுப்பிலிருந்து அடியோடு நழுவி விடமுடியாது என்று சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

கனம் அங்கத்தினர்கள் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் தொகுதியிலே இருக்கும் சிறு சிறு ஆறுகளைப் பற்றியெல்லாம் எடுத்துச் சொன்னார்கள். என்னுடைய தொகுதியிலே—சிறிய ஆறல்ல—பெரிய ஆறு இருக்கிறது. அந்தப் பெரிய ஆற்றில் நீர் இல்லாது இருப்பதற்குக் காரணம் மைசூர் ராஜ்யத்திற்கும், சென்னை ராஜியத்திற்கும் இடையே ஒரு உடன்பாடு ஏற்படாதது தான் என்று சென்ற ஆண்டிலே நான் சுட்டிக் காட்டினேன். சென்ற ஆண்டிலே, இப்படிப்பட்ட விவரங்களைப் பற்றிய பேசிய நேரத்தில் கனம் முதல் அமைச்சர் அவர்கள் "இங்கு வந்து அவரவர்கள் தங்கள் தங்கள் தொகுதியிலுள்ள குறைகளைப் பற்றி சொல்லிக்கொண்டிருக்கத் தேவையில்லை, நானே சென்று அந்தந்த இடத்தில் கவனிக்கிறேன்" என்று சொல்லி "பாகல்மேடு பாதை" என்ற ஒரு புதிய முறையை வகுத்தார்கள். அந்தப் புதிய முறை என்ன ஆயிற்று? என்று இந்த நாட்டை ஆளுகிற அமைச்சரவர் நாட்டு மக்களுக்கு தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். அந்த "பாகல்மேடு பாதையை" அவர்கள் மறுபடியும் பின்பற்றப்போகிறார்களா?—அல்லது ஒரு தடவை பின் பற்றி, அது சரியல்ல என்று அதிகாரிகளிடமிருந்து யோசனை வந்த காரணத்தினால்—கைவிடப்பட்டு விட்டதா?—அல்லது "பாகல்மேடு பாதை" என்பது தேர்தல் முடிந்த ஒரு நாளிலும், மறு தேர்தல் வருகிற மறு நாளிலும் நாங்கள் நடத்திக் காட்டுகிற வேடிக்கை என்று கருதுகிறீர்களா?—என்று நான் அறிய விரும்புகிறேன். "பாகல்மேடு முறை" அனுசரிக்கப்பட்டிருந்தால் இங்கே வந்திருக்கிற அங்கத்தினர்கள் ஒவ்வொருவரும் சீரியார் திட்டத்தைப் பற்றியும், மஞ்சளாறு திட்டத்தைப் பற்றியும், அவர்கள் தொகுதியில் இருக்கிற ஆற்றைப்பற்றியும். . .

26th March 1958]

**Sri N. MAHALINGAM:** ஆன் எ பாயின்ட் ஆப் ஆர்டர், ஸர், இந்த "பாகல்மேடு" திட்டத்திற்கும், தற்போது விவாதத்தில் இருக்கும் இறிகேஷன் விஷயத்திற்கும் என்ன சம்பந்தம் என்பதை அறிய விரும்புகிறேன்.

**Mr. SPEAKER:** கொஞ்சம் பொறுங்கள், அவர்களே சொல்வார்கள்.

**Sri C. N. ANNADURAI:** "பாகல்மேடு" திட்டத்திற்கும் கனம் மகாலிங்கம் அவர்களுக்கும் சம்பந்தமில்லை என்று நான் உணருகிறேன். ஆனால் "பாகல்மேடு" திட்டத்திற்கும் முதல் அமைச்சருக்கும் சம்பந்தம் இருக்கிறது. "பாகல்மேடு" என்பது வேடிக்கையான ஒரு தேசிய திருவிழா என்று கருதியிருந்தால் அதைப்பற்றி நான் கேள்வி கேட்டிருக்கமாட்டேன். "பாகல்மேடு" திட்டத்திற்குப் பிறகு நான் என்னுடைய தொகுதியில் இருக்கும் குறைபாடுகளை நமது முதல் அமைச்சருக்குத்தெரியப்படுத்த, அவரை தண்டலத்திற்கு அழைத்துச் சென்று ஒரு மாநாடு நடத்தினேன். அந்த மாநாட்டைப் பற்றி இந்த மாமன்றத்திலே நான் குறிப்பட்ட நேரத்தில் முதல் அமைச்சர் அவர்கள்—எழுந்திருந்தல்ல—மற்ற அங்கத்தினர்கள் பேசுவது போலல்ல—வழக்கமாக உட்கார்ந்துகொண்டே சொல்லுகிற கருத்துக்களைப் போல—" என்னை அழைத்துச் சென்று ஏமாற்றப் பார்த்தீர்கள் " என்று சொன்னார். இந்தக் கருத்து ஒரு அமைச்சருக்கு இருக்குமானால்—பாகல்மேடு பாதையிலேயும் போக மாட்டோம்—தண்டலம் மார்க்கம் தப்பு அர்த்தம் கொடுக்கிறது—என்றால் இந்தக் குறைகளை இங்கே எடுத்துப் பேசுவதைத் தவிர வேறு என்ன வழி இருக்கிறது. அப்படிப் பேசுவதில்தான் பலன் இருக்கிறதா ? என்றால்—கனம் சுப்பையா முதலியார் அவர்கள் "பேசிப் பேசிப் பார்க்கிறோம், ஆனால் பலன்தான் இல்லை" என்று சொன்னார்கள்—அப்படி சுப்பையா முதலியாரே பேசிப் பேசிப் பலன் இல்லையென்றால்—10 ஆண்டு காலமாகச் சொல்லியும் பலன் இல்லை என்றால்—நாங்கள் உங்களிடத்திலே பேசுவதை விட்டு, மக்களிடத்திலே பேசுவதைத் தவிர வேறு மார்க்கத்திற்கு எங்கே விடுகிறீர்கள் ? இதைத் தான் ஆட்சியாளர்களுக்கு எடுத்துக் காட்ட பிரியப் படுகிறேன். பெரிய தொகை ஒதுக்குவதற்கு மத்திய சர்க்காரிடம் பணம் கேட்க உங்களுக்குத் துணிவு இல்லை—அந்தத் துணிவு இல்லையே என்று சொன்னால் "நாங்கள் வடக்கேயே கட்டி ஆள வேண்டுமென்றாலும் முடியும்" என்று பல பேர் சொல்லுகிறார்கள். இன்றைய தினம் இராஜா ஸர் முத்தையா செட்டியார் சொன்னதைப் போல, டில்லிக்குப் போகிறபோது கொஞ்சம் அதட்டிப் பணத்தை கேட்டு வாங்கவேண்டும். ஆனால், அதட்டுகிற நேரத்தில் அதட்டுகிறவருடைய தன்மையையும், அதட்டப் படுகிறவருடைய தன்மையையும் பொறுத்துத்தான் பலன் இருக்கும். அதனால்தான் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சார்ந்த நாங்கள் நம் மாநில சர்க்கார் இன்றைய தினம் அனுமதி கேட்கிற நிலைமையில் இருப்பதைச் சுட்டிக் காட்டி பல தடவை பேசியிருக்கிறோம். பாலாறு திட்டத்தை வலியுறுத்திய நேரத்தில் நமது நிதி அமைச்சர் சென்ற ஆண்டு சொன்னார்கள்—மைசூர் இராஜ்யத்தோடு பேசி ஒன்றும் பலன் ஏற்படவில்லை என்று. இப்போது மண்டலக் குழு நிறுவியிருக்கிறார்கள்—அதாவது ஸோனல் கவுன்ஸில். அந்த மண்டலக் கமிட்டி பாலாறு பிரச்சினையைப் பற்றி அவர்கள் நிச்சயம் ஆராய்ந்து பார்க்கவேண்டும். எங்களுடைய செங்கற்பட்டு, வட ஆற்காடு, இரண்டு மாவட்டங்களுக்கும் பாலாற்றை விட்டால் வேறு வழி முறை இல்லை ஆற்று நீர் பாசனத்திற்கு. ஒன்று நீங்கள் பாலாற்றுக்கு தண்ணீர் கொண்டு வாருங்கள், அல்லது அதிலே இருக்கிற மணலை எல்லாம் எடுத்து, பெரிய பெரிய லாரிகளிலே ஏற்றி, கப்பல்கள் மூலமாக வெளி நாடுகளுக்கு அனுப்பி விடுங்கள். அல்லது சாதாரண கரம்பு நிலமாகவாவது ஆக்கித் தாருங்கள். இந்த இரண்டு மாவட்டங்களில் வளைந்து வளைந்து ஓடுகிற பாலாறு பார்ப்பதற்கு அழகாக இருக்கிறது. ஒரு சொட்டுத் தண்ணீர் மேலேயில்லையே தவிர,

12-50 p.m. நல்ல நீர்பாசன நிபுணர்கள் அதிலே அடியூற்று நீர் (subsoil water) ஏராளமாக இருப்பதாகச் சொலுகிறார்கள். அந்த நீரைப் பயன்படுத்துவதற்கு இதுவரையில் என்ன முயற்சிகள் எடுத்துக்கொண்டீர்கள் என்று கேட்க விரும்புகிறேன். மைசூர் இராஜ்யத்தோடு கலந்து பேசுவதற்கு "ஸோனல் கவுன்சிலே" பயன்படுத்துங்கள். ஸோனல் கவுன்சிலில் இதைப்பற்றி பேசுவதற்கு இல்லை என்று கருதினால், இந்த மாமன்றத்தில இருக்கிற வட ஆற்காடு, செங்கற்பட்டு மாவட்டங்களைச் சேர்ந்த உறுப்பினர்கள்—எல்லாக் கட்சிகளைச் சேர்ந்த உறுப்பினர்களை—கொண்ட அதிகாரம் படைத்த ஒரு நல்லெண்ண தூதுகோஷ்டி (Goodwill Mission) ஐ மைசூர் சர்க்காரிடத்தில் சென்று பேசுவதற்கு நிறுவுங்கள். எப்பாடு பட்டாவது பாலாற்றில் தண்ணீர் கொண்டுவரவேண்டும். இந்த இரண்டு மாவட்ட மக்களும்—இன்றல்ல, நேற்றல்ல—எனக்கு வோட்டு அளித்த பிறகு அல்ல, அதற்கு நீண்ட நாட்களுக்கு முன்னாலிருந்தே, மனதில் இதைத்தான் ஆவலோடு எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். பாலாற்றிலே தண்ணீர் கொண்டு வருவதற்கு வழிவகை சொன்னால், அதை காதில் வாங்க மறுக்கிறீர்கள். அதற்கான முயற்சிகளை எடுத்துக்கொள்ளாமல், காஞ்சீபுரம் தொகுதிக்கு வரும்போது எல்லாம், காங்கரஸ் அமைச்சர்களும் சரி, அவர்களால் தூண்டிவிடப்படுகிற பிரசாரகர்களும் சரி, "அண்ணாதுரை பாலாற்றுக்கு தண்ணீர் கொண்டுவந்துவிட்டாரா"? என்று பேசுகிறார்கள். அதனால் எனக்கு ஒன்றும் குறைவு ஏற்பட்டு விடவில்லை. பகீரதன் கங்கையைக் கொண்டுவந்தான் என்று சொல்லுகிற பரம்பரையைச் சேர்ந்த நீங்கள் மைசூர் இராஜ்யத்திலிருந்து தண்ணீர் கொண்டுவர முடியவில்லை என்றால், அது இந்த அமைச்சரவைக்குத்தான் இழுக்கே தவிர, அங்கே இருக்கிற உறுப்பினர்களுக்கு அல்ல என்பதை நான் வலியுறுத்திச் சொல்லுவேன். செய்யாறு திட்டத்தைப் பற்றி நீண்ட நாளைக்கு முன்னதாகவே நம்முடைய மராமத்து இலாக்கா அமைச்சருக்குத் தெரியும். இதற்கு அதிகமான பணம் தேவையில்லை. இந்த திட்டங்களை நிறைவேற்றுவதற்கு இவர்கள் என்னென்ன தகுதிகள் இருக்கவேண்டுமென்று சொல்லுகிறார்களோ, அத்தனை தகுதிகளும் இந்தத் திட்டத்தில் இருக்கின்றன. செலவு குறைவு. பலன் அதிகம். அதிகமான சிக்கல்கள் இல்லை. கட்சி மாறுபாடு இல்லை. காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்களும், பிற கட்சியைச் சேர்ந்தவர்களும் கூட்டாகச் சேர்ந்து செய்யாறு நீர்த்தேக்கத் திட்டத்தைப் பற்றி அமைச்சர் இடத்தில் எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். அமைச்சர் கூட அங்கே சென்று பார்த்து நிலைமையை ஆராய்ந்து வந்திருக்கிறார்கள். அவர்களுடைய அறிக்கையில் செய்யாறு திட்டத்தைப் பற்றி ஏதாவது குறிப்பு இருக்குமா என்று துருவித்துருவிப் பார்த்தேன். ஆனால் குறிப்பு எதுவும் இல்லை. இப்படி, இருக்கிற திட்டங்களை நிறைவேற்றாமல், புதிய வழிமுறைகளைக் கண்டுபிடிக்காமல், "இங்கே ஆறுகள் அதிகம் இல்லை, ஆகவே நீர்பாசனத்திற்கு வசதியில்லை" என்று சொன்னால், நாட்டிலே இருக்கிற விவசாயத்தை நீங்கள் எப்படி வளர்க்கப் போகிறீர்கள்? அதற்கு நிதி அமைச்சர் சுப்பிரமணியம் ஒரு வழி சொன்னார்கள், இப்பொழுது விவசாயி அதிகமான அளவுக்கு தண்ணீரைப் பாழ்படுத்தி விடுகிறான் என்று. இந்த அளவுக்கு தண்ணீரைப் பயன்படுத்தாமலே விவசாயத்தை வளரச் செய்யமுடியுமென்று சொல்லுவது நிபுணர்களுடைய கருத்தாக இருக்குமேயானால், அதை நாட்டிற்கு எடுத்துச் சொல்லுங்கள். அதிகத் தண்ணீர் தேவையில்லை, இப்பொழுது விவசாயத்திற்கு உபயோகிக்கப்படும் தண்ணீரை மிகக் குறைச்சலாக தண்ணீரைக் கொண்டு இந்த விளைச்சலைப் பெற முடியுமென்று நிதி அமைச்சர் அவர்கள் கருதுவார்களேயானால், அந்தக் கருத்துக்கு நிபுணர்களின் ஒப்பம் இருக்கிறது என்றால், விவசாயத்துறை நிபுணர்களைக் கொண்டு அந்தக் கருத்தை நாட்டிலே பரப்புங்கள். பரப்பி, இந்த அதிகமான தண்ணீரைச் செலவழிக்காமலே, விளைச்சலை அதிகப்படுத்துவதற்கு வழிமுறையை நீங்கள் செய்து கொடுங்கள். தண்ணீரும் தரமாட்டீர்கள், உணவைப் பெருக்கச் சொல்லுவீர்கள், விலைவாசியைக் குறைக்க மாட்டீர்கள். எதிர் தரப்பிலுள்ளவர்கள் வாழ்த்தே

பாடவேண்டுமென்று கருதிக்கொண்டு இருப்பீர்களேயானால், இன்றைய தினம் எதிர் தரப்பிலிருந்து மட்டுமல்ல, உங்கள் சொந்த கட்சியிலிருந்தே சொல்லப்படுவதேயெல்லாம் வாழ்த்து என்று கருதுவீர்களேயானால், அதை உபசாரத்திற்காக வாழ்த்து என்று கொள்ளலாமே தவிர, கட்சிக் கட்டுப்பாட்டு அதிகாரத்தின்படி வாழ்த்து என்று கொள்ளலாமே தவிர, உண்மையில் அதைவிட வன்மையான கண்டனம் இருந்திருக்க முடியாது.

சர்க்கார் தயாரிக்கும் திட்டங்களை கண்டித்துவிட்டு, கடைசியில் திட்டங்களுக்கு ஆதரவு தருகின்றவர்களைப் பற்றி சென்ற கிழமை பண்டித நேரு என்ன சொல்லியிருக்கிறார் என்பதை கனம் அங்கத்தினர்களின் கவனத்திற்கு கொண்டு வர கடமைப்பட்டிருக்கிறேன். திட்டத்தில் உள்ள குறைபாடுகளை எடுத்து சொல்லிவிட்டு, கடைசியில் ஆதரிக்கிறேன் என்று சொல்வதை, "That is illogical support, and I do not want it" என்று பண்டித நேரு அவர்கள் தெளிவாக எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள், இன்றைய தினம் உங்களுக்கு கிடைக்கும் ஆதரவு அத்தனையும் கட்சிக் கட்டுப்பாட்டினால் கிடைக்கிற ஆதரவே தவிர வேறு வகையில் ஆதரவு கிடைக்கவில்லை என்பதை அமைச்சர் அவர்களுக்கு நான் தெளிவாக எடுத்துச் சொல்லப் பிரியப்படுகிறேன். போடப்பட்டுள்ள பல திட்டங்களில், ஒரு திட்டத்தைப் போட்டால் மற்ற இடங்கள் பாதிக்கிறதா என்பதை ஆராய்ந்து பார்த்து திட்டம் போடப்படுவது இல்லை. சாத்தனூர் திட்டத்தினால் வளவனூர் காய்கிறது என்று அந்த தொகுதி அங்கத்தினர் சொன்னால் அதை அமைச்சர் அவர்கள் அடியோடு மறுப்பதற்கு இல்லை. சாத்தனூர் திட்டத்தில் அதிகமான அளவு தண்ணீர் தேங்கவில்லை, மழை பெய்யவில்லை என்று சொல்லலாம். ஆனால் இந்த சாத்தனூர் திட்டம் நீண்ட நாளாக சர்க்கார் அலுவலகத்தில் தூங்கிக்கொண்டிருந்ததற்கு காரணம் சாத்தனூர் அணைக்கட்டினால் வளவனூர் பகுதியில் பஞ்சம் வரக்கூடும் என்று அப்போதே கருதியிருந்ததால்தான். ஒரு இடத்தில் திட்டம் போட்டால் மற்ற இடங்களில் காய்ந்து போகிறது என்பதை யோசிக்காமலே திட்டம் போட்டிருக்கிறார்கள். உங்களுக்குத் திட்டம் போடத் தெரியவில்லை. போட வேண்டிய திட்டங்களை போடுவதற்கு ஏற்ற பணம் இல்லை. ஆனால் அறிக்கையில் "Our engineers are in great demand elsewhere" என்று சொல்லப்பட்டிருக்கிறது. அது உண்மைதான். நம் மின் பெரியார்கள் (எஞ்சினியர்ஸ்) நாட்டின் பல இடங்களில் தேவைப்படுகிறார்கள். இங்கு அவர்களை பயன்படுத்திக்கொள்ளவில்லை. அவர்கள் திறமைக்கு ஏற்ற அளவுக்கு இங்கு அணைக்கட்டு திட்டங்கள் போடப்படவில்லை. ஆகவே அவர்கள் வேறு இடங்களில் தேவைப்படுகிறார்கள். அங்கு அழைத்துச் செல்லப்படுகிறார்கள். நம்முடைய எஞ்சினியர்கள் அங்கு செல்வது நமக்கு சிறப்பு என்றாலும், நம்முடைய அமைச்சரவை அவர்களைப் பயன்படுத்திக்கொள்ளும் அளவுக்கு நல்ல திட்டங்களை போடவில்லை என்பதையும் அனுசரிக்கிறது. ஆகையினால் குறை இல்லாத முறையில் எல்லா கட்சிகளையும் கலந்து, அத்தகைய திட்டங்களை நிறைவேற்றுவதற்கு வழி வகை செய்ய வேண்டும் என்று சொல்லிக்கொண்டு என்னுடைய உரையை நிறுத்திக்கொள்கிறேன். 12–55 p.m.

**Sri V. K. RAMASWAMY MUDALIYAR** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த வெட்டுப்பிரேரணையை ஆதரித்து சில வார்த்தைகளை சொல்ல ஆசைப்படுகிறேன். நம்முடைய தமிழ் நாட்டில் உணவு உற்பத்தி பெருக வேண்டும் என்றால், சிறிய நீர் பாசன திட்டங்களை எடுத்து நிறைவேற்றுவதற்கு சர்க்கார் முன்வரவேண்டும். நம்முடைய பிராந்தியத்தில் முக்கியமான சில பிராஜக்டுகள் கட்டி முடிந்துவிட்டன. அதன் காரணமாக அங்கே அநேக இயந்திரங்கள் உபயோகிக்கப்படாமல் சும்மா இருந்து கொண்டு இருக்கின்றன. அதை வைத்துக்கொண்டு சிறிய நீர்ப்பாசன திட்டங்களை நிறைவேற்றுவதற்கு சர்க்கார் முன்வரவேண்டும். 12–57 p.m.

சிறிய நீர்பாசன திட்டங்களை சரியாக மராமத்து செய்வதற்கு தக்க நடவடிக்கைகள் உடனடியாக எடுத்துக்கொள்ள வேண்டும். "ஹில்டிங் ஆப் டாங்ஸ்" குளங்களில் தூரு வாருவதற்கு முக்கியமாக கவனம் செலுத்தவேண்டும். இப்பேர்பட்ட திட்டங்களை உடனடியாக எடுத்துக் கொள்வதற்கு சர்க்கார் முன்வரவேண்டும்.

அதேமாதிரி ஏரிகளையும், அதைச் சேர்ந்த வரவு கால்வாய்களையும் சரிவர மராமத்து செய்யவேண்டும். வரவு கால்வாய்களையும் சரிவர தூர் எடுத்து மராமத்து செய்தல் வெள்ளம்வரும் காலத்தில் அந்த ஏரிகள் நிரம்பும். இதற்காக சரியான ஒரு திட்டம் போடவேண்டும்.

ஏரிகளில் எல்லாம் "புல் டாங்க் லெவல் (**full tank level**) என்று இருக்கிறது. அந்த லெவலை எந்தெந்த இடங்களில் உயர்த்த முடியுமோ அவைகளை உயர்த்துவதற்கு சர்க்கார் முன்வர வேண்டும்.

நம் பிராந்தியத்தில் (சிவாஜமா சாகுபடி அன்ஆதரைஸ்ட் கல்டி வேஷன் காரணமாக பல சச்சரவுகள் நடந்துகொண்டிருக்கின்றன. "அன் ஆதரைஸ்ட் கல்டிவேஷன்" (சிவாஜமா சாகுபடி செய்கிறவர்களை உடனே அப்புறப்படுத்துவதற்கு சர்க்கார் முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும். 6 அல்லது 8 மாதங்களுக்கு தண்ணீர் வரக்கூடிய ஏரிகள் எல்லாம் இந்த ("வாஜமா சாகுபடி அன்ஆதரைஸ்ட் கல்டிவேஷன்" செய்பவர்களின் தொந்திரவுகளால் இரண்டு அல்லது மூன்று மாதத்திற்குக் கூட வருவ தில்லை. ஆகையால் எல்லோருக்கும் கஷ்டமாக இருந்து கொண்டு இருக் கிறது. ஆகையால் இந்த விஷயத்தில் சர்க்கார் உடனடியாக நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

1-00 p.m. பல ப்ராஜெக்ட் வேலைகள் முடிந்ததன் காரணமாக அங்கு உபயோகப் படுத்தப்பட்ட மிஷின்களையெல்லாம் டிசில்ட்டிங்குக்கு (**desilting**) உப யோகப்படுத்திக் கொள்ளலாம். அந்த விதத்தில் இஞ்சினியரிங் டிபார்ட் மெண்டுக்கு ஒரு உத்தரவு போட வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். நம்முடைய பிரதேசத்தில் சுமார் 30 ஆயிரம் ஏரிகள் இருக்கின்றன. அவைகளில் சில சமீபத்தில் மராமத்து செய்திருந்த போதிலும் உடனடி யாக அவைகளை பரிசீலனை செய்து எந்தந்த கிராமங்களுக்கு எந்தந்த நீர் பாசன திட்டங்களை அமைக்க வேண்டுமோ அவைகளை அமைத்துக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். நீர்பாசன திட்டங்களை நாம் எந்த அளவுக்கு முன்னுக்குக் கொண்டுவர முடியுமோ அந்த அளவுக்கு முன்னுக்குக் கொண்டுவரவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் செய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். அதற்கு என்று ஒரு தனியான டிபார்ட்மெண்டை ஏற்படுத்தி அதற்கு என்று ஒரு சூப்ரன்டென்டிங் இஞ்சினியரைப் போட் டால் அது நல்ல முறையில் நடைபெறும் என்பது என்னுடைய அபிப் பிராயம். சிற்சில சப்-டிவிஷன்களை ஏற்படுத்தி அவைகளை கவனிக்க நட வடிக்கைகள் எடுத்துக்கொள்ளவேண்டும். உடனடியாக பஞ்சப் பிரதேசங் களில் ஆரம்பிக்கவேண்டும். செங்கற்பட்டு, வட ஆற்காடு போன்ற பஞ்சப் பிரதேசங்களில் உடனடியாக ஆரம்பிப்பதோடு தமிழ் நாட்டிலுள்ள பஞ்சப் பிரதேசங்களையும் பரிசீலனை செய்து அதை பூர்த்தி செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். சேலம், கோயம்பத்தூர் போன்ற பிரதேசங்க ளுடன் நிற்காமல் தமிழ் நாடு பூராவும் உடனடியாக பரிசீலனை செய்தாக வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இதற்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

பாலாறு திட்டத்தைப் பற்றியும், செய்யாறு திட்டத்தைப்பற்றியும் பல அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள். இவைகளைப் பற்றி நானும் முன்பு அநேகம் தடவைகளில் சொல்லியிருக்கிறேன். கனம் அண்ணாதுரை அவர் களும் இதைப்பற்றி குறிப்பிட்டார். மைசூர் ராஜ்யத்துடன் கலந்து பேசி ஒரு ஒற்றுமையான திட்டத்தை அமைத்து அதை நிறைவேற்ற சர்க்கார்

முன் வரவேண்டும். அதற்காக இந்த சர்க்கார் மத்திய சர்க்காருடைய உதவியையும் நாட வேண்டும். லோனல் கவுன்சிலில் மட்டும் பேசிப் பயன் இல்லே. மத்திய அரசாங்கத்துடன் பேசி இந்த வேலையைப் பூர்த்தி செய்ய முன் வரவேண்டும்.

அடுத்தபடியாக கிணறுகள் வெட்டுவதைப்பற்றி சர்க்கார் நன்ருக பரிசீலனை செய்யவேண்டும். தமிழ் நாட்டில் முன்பு பஞ்சம் ஏற்பட்ட காலத்தில் எல்லா ஜில்லாவிலும் கிணறுகள் வெட்டிக்கொள்வதற்கு சப்சிடி **(subsidy)** கொடுத்து வந்தார்கள். மத்திய அரசாங்கத்தினுடைய உதவியையும் பெற்று ஆயிரக் கணக்கான கிணறுகள் வெட்டப்பட்டு அதன் காரணமாக உணவு உற்பத்தி அதிகப்படுத்தப்பட்டன. அதே மாதிரியான ஒரு ஸ்கீமை **(scheme)** ஆரம்பித்து இரண்டு அல்லது மூன்று ஏக்கர் நிலம் வைத்திருப்பவர்களுக்கு போதுமானபடி சப்சிடி கொடுத்துவந்தால் அவர்கள் கிணறுகளை வெட்டிக்கொள்வதற்கு வசதியாக இருக்கும். அப்படிப் பட்டவர்களுக்கு சப்சிடியாகக் கொடுத்தோ அல்லது கடனுகக் கொடுத்தோ உதவி செய்தால் நன்மையாக இருக்கும். அதற்கு எவ்வளவு தூரம் வேலை செய்ய முடியுமோ அவ்வளவு தூரம் வேலை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இப்பொழுது பெட்டர்மெண்ட் டாக்ஸ் அதாவது நில அபிவிருத்தி வரி என்று போட்டு வசூல் செய்து கொண்டு வருகிருர்கள். பஞ்சப் பிரதேசங்களில் கிணறுகள் வெட்டுவதற்கு சப்சிடி மூலமாகவோ அல்லது கடன் மூலமாகவோ கொடுத்து உதவி செய்து அதை வசூலிக்க வரியைகூட உயர்த்திக்கூட போடலாம், அதனுல் பாதகம் இல்லே. ஆகவே கிணறுகள் வெட்டுவதற்கு முக்கியத்துவம் கொடுத்து இதை உடனடியாக ஆரம்பிக்க வேண்டும் என்று கனம் மந்திரி அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். இப்படி அதிகப்படியான கிணறுகளை வெட்டினுல் அதிகமாக உணவு உற்பத்தியாகும். அதில் மக்களுடைய பங்கும் நிறைய இருக்கும் என்பதை நான் அதிகமாகச் சொல்ல வேண்டியதில்லே.

**(Deputy Speaker in the Chair.)**

தவிர ஒவ்வொரு ஜில்லாவிலுள்ள சிறு சிறு திட்டங்களைப்பற்றி பல அங்கத்தினர்கள் எடுத்துச் சொன்னுர்கள். அவைகளையெல்லாம் உடனடியாக எடுத்து நிறைவேற்றவேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார்கள். பரம்பிக்குள திட்டத்திற்கு மூன்று, நாலு கோடி ரூபாயாகும், சின்னச் சின்ன திட்டங்களையெல்லாம் எடுத்துக்கொண்டால் பரம்பிகுளம் திட்டத்தை எடுத்துக்கொள்வதற்கு இடையூருக இருக்கும், அதனுல் சர்க்கார் யோசித்துக்கொண்டிருக்கிருர்கள் என்ற அபிப்பிராயத்தில் பல அங்கத்தினர்கள் பேசினுர்கள். பொது ஜனங்களுடைய அபிப்பிராயமும் அப்படித்தான் இருக்கிறதாக தெரிய வருகிறது. கேரள ராஜ்யத்துடன் பேசி அந்த திட்டத்தை எடுத்து நடத்துவதைப் பற்றி நாங்கள் ஆட்சேபிக்கவில்லே. அந்த திட்டத்திற்கு பணம் வேண்டும் என்ற காரணத்தால் மற்ற திட்டங்களை நிறுத்தி வைக்கக்கூடாது என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம். கிணறுகளை வெட்டுவதற்கு நாம் எவ்வளவு தூரம் ஆராய்ச்சி செய்ய வேண்டும் என்று நினைக்கிறேமோ அவ்வளவு தூரம் ஏரிகளை மராமத்து செய்துகொள்வதற்கும் ஆராய்ச்சி செய்யவேண்டும். மத்திய அரசாங்கத்துடன் சரிவர விவாதித்து பணம் பெருவதற்கு வழி தேடிக் கொள்ள வேண்டும். லோனல் கவுன்ஸிலில்மட்டும் பேசிப் பயன் இல்லே. நமக்கு வேண்டிய போதுமான பணத்தை மத்திய அரசாங்கத்தினிடமிருந்து பெறுவதற்கு நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும். நாம் ஜில்லா போர்டுகளுக்கு சிறிய உதவி அளிப்பது போன்ற நிலேமை ஏற்படாதபடி மத்திய அரசாங்கத்தினிடமிருந்து போதுமான உதவி பெருவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும். அப்படி மத்திய சர்க்கார் நமக்கு உதவி அளிக்காமல் இருப்பதைப் பார்த்தால் வருத்தப்பட வேண்டியதாக இருக்கிறது. டில்லிக்குப்போய் டிபார்ட்மெண்ட் அதிகாரிகளைக் கண்டு பேசிவிட்டு வராமல் அங்குள்ள மந்திரிகளுடனும், பிரதம மந்திரியுடனும் கலந்து

பேசி நமக்கு வேண்டிய உதவியைப் பெற்றுக்கொண்டு வரவேண்டும். அங்குள்ள செக்ரட்டரியையும் டிபார்ட்மெண்டிலுள்ளவர்களையும் கண்டு பேசி விட்டு வருவதில் எந்த விதமான பிரயோசனமும் இல்லை. இங்குள்ள அங்கத்தினர்கள் எவ்வளவோ திட்டங்களை எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். அவர்களிடமிருந்து பண உதவி பெற்று இங்கு சொல்லப்பட்ட திட்டங்களை எல்லாம் எடுத்து நிறைவேற்ற வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படி எடுத்துக்கொண்டு கூடிய சீக்கிரத்தில் அவைகளையெல்லாம் பூர்த்தி செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய வார்த்தைகளை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

* **THE HON. SRI P. KAKKAN :** மதிப்பிற்குரிய கனம் உதவி சபா நாயகர் அவர்களே, சென்னை அரசாங்கம் நீர்பாசன திட்டத்தை நல்ல முறையில் மக்களின் நன்மைக்காக எவ்வாறு உதவி செய்ய வேண்டுமோ அதற்கு இணங்கி பல திட்டங்களைப்போட்டு, அவைகளை நிறைவேற்றி வருவதைப்பற்றிய அறிக்கை ஒன்றை முன்னதாகவே அங்கத்தினர்களுக்கு சமர்ப்பிக்கப்பட்டது. நீர்பாசன திட்டம் மிகவும் சிறந்தது, அது மக்களுக்கு எப்படி பயன்படக்கூடியதாக இருக்கவேண்டும் என்பதில் அங்கத்தினர்களைக் காட்டிலும் அரசாங்கம் அதிக அக்கரை எடுத்துக்கொண்டு வருகிறது என்பதை திட்ட வட்டமாகச் சொல்ல நான் ஆசைப்படுகிறேன். மதிப்பிற்குரிய அங்கத்தினர்கள் பேசும்போது அவர்கள் தொகுதியிலுள்ள பல ஏரிகளைப்பற்றியும் ஆறுகளைப்பற்றியும் அந்த ஆறுகளைத் தடுத்து நிறுத்தி வைத்தால் அது மக்களுக்கு எவ்வாறு பயன் அளிக்கும் என்ற வரலாற்றைப்பற்றியும் தெரிவித்தார்கள். உண்மையிலேயே ஒரு திட்டத்தை எடுத்துக்கொள்வதாக இருந்தால் அதனால் பெரிய பயனை அடைந்தாலும் அல்லது அடையாவிட்டாலும்கூட அதனால் ஏற்படக்கூடிய வரவுக்கும் செலவுக்கும்—லாபம் பெற வேண்டும் என்ற எண்ணம் இல்லாவிட்டாலும்—வரவுக்கும் செலவுக்கும் சரிகட்டக்கூடிய அளவில் இருந்தால் அந்த திட்டங்களையெல்லாம் எடுத்து நடத்த அரசாங்கம் பின் நிற்காது என்பதை உங்களுடைய மத்தியில் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். மதிப்பிற்குரிய அண்ணாதுரை அவர்கள் பேசும்போது பாகல்மேடு திட்டத்தைப்பற்றி பட்ஜெட் பிரசங்கத்தில் குறிப்பிட்டது மாதிரி இப்பொழுதும் குறிப்பிட்டுள்ளார். ஏனென்றால், அவருக்கு அந்த திட்டத்தில் நம்பிக்கை இல்லாமல் இருப்பதால் அதைப்பற்றி குறிப்பிட்டார். இந்த நாடு விடுதலை அடைந்துவிடும் என்ற நம்பிக்கைகூட இல்லாமல் இருந்தவர் அவர். அதைப்போல் இல்லாமல் பாகல்மேடு திட்டத்தில் நம்பிக்கை வைக்கவேண்டும் என்று நான் திராவிட முன்னேற்றக் கழக தலைவரையும் அவர்களைச் சார்ந்த அங்கத்தினர்களையும் கேட்டுக்கொள்ளுகிறேன். ஒரு திட்டத்தை எடுத்து நடத்தவேண்டும் என்றால் அதையே பதினைந்து நாட்களுக்கு உட்கார்ந்து கொண்டு நடத்திவிட முடியாது. அப்படி நடத்தினால் அதே வேலையாக இருக்கிறார்கள், மற்ற வேலைகளை கவனிப்பது இல்லை என்று கேள்வி கேட்பார்கள். மற்ற வேலைகளுடன் அந்த வேலையையும் எடுத்து நடத்திக் கொண்டு வந்தால் இந்த வேலையில் கவனம் செலுத்தவே இல்லை என்று கேள்வி கேட்பார்கள். எந்தந்த திட்டங்களை எந்தந்த முறையில் நடத்த முடியுமோ அந்தந்த முறையில்தான் நடத்தவேண்டும். அதனால் பாகல்மேடு வரலாற்றைப்பற்றி பேசுவதில் பிரயோசனம் இல்லை என்பதை கனம் அண்ணாதுரை அவர்களுக்கு தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகிறேன். மற்றும் அவர் பேசும்போது கனம் முத்தையா செட்டியார் அவர்கள் பேசியதைப்பற்றி குறிப்பிட்டார். **(same side goal)** அடித்தால் யாருக்குமே சிரிப்புத்தான் வரும். அதைப்போலவே இருக்கிறது கனம் அண்ணாதுரை அவர்கள் கனம் முத்தையா செட்டியார் அவர்கள் பேசியதைப்பற்றி குறிப்பிட்டது. கனம் செட்டியார் அவர்கள் பேசும்போது குறிப்பிட்டார் "சட்டசபை நடவடிக்கை நடக்கும்போது விவாதம் சம்பந்தப்பட்ட மந்திரிதான் இருப்பார், மற்றவர்கள் இருக்கமாட்டார்கள்" என்று சொன்னதைக் குறிப்பிட்டார். அதற்கு அவர்களுக்கு நான் என்ன பதில் சொல்லிகிறேன் என்றால் மந்திரிகள் இங்கு இல்லாவிட்டாலும் அவ

களுடைய அறைகளில் இங்கு பேசுவதைக் கேட்கும்படியான வசதி செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது, அதன் மூலமாக அவர்கள் அங்கிருந்துகொண்டே இங்கு நடப்பதைக் கேட்டுக்கொண்டிருப்பார்கள். கனம் அங்கத்தினர்கள் அந்த அறைகளுக்குச் சென்று மந்திரிகளுடன் பேசும் சமயங்களைத் தவிர மற்ற நேரங்களில் எல்லாம் அவர்கள் கேட்டுக்கொண்டுதானிருப்பார்கள். இங்கு என்ன பேசப்படுகின்றன என்பதையெல்லாம் மந்திரிகள் கவனித்துக் கொண்டுதான் வருகிறார்கள். மராமத்து மந்திரி என்னென்ன திட்டங்களையெல்லாம் கொண்டுவரவேண்டும் என்று சொல்லுகிறாரோ அதற்கெல்லாம் ஆதரவு கொடுக்க வேண்டும் என்ற நிலைமையில் அவர்கள் இருக்கிறார்கள் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன். இப்படிச் சொல்லுவதற்கு ஒரு பழமொழி என்னுடைய ஞாபகத்திற்கு வருகிறது. "வெறும் வாயை மெல்லுகிறவளுக்கு அவல் அகப்பட்டால் சும்மா இருப்பாளா" என்று சொல்வதுண்டு. யாராவது குற்றம் சொல்வதாக இருந்தால் அதை பயன்படுத்திக்கொண்டு பேசுவதாக இருக்கிறது. கனம் முத்தையா செட்டியார் என்ன சொன்னார் என்றால் மத்திய சர்க்காரை அணுகி இன்னும் அதிகப்படியாக பணம் பெறவேண்டும் என்றும் சொன்னார். உண்மையிலேயே ஒரு திட்டத்தை எடுத்து நடத்தவேண்டுமென்றால் அதை எவ்வாறு செய்ய வேண்டும் என்பதை நாம் நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டும். முதல் முதலாக ஒரு திட்டத்தை எடுத்துக்கொண்டால் அந்த திட்டத்தின்மூலம் கிடைக்கும் தண்ணீர் குறைந்த பட்சம் ஒரு வருஷமாவது கிடைக்கும்படியான நிலையில் இருக்கவேண்டும். அணைகளைக் கட்டிவிட்டு தண்ணீர் வரவில்லை என்று சொன்னால் செலவு செய்யப்பட்ட பணம் பிரயோசனம் இல்லாமல் போய்விடும். அதனால் திட்டங்களை நன்றாகப் பரிசீலனை செய்து பார்க்கவேண்டியதாக இருக்கிறது. நாம் ஒரு அணைக்கட்டு கட்டுவதாய் இருந்தால், அதைப் பரிசீலனை செய்து மக்களுக்கு பயன்படும்படி கட்டவேண்டுமே ஒழிய, வீணாக அழகுக்காக அணைகட்டுவதில்லை என்ற தன்மையை தெரிவித்துக்கொள்ளுகிறேன். எங்கெல்லாம் 1-10 p.m. அணைக்கட்டுகள் கட்டவேண்டுமோ அவைகளையெல்லாம் பரிசீலனை செய்து கொண்டிருக்கிறோம். திருச்சியில் ஒரு டிவிஷனை ஏற்படுத்தி சிறிய நீர்ப்பாசன திட்டங்கள் எங்கெல்லாம் இருக்கிறதோ, அவைகளையெல்லாம் பரிசீலனை செய்வதற்கு அரசாங்கம் முடிவு செய்திருக்கிறது. இதற்காக ஒரு தனி டிவிஷன் அமைத்து ஒரு "சூபரின்டெண்டிங் என்ஜினியர்" போட்டு எங்கெல்லாம் சிறிய அணைகளை கட்ட முடியுமோ அதையெல்லாம் எடுத்துக்கொள்ளவேண்டும் என்று நான் ஏற்பாடு செய்திருக்கிறேன். அங்கத்தினர்கள் அநேக சிறிய அணைக்கட்டுகளைப்பற்றி சொன்னார்கள். எந்தந் திட்டங்களெல்லாம் சாதகமாக இருக்கிறதோ, நிறைவேற்ற முடியுமோ, அவைகளையெல்லாம் செய்வோம் என்பதை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். கனம் கருணாநிதி அவர்கள் குடவனாறைப்பற்றி போன வருஷம் சொன்னார்கள். இன்றையதினமும் மீண்டும் சொன்னார்கள். எல்லா ஜில்லாக்களையும் அவர்கள் தொட்டுப் பார்த்திருக்கிறார்கள், எல்லா ஜில்லாக்களையும் பற்றி பேசியிருக்கிறேன் என்று சொல்லிக்கொள்ளுவதற்காக. பரவாயில்லை. எப்படியிருந்தாலும் நல்லதைச் சொன்னால் அதைக் கேட்பதற்கு தயாராக இருக்கிறேன். அவர்கள் பேசும்பொழுது கல்லணையை கரிகாலச் சோழன் காலத்தில் சொற்ப செலவில் கட்டி முடித்தார்கள் என்று சொன்னார்கள். நானும் சொல்லுவேன். காவேரியிலுள்ள "அப்பர்" அணைக்கட்டு அந்தக்காலத்தில் சொற்பச் செலவில் கட்டப்பட்டதுதான். ஆனால் அந்தக்காலத்திய நிலைமையையும் இப்பொழுது இருக்கும் நிலைமையையும் ஒப்பிட்டுப் பார்க்க முடியாது. அந்தக்காலத்தில் சொற்ப செலவில் கட்ட முடிந்திருக்கலாம். ஆனால் இந்தக்காலத்தில் கூலியை குறைத்துக் கொடுத்தால், உடனே எதிர்க்கட்சியில் உள்ளவர்களே இதை எதிர்த்து கிளர்ச்சி செய்யும்படி ஊழியர்களை தூண்டி விடுவார்கள். கரிகாலச் சோழன் காலத்தில் இப்படிப்பட்ட கட்சிகளையே பார்த்தது கிடையாது. அந்தக் காலத்தில் மக்கள் ஆக்க வேலையில் ஈடுபட்டு ராஜாக்களுக்கு பக்கபலமாக பணியாற்றி வந்தார்கள். அம்மாதிரி நிலைமை

இப்பொழுது இல்லே. ராஜா மண்வெட்டியை எடுத்துக்கொண்டு வர வேண்டுமென்று சொன்னுல், சொன்னபடி வருவான். ஆனுல் இப் பொழுது பல கோடி ரூபாய் செலவு செய்து மக்களுக்கு அள்ளிக்கொடுத்து அணைக்கட்டுகளை கட்ட வேண்டியிருக்கிறது.

**Sri C. N. ANNADURAI :** அந்தக்காலத்தில் கடவுளே தொழி லாளியாக வந்தபொழுது சரியாக வேலே செய்யவில்லே என்று புராணம் சொல்லுகிறது.

**Sri P. G. KARUTHIRUMAN :** உங்களுக்குத்தான் புராணத்தில் நம்பிக்கையில்லேயே ?

**The Hon. Sri P. KAKKAN :** நமது 'சீப் வீப்' கருத்திருமன் அவர் கள் சொல்லியபடி அவர்களுக்கு புராணத்தில் நம்பிக்கையில்லே. ஆனுல் வேண்டும்போது அதை உதாரணமாக எடுத்துக்கொள்ளுவார்கள். வேண் டாதபோது விட்டுவிடுவார்கள். கனம் அண்ணுதுரை அவர்கள் பேசும் போதுகூட பகீரதன் பிரயத்தனம் செய்த புராண வரலாற்றினே எடுத்துச் சொன்ஞர்கள்.

**Sri A. GOVINDASAMY :** உங்களுக்கு அதில் நம்பிக்கை இருக்கிறது.

**The Hon. Sri P. KAKKAN :** எங்களுக்கு நம்பிக்கை இருக்கிறது என்ருல், அதை நீங்கள் எடுத்துக்காட்ட வேண்டியதில்லே. கனம் கருணு நிதி அவர்கள் ஒன்றுமே செய்யவில்லே என்று சொன்ஞர்கள். செய் ததைச் சொல்லிவிட்டால் தங்கள் கட்சிக்கு பலம் குறைந்துவிடும் என்ற காரணத்தினுல் அவர்கள் செய்ததை சொல்லாமல் விட்டு விட்டார் போலும். உள்ளதை உள்ளவாறு சொல்லி உங்கள் கட்சிக்கு பலம் தேடிக்கொள்ளு வதாயிருந்தால் பரவாயில்லே. நம்முடைய அரசாங்கம் அதிகப்படியாகவே செய்திருக்கிறது என்பதை உங்கள் மத்தியில் சொல்லிக்கொள்ள ஆசைப் படுகிறேன். சிறிய நீர்ப்பாசன திட்டங்களுக்காக நாம் மத்திய அரசாங்கத் திடமிருந்து அதிகமான தொகையை பெற்றிருக்கிறேம். "அனுமதி கேட் டிருக்கிறேம்" என்று நாங்கள் சொல்லுவதாக அண்ணுதுரை அவர்கள் சொன்ஞர்கள். அனுமதி கேட்காமல் என்ன அடித்தா கேட்பது ? நாங் கள் எவ்வளவு எதைச் சொல்லி எதை உரைத்தாலும் எதிர் தரப்பிலுள்ள வர்களுக்கு நம்பிக்கை வருவதில்லே. (குறுக்கிடு.)

**DEPUTY SPEAKER : Hon. members should not interrupt.**

**The Hon. Sri P. KAKKAN :** சிறிய நீர்ப்பாசன திட்டங்களே நிறை வேற்றுவதற்கு மத்திய சர்க்காரிடமிருந்து உதவியை பெற்றிருக்கிறேம். குறிப்பாக நமது தாயகத்தோடு சேர்ந்த கன்னியாகுமாரியில் உள்ள கண் மாய்கள் துரு அடைந்து நீர்மட்டம் மிகவும் குறைவாக இருக்கிறது. அவைகளே மிகவும் ஆழப்படுத்தி, ஒரு போகம் விளேவதை இருபோகமாக விளேயும்படிச் செய்வதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்திருக்கிறது. அது மட்டுமல்ல, எங்கெல்லாம் பி.டபிள்யூ.டி. ஏரிகள், கண்மாய் இருக்கின் னவோ, அவைகளேயெல்லாம் தூரெடுத்து செப்பனிடுவதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்திருக்கிறது. பி.டபிள்யூ.டி. கண்மாய்களில், ஏரிகளிலே பல வகைகள் உண்டு. கனம் அங்கத்தினர் பெரியகருப்பனம்பலம் சொல்லிய மாதிரி ஏ-1, ஏ-2 என்று இரண்டு பிரிவுகள். உண்டு. ஏ-1 கண்மாய்களே பி.டபிள்யூ.டி. மூலமாக செப்பனிடுவது உண்டு. ஏ-2 என்பது 200 ஏக்கருக்கு குறைவாக தண்ணீர் பாயக்கூடிய ஏரியா. அதை கலெக்டர் அவர்கள் பார்த்து செப்பனிடுவதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். இருந் தாலும், அப்படிப்பட்ட 200 ஏக்கருக்குள்ளாக பாயும் ஏரிகள். கண்மாய் கள் செப்பனிடப்பட வேண்டியிருந்தால், அதை அரசாங்கத்தின் கவனத் திற்கு கொண்டுவந்தால், அவைகளே தூரெடுத்து செப்பனிடுவதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்யும். எதிர்க்கட்சித் தலேவர் கனம் ராமசுவாமி முதலியார் அவர்கள் ஏரிகளுக்கு வரக்கூடிய கால்வாய்களே செப்பனிட

வேண்டுமென்று சொன்னார்கள். அவைகளை அரசாங்கம் அதிக கவனத்தோடு பார்த்துக்கொண்டு வருகிறது. வரத்துக் கால்வாய்கள் மண்மேடிட்டு இருந்தால், அவைகளையெல்லாம் அப்புறப்படுத்தி, மழை பெய்யும் போது ஆறுகளில் இருக்கும் தண்ணீரை ஏரிகளுக்கு கொண்டுவருவதற்கு எல்லாவிதமான ஏற்பாடுகளையும் அரசாங்கம் செய்துவருகிறது. கண்மாய்கள், சிறு ஏரிகளைப்பற்றி கனம் ராமச்சந்திரன் போனமுறை சொன்னார். ஏரிகளுக்கு பின்னால் இருக்கக்கூடிய நிலங்களுக்கு எவ்வளவு தூரம் தண்ணீர் கொடுக்கமுடியும், "காட்ச்மெண்டு ஏரியா" எவ்வளவு என்பதையெல்லாம் பரிசீலனை செய்துபார்த்து, அதுபோக வீணாக இருந்தால் மீதம் உள்ள நிலங்களை அங்கு உள்ள மக்களுக்கு கொடுப்பதுபற்றி பரிசீலனை செய்யப்பட வேண்டியிருக்கிறது. அந்தக் கண்மாயை நம்பி வாழும் மக்களுக்கு பாதகம் இல்லாமல் எதைச் செய்யவேண்டுமோ அதைச் செய்வதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்திருக்கிறது. வரத்துக்கால், கண்மாய்கள் இவைகளையெல்லாம் எந்த முறையில் செப்பனிட வேண்டுமோ, அதையெல்லாம் அரசாங்கம் கவனித்துக்கொண்டு வருகிறது.

**SRI V. K. RAMASWAMY MUDALIYAR** : சர்க்கார் பல காரியங்களை செய்திருப்பதாகவும், செய்யப்போவதாகவும் அமைச்சர் அவர்கள் கூறுகிறார்கள். அநேக அங்கத்தினர்கள் சில முக்கியமான திட்டங்களைப்பற்றி சொல்லியிருக்கிறார்கள். அந்தந்த பிராந்தியங்களிலுள்ள சட்டசபை அங்கத்தினர்களைப்போட்டு, அந்தக் கமிட்டி கூட்டத்திற்கு என்ஜினியர்களையும் வரவழைத்து, கலந்து விவாதித்து எந்தெந்த திட்டங்கள் சாத்தியமோ அவைகளை எடுத்துக்கொள்ளுவதற்கு அப்பொழுதே அமைச்சர் அவர்கள் உத்தரவு பிறப்பித்தால் நலமாக இருக்கும் என்பது என்னுடைய அபிப்பிராயம்.

**THE HON. SRI P. KAKKAN** : ஒவ்வொரு பட்ஜெட் விவாதத்தின் போதும் அங்கத்தினர்கள் பேசுவதையெல்லாம் அரசாங்கம் குறிப்பெடுத்து, அவைகளைப் பரிசீலனை செய்து எவைகளெல்லாம் சாத்தியமோ, சாதகமாக இருக்கிறதோ அவைகளையெல்லாம் நிறைவேற்றுவதற்கு முயற்சி எடுத்துக் கொள்ளுகிறது. ஆதலால், அதற்காக எதிர்க்கட்சி அங்கத்தினர்களைக் கொண்ட ஒரு கமிட்டி போடவேண்டியதில்லை என்று நான் நினைக்கிறேன். ஒவ்வொரு ஜில்லாவிலும் இதற்காக நீர்ப்பாசன அட்வைஸரி கமிட்டி போட்டிருக்கிறோம். மாகாண ரீதியிலும் ஒரு கமிட்டி ஏற்படுத்தியிருக்கிறோம். அந்தக் கமிட்டியிடத்தில் அங்கத்தினர்கள் தங்களுடைய குறைகளை சொல்லி நிவர்த்தி செய்துகொள்ளலாம். அதற்காக தனியாக ஒரு கமிட்டி அமைக்க வேண்டுமென்றால், அது இயலாது. அதற்காக ஒரு தனி கமிட்டி அமைப்பது நலமாக இருக்காது. அப்படிச் செய்தால் அரசாங்கத்தினிடம் நம்பிக்கை இல்லை என்றுதான் நினைக்கவேண்டியிருக்கும். ஜில்லாவிலுள்ள எல்லா எம்.எல்.ஏக்களும் இந்த அட்வைஸரி கமிட்டி கூட்டத்திற்கு போகலாம். அங்கே உங்களுடைய குறைகளை சொல்லி கொள்ளலாம். அப்படிச் சொல்லியும் கவனிக்கப்படாவிட்டால், பிறகு அரசாங்கத்தின் கவனத்திற்கு அதைக் கொண்டுவந்தால், அரசாங்கம் அதை கவனிக்கும் என்பதை மிகவும் தாழ்மையோடு சொல்லிக்கொள்ள ஆசைப் படுகிறேன்.

நல்லசிவம் அவர்கள் பேசும்பொழுது பவானி ஆற்று நீர்ப்பாசன குறைகளைப்பற்றி சொன்னார்கள். அங்கே உள்ள குளங்களையெல்லாம் செப்பனிடுவதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்துகொண்டுதான் இருக்கிறது. வரத்துக் கால்வாய்களையும் செப்பனிடுவதற்கு ஏற்பாடு செய்துகொண்டுதான் இருக்கிறது. 1-20 p.m. அவர் சோஷலிஸ பாணியில் ஒரேமாதிரி வரி ஏற்படுத்த வேண்டும் என்ற தொனியில் பேசியிருப்பது சரியல்ல. லோயர் பவானி அணைக்கட்டு பிரதேசத்திலும், தஞ்ஜாவூரிலும் ஒரே ரேட் வைத்தால் அது மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் போல் இருக்கும். எங்கு நிலத்தின் வளப்பமை அதிகமாக இருக்கிறதோ, அதிகப்படியான விளைவு இருக்கிறதோ, அதற்குத் தகுந்த மாதிரிதான் ரேட் போட முடியும். காடாரம்ப பிரதேசத்

திற்கும், மற்ற இடங்களுக்கும் ஒரே ரேட் போட முடியாது. இடத்திற்கு தகுந்தாற்போல்தான் ரேட் இருக்க முடியும். புதியதாக நீர்ப்பாசன திட்டம் நிறைவேற்றப்பட்ட இடத்திற்கும் மற்ற இடங்களுக்கும் ஒரே ரேட் போடுவது சாத்தியமல்ல. மாகாணம் பூராவும் ஒரேமாதிரியான ரேட் போட முடியாது என்பதை தெரிவித்துக்கொள்ளுகிறேன். கீழ் பவானி அணைக் கட்டுப் பிரதேசத்தில் விதிக்கப்படும் வரியைப் பொறுத்தவரையிலும், கோவை ஜில்லாவிலுள்ள பவானி, கோபிச்செட்டிப்பாளையம் தாலூக்காக்களைச் சேர்ந்த விவசாயிகளும், இதர தாலூக்காக்களிலுள்ள விவசாயிகளும் சேர்ந்து ஒரு மகாநாடு நடத்தினார்கள். சென்ற வருஷம் ஒரு மகாநாடு நடத்தினார்கள். சமீபத்தில்கூட ஒரு மகாநாடு நடத்தினார்கள். பயிரின்மீது வரி விதிக்கக்கூடாது என்றும், நிலங்களின் தரங்களை நிர்ணயித்து நிலத் தின்மீது வரி விதிக்க வேண்டுமென்றும் அவர்கள் சொன்னார்கள். அதை அரசாங்கம் பரிசீலித்தது. அதேமாதிரி அரசாங்கம் நிலங்களை தரவாரி யாகப் பிரித்து வரி விகிதத்தை நிர்ணயித்தது. நஞ்சை நிலங்களுக்கு ஏக்கர் ஒன்றுக்கு 20 ரூபாய் வரி விதிக்க வேண்டுமென்றும், தோட்ட நிலங் களுக்கு 17-3/4 ரூபாய் வரி விதிக்க வேண்டுமென்றும், புஞ்சை நிலங்களுக்கு (ட்ரை லாண்ட்ஸ்) 11¼ ரூபாய் வரி விதிக்க வேண்டுமென்றும் அரசாங்கம் தீர்மானித்தது. விவசாயிகள் மகாநாடு நடத்தினார்கள். அந்த விவசாயி களுடன் கலந்தாலோசித்துத்தான் அரசாங்கம் இந்த விகிதங்களை நிர்ணயித் திருக்கிறது. அப்படியிருக்கும்போது இந்த விகிதங்களைப்பற்றிக் குறை கூறுவது சரியல்ல. அங்கே எந்த நிலங்களிலும் எதை வேண்டுமானாலும் பயிர்செய்துகொள்வதற்கு அனுமதிக்க வேண்டுமென்று இப்போது சொன் னால் அதை எவ்வாறு அனுமதிப்பது ? சமீபத்தில் நாங்கள் ஓரளவிற்கு அனுமதித்திருக்கிறோம். ஆற்றங்கரையில் நிறையப் பம்புகளை வைத்து விட்டால் கால்வாயில் எல்லா இடங்களிலும் தண்ணீர் போகாது. கடைக் கோடியில் இருக்கும் நிலங்களுக்கு பாதகமில்லாத முறையில் கிணற்றுப் பாசனம் இருக்குமானால் அதை ஓரளவு அனுமதித்திருக்கிறோம். பருத்தி போன்ற மிகவும் லாபகரமான பயிர்களுக்கு 11¼ ரூபாய் விதித்தால் அதைக் கொடுப்பதில் அந்த விவசாயிகளுக்கு என்ன கஷ்டம் இருக்கிறது ? ஸ்ரீ. கருத்திருமன் அங்குள்ள விவசாயச் சங்கத்தின் காரியதரிசி. அந்த விவசாயிகள் இந்த விகிதங்கள் நிர்ணயிக்கப்படுவதற்கு முன்பு பெரிய போராட்டம் நடத்தினார்கள். ஸ்ரீ சேனபதி கௌண்டர், ஸ்ரீ கருத்திருமன் முதலியவர்களுடனும், மற்ற விவசாயிகளுடனும் சேர்ந்து கலந்தாலோசித் துத்தான் நாங்கள் இந்த முடிவுக்கு வந்தோம். கீழ் பவானி ஆயக்கட்டு தாரர்களுக்குக் கெடுதல் செய்ய நாங்கள் விரும்பவில்லை. அவர்களுக்கு நாங்கள் கெடுதல் செய்வதாக கனம் அங்கத்தினர் ஸ்ரீ நல்லசிவம் நினைக்கக்கூடாது. தங்கள் கட்சிக்கு பலம் தேடுவதற்காக பிரசாரம் செய்யும் நோக்கத்துடன் இந்த விகிதங்களைக்குறித்து அபிப்பிராயம் தெரிவிக்கக் கூடாது. காங்கிரஸ் அரசாங்கத்தார் நிர்ணயித்திருக்கும் விகிதம் அதிக மானது என்று சொல்லவேண்டும் என்ற நோக்கத்துடன், காங்கிரஸ் அரசாங் கத்தார் 11¼ ரூபாய் விதிக்கிறார்கள் ; 10 ரூபாய்தான் விதிக்க வேண்டு மென்று சொல்வது சரியல்ல. அரசாங்கத்தார் ஒன்றிற்குப் பத்துத் தடவை கள் சிந்தித்ததுடன், விவசாயிகள் மகாநாட்டின் தீர்மானத்தைப் பரிசீலித் துத்தான் இந்த விகிதத்தை நிர்ணயித்திருக்கிறார்கள்.

மதிப்பிற்குரிய அங்கத்தினர் ஸ்ரீ நேசமணி கன்னியாகுமாரி ஜில்லா சம்பந்தப்பட்ட முக்கியமான நீர்ப்பாசனத் திட்டங்களை குறிப்பிட்டார்கள். நெய்யாற்றங்கரை "லெப்ட் பாங்க் சானல்" யைப்பற்றிச் சொன்னார்கள். அதையும் எடுத்துக்கொள்ளவேண்டுமென்றுதான் அரசாங்கத்தார் தீர்மானித்திருக்கிறார்கள். அது திருவாங்கூர் கொச்சி ராஜ்யத்தில் அந்த ஜில்லா இருந்தபோதே அந்தத் திட்டம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஒரு திட்டத்தை எடுத்துக்கொள்வதென்றால், அது லாபகரமான திட்டமாக இருக்குமா என்று மந்திரிகளும், கனம் அங்கத்தினர்களும் தீர்மானிக்க முடியாது. அதைத் தீர்மானித்து அபிப்பிராயம் கூறுவதற்கு எஞ்ஜி னியர்கள் இருக்கிறார்கள். அவர்கள் கூறும் அபிப்பிராயத்தை அறிந்த

பிறகுதான் திட்டத்தை எடுத்துக்கொள்ளலாமா வேண்டாமா என்று முடிவுசெய்யமுடியும். ஆகவே உடனடியாக எந்தத் திட்டத்தையும் எடுத்து கொள்ளமுடியாது. சிற்றாறு, பட்டணங்கால் ஏரிகளைப்பற்றி ஸ்ரீ நேசமணி குறிப்பிட்டார். அது நல்ல திட்டம். அதை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்காவிட்டாலும், பின்னராவது எடுத்துக்கொள்வதற்கு அரசாங்கம் முயற்சி செய்யும். ஆகவே அந்தத் திட்டத்தை அரசாங்கம் பரிசீலனை செய்யும். வீணாகப் போகும் தண்ணீரை மக்களுக்கு பயனளிக்கும்படி செய்வதற்கான திட்டங்களை வகுப்பதில் அரசாங்கம் ஒருபோதும் பின்வாங்காது என்பதை உறுதியாகச் சொல்லிக்கொள்கிறேன்.

மதிப்பிற்குரிய அங்கத்தினர் ஸ்ரீ சுப்பையா முதலியார் இன்று ஆத்திரத்தோடு பேசினார். மக்களுக்கு இருக்கும் கஷ்டத்தை விளக்குவதற்காகத் தான் அவர் அவ்வாறு பேசினார் என்று நினைக்கிறேன். சில திட்டங்களை அரசாங்கம் எடுத்துக்கொள்ளவில்லை என்று சில எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் கூறினார்கள். அரசாங்கம் லாபகரமான திட்டங்களை முதலில் நிறைவேற்ற விரும்புகிறது. அப்படிச் செய்வதுதான் சரி. நஷ்டம் ஏற்படக்கூடிய திட்டங்களை எடுத்துக்கொண்டால் "லாபகரமான இதர திட்டங்கள் இருக்கும்போது அவைகளை ஆரம்பித்தீர்களே" என்று சொல்வார்கள். ஆகவே நாங்கள் ராஜ்யத்திலுள்ள லாபகரமான திட்டங்களையே முதலில் எடுத்துக்கொள்ளுகிறோம். எனவே, திட்டங்கள் எடுத்துக்கொள்ளப்படுவதை ஜில்லா மனப்பான்மையுடன் பார்க்கக்கூடாது என்று கனம் அங்கத்தினர்களைக் கேட்டுக்கொள்கிறேன். கோயம்புத்தூர் ஜில்லாவில் என் பரம்பிக்குளம் திட்டத்தை இப்போது எடுத்துக்கொள்கிறோம் என்றால், அந்தத் திட்டத்தில் மழை பெய்யும் பகுதிகள் எல்லாம் நம் ராஜ்யத்தில் இருக்கின்றன. எனவே அத்திட்டம் நமக்கு மிகவும் சாதகமான திட்டம். இந்தக் காரணத்தால்தான் அந்தத் திட்டத்தை முதலில் எடுத்துக்கொண்டோம். 3 லட்சத்திற்கு மேற்பட்ட ஏக்கராக்களில் தண்ணீர் பாய்வதற்கு வகைசெய்யக்கூடியது அந்தத் திட்டம். மிகவும் வரண்ட பிரதேசங்களாகிய பொள்ளாச்சி, பல்லடம், உடுமலைப்பேட்டை முதலிய தாலூகாக்கள் அந்தத் திட்டத்தால் பயனடையும். கனம் நிதி அமைச்சர் கோயம்புத்தூர் வாசியாக இருப்பதால் கோயம்புத்தூருக்குப் பயனளிக்கும் திட்டங்கள் எடுத்துக்கொள்ளப்படுகின்றன என்றும் இதர திட்டங்கள் புறக்கணிக்கப் படுகின்றன என்றும் ஸ்ரீ. சுப்பையா முதலியார் குறிப்பிட்டார். இது மிகவும் வருந்தத்தக்கது.

**Sri A. R. SUBBIAH MUDALIAR** : நான் அவ்வாறு சொல்லவில்லை. பஞ்சம் தாண்டவமாடுகிறது, இரக்கம் காட்டுங்கள் என்று தான் சொன்னேன்.

**The Hon. Sri P. KAKKAN** : ஸ்ரீ சுப்பையா முதலியார் என்று தவறுதலாகச் சொல்லிவிட்டேன். ஸ்ரீ. சுப்பையா நாயக்கர் அவ்வாறு சொன்னார்.

ஓரியாறு திட்டத்தைப் பொறுத்த வரையில், அது சம்பந்தமாக எஞ்சினியர்களின் அபிப்பிராயத்தைக் கேட்டோம் என்று ஸ்ரீ. சுப்பையா முதலியாரிடம் நான் முன்பே சொல்லியிருக்கிறேன். அது கொஞ்சம் லாபகரமில்லாத திட்டம்தான். பம்பையாறு திட்டத்தை எடுத்துக்கொண்டால், அது அதிகப் பயனளிக்கும் திட்டமாக இருக்கும் என்று தோன்றுகிறது. நீர்ப்பாசன வசதியுடன் மின்சார வசதியும் கொடுக்கக்கூடிய திட்டங்களை முதலில் எடுத்துக்கொள்வது நல்லது. ஏனென்றால் அப்படிப்பட்ட திட்டங்கள் அதிக லாபகரமானவை. எனவேதான் சில திட்டங்களை இப்போது எடுத்துக்கொள்ளாமல் இருக்கிறோம். அதற்காக நாங்கள் பாராமுகமாக இருப்பதாக யாரும் நினைக்கவேண்டாம் என்றும் ஆத்திரப்படவேண்டாமென்றும் கனம் அங்கத்தினர்களை பணிவோடு கேட்டுக்கொள்கிறேன்.

மதிப்புக்குரிய அங்கத்தினர் ஸ்ரீ. கே. அப்பாவு பிள்ளை அவருடைய தாலூகா சம்பந்தப்பட்ட திட்டங்களைப்பற்றிச் சொன்னார்கள். ஸ்ரீ. முனி ரெட்டி அவர்களாலும் அந்தத் திட்டங்கள் குறிப்பிடப்பட்டன. சின்னாறு திட்டம் சம்பந்தமான இடங்களை நானே நேரில் பார்த்தேன். அந்தத் திட்டம் பலனளிக்கக்கூடிய திட்டம். அதை நிறைவேற்றுவதற்கு கொஞ்சம் அதிகமாகப் பணம் செலவாகக்கூடும் என்றாலும் சேலம் ஜில்லா வறண்ட பிரதேசமாக இருப்பதால், அதை எடுத்துக்கொள்ளலாம் என்று நினைக்கிறோம். (கனம் அங்கத்தினர் ஸ்ரீ. அப்பாவு பிள்ளை எழுந்தார்).

DEPUTY SPEAKER : This is not question hour. The Hon. Minister will explain everything in his speech.

THE HON. SRI P. KAKKAN: ஸ்ரீ. அப்பாவு பிள்ளை என்ன சொல்ல விரும்புகிறார் என்பது எனக்குத் தெரியும். அந்தத் திட்டம் தர்மபுரி தாலூகாவிற்குத் தானே பயன்படும் என்று கேட்க விரும்புகிறார் என்று நினைக்கிறேன். ராஜ்யம் முழுவதையும் மனதிற்கொள்ளவேண்டுமே தவிர, ஜில்லாக் கண்ணோட்டத்துடனோ தாலூகாக் கண்ணோட்டத்துடனோ இந்தத் திட்டங்களைப் பார்க்கக்கூடாது. அந்தத் திட்டம் கனம் அங்கத்தினரின் பிரதேச எல்லைக்குள்தான் இருக்கும் என்று நினைக்கிறேன்.

சேனாபதித் திட்டத்தைப்பற்றியும், தொட்டஹள்ளித் திட்டத்தைப்பற்றியும் குறிப்பிடப்பட்டது. அவை ஏற்கனவே பரிசீலிக்கப்பட்டன. அவை அவ்வளவு லாபகரமானவைகளாகத் தெரியவில்லை. ஆகவே தான் அவைகளை இன்னும் எடுத்துக்கொள்ளவில்லை. என்னைப் பொறுத்தவரையிலும், அந்தத் திட்டங்கள் சம்பந்தப்பட்ட இடங்களுக்கு வந்து அவைகளை நேரில் பார்க்க வேண்டுமென்று சொன்னால் நான் வருவதற்குத் தயாராயிருக்கிறேன். அந்தத் திட்டங்களை நன்றாகப் பரிசீலித்தபிறகுதான் கைவிட்டிருக்கிறார்கள். அடுத்தபடியாக, அங்கே இருக்கும் ஒரு கண்மாயைப் பற்றி குறிப்பிட்டார்கள். அந்தக் கண்மாயைப் பார்ப்பதற்கு நான் சென்றிருந்த போது அங்குள்ள கிராம மக்கள் சொன்னதை நான் கேட்டேன். அது சம்பந்தமாக நிபுணர்களிடமிருந்து ரிப்போர்ட் கேட்டிருக்கிறோம். அது வந்தபிறகுதான் எதையும் சொல்லமுடியும்.

கனம் அங்கத்தினர் ஸ்ரீ. கருணாநிதி அவர்கள் நந்தன் கால்வாயைப் பற்றிச் சொன்னார்கள். அங்கே நந்தனார் பெருமையைப் பற்றி அவர் கூறினார். அவர் இங்கே ஒருவிதமாகப் பேசுவார், வெளியில் வேறொரு விதமாகப் பேசுவார். வெளியில் சென்று நந்தனாரை சிதம்பரத்தில் எரித்துவிட்டார்கள் என்று சொல்லுவார்.

குடவனாறு திட்டம்பற்றி குறிப்பிடப்பட்டது. அது பற்றி முடிவு செய்வது இலகுவான காரியம் அல்ல. அதை நிபுணர்கள் பரிசீலித்து அபிப்பிராயம் தெரிவித்த பிறகுதான் நான் பதில் சொல்ல முடியும். ஆகவே அது சம்பந்தமாக சர்க்கார் பிற்பாடு முடிவு தெரிவிக்கும் என்று சொல்லிக் கொள்கிறேன்.

1–30 p.m. கனம் அங்கத்தினர் ஸ்ரீமதி சௌந்திரம் ராமச்சந்திரன் அவர்கள் பேசும்போது, சிறு சிறு திட்டங்களை எடுத்துக்கொள்ளவேண்டுமென்று சொன்னார்கள். அதிலும் குறிப்பாக, வறண்ட பிரதேசங்களில் எடுத்துக் கொள்ளவெண்டுமென்று சொன்னார்கள். அந்த வகையிலேதான் வீடூர் திட்டம் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. உண்மையிலேயே காடாரம்ப பிராந்தியமாக, வறண்ட பிரதேசமாக, பின்தங்கிய பிரதேசமாக இருப்பவைகளுக்குப் பயன்படவேண்டும் என்பதற்காகத்தான் வீடூர் திட்டம் எடுத்துச் கொள்ளப்பட்டிருக்கிறது. அமராவதி திட்டமும் அதே மாதிரிதான். அந்தப் பிரதேசமும் மிகவும் வறண்ட பின்தங்கிய பிரதேசம்தான். அதன் காரணமாகத்தான் அமராவதித் திட்டம் எடுத்துக்கொள்ளப்பட்டதே தவிர, ஏற்கெனவே செழிப்பாக இருக்கும் பகுதியை இன்னும் செழிப்பாகச்

செய்ய வேண்டும் என்பதற்காக எடுத்துக்கொள்ளப்படவில்லை. இந்த வகையில் வறண்ட பிரதேசங்களைச் செழிப்பாக்கும் வகையிலே என்னென்ன செய்ய வேண்டும் என்பதிலே அரசாங்கம் கண்ணுங் கருத்து மாக இருக்கிறது.

கனம் அங்கத்தினர் ஸ்ரீமான் சிதம்பர பாரதி அவர்கள் வைகை அணைக் கட்டுத் திட்டத்தைப்பற்றி குறிப்பிட்டார்கள். இப்பொழுது வைகை அணைக் கட்டுத்திட்டம் கட்டுவது மதுரை, இராமநாதபுரம் ஜில்லாக்களின் நன்மைக் காகததான் என்று அவர்களுக்கு நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அந்தத் திட்டத்தின் மூலம் 20,000 எக்கராக்கள் பாசன வசதி அடையும் என்று மதிப்பிட்டு திட்டம் வகுத்தார்கள். இப்பொழுது தண்ணீர் வரும் டன்னலை கீழே ஆழப்படுத்தி, மின்சாரத்திற்கு தண்ணீர் எடுத்துவந்து கீழே விழும்படி செய்தால் பெரியாற்றுக்கால் மூலமாக 4,000 எக்கராக் களுக்கு மேல் பாசன வசதி கிடைக்கிறது. இராமநாதபுரம் ஜில்லாவுக்கு உபயோகப்படுகிறதா என்று பொதுவாகக் கேட்பதைவிட்டு, இந்தத் தாலுகாவுக்கு உபயோகப்படுமா, அந்தத் தாலூகாவுக்குப் பயன்படுமா என்று நாம் பார்க்கக்கூடாது. சிவகங்கை தாலூகாவில் 7,000 எக்கராக் களுக்குத் தண்ணீர் கொடுக்க ஏற்கெனவே முடிவு செய்திருக்கிறார்கள். சிவகங்கை தாலூகாவில்தான் கனம் அங்கத்தினருடைய தொகுதியும் இருக்கிறது என்று நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஆக, அங்கு 7,000 எக்கராக்களுக்குப் பயன்படுகிறது. மிகவும் கஷ்டப்படுகிற மக்கள், பின் தங்கிய மக்கள் வாழும் பகுதி, பிறமலைக்கள்ளர் என்னும் மக்கள் வாழும் பகுதியாகிய திருமங்கலம் தாலூகாவுக்காக இத்திட்டம் கொண்டு வரப்பட்டது என்று சொல்லலாம். அங்கே 10,000 எக்கராக் களுக்குத் தண்ணீர் பாய ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

ஆகவே, விவசாயத்திற்கு அதிக அக்கறை செலுத்தி விவசாய அபி விருத்திக்காக அதிக உதவி செய்யவேண்டுமென்ற நோக்கத்துடன்தான் இத்திட்டம் கொண்டுவரப்பட்டது. இந்த வகையில் திருமங்கலம் தாலூ காவில் 10,000 எக்கராக்களுக்கும், ஏற்கெனவே நஞ்சையாக இருந்தாலும் **hard case** ஆக இருக்கும் 3,000 எக்கராக்களுக்கும், சிவகங்கை தாலூகாவில் 7,000 எக்கராக்களுக்கும் பாசன வசதி செய்வதோடுகூட, மேலும் 4,000 எக்கராக்களுக்கு இப்பொழுது அதிகப்படியாக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. கனம் அங்கத்தினர் சொன்ன அந்தத் தாலூ காவும் இதில் அடங்கியிருக்கிறது என்று நான் நினைக்கிறேன். ஏதோ என்னுடைய தொகுதி—மந்திரியினுடைய தொகுதி—என்பதற்காக அதிக மாகச் செய்ததாக கனம் அங்கத்தினர்கள் நினைக்கக்கூடாது. ஏற்கெனவே என்ன உதவி செய்யப்பட்டதோ அதைத்தான் அரசாங்கம் செய்துகொண் டிருக்கிறது. சிதம்பர பாரதி அவர்கள் ஏதோ ஒரு சில பகுதிகளை அரசாங்கம் கைவிட்டுவிட்டதாக நினைக்கவேண்டாம். எப்பொழுது அதிகத் தண்ணீர் வைகையில் வரும் என்று தெரிகிறதோ, அந்தந்த சமயங்களில் எந்த எந்தக் கண்மாய்களை நிரப்ப முடியுமோ அப்படி நிரப்ப ஏற்பாடு செய் கிறார்கள். வரத்துக்கால்களைச் செப்பனிட்டால்தான் நமக்குப் பெருவாரியாக இருக்கும். ஏரிகள் பயன்படும் என்ற வகையில் அந்த வகையிலும் தக்க ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது என்று நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

கனம் அங்கத்தினர் திரு. லக்ஷ்மீபதிராஜ் அவர்களுடையதும் வரண்ட தாலூகாதான். ரொம்ப நாளாக பாலூர்-பெரம்பலாறு திட்டத்தைப்பற்றி 1945-ல் சட்டசபை மெம்பராக இருந்த காலத்திலிருந்தே நானும் பேசிக் கொண்டு வந்திருக்கிறேன். நிதி நிலை காரணமாக இத்திட்டம் இரண் டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்படாமல் இருக்கிறது. மின்சாரம் கிடைக்கும் திட்டம் இது. இருந்தாலும், அமராவதி திட்டத்தை எடுத்துக்கொண்டதால் அதை உடனடியாக எடுத்துக்கொள்ளவில்லை. அமராவதித் திட்டம் முடியும் தருவாயில் இருக்கிறது. மேற்படி பாலூர்-பெரம்பாலாறு திட்டம்பற்றி சம்மந்தபட்ட அதிகாரிகளும் நானும் நேரில்

சென்று பரிசீலனை செய்து பார்த்து, ஒரு முடிவுக்கு வருவோம் என்று நான் கனம் அங்கத்தினர் அவர்களுக்குச் சொல்லிக்கொள்ள ஆசைப் படுகிறேன்.

கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தச் சர்க்காரானது விவசாயி களுக்கு எவ்வளவு தூரம் உதவி செய்யவேண்டுமோ அவ்வளவு தூரம் உதவி செய்யவேண்டும் என்பதற்காகத்தான் மத்திய சர்க்காரிலிருந்து நாம் அதிகப்படியான பணம் பெற்றிருக்கிறோம். மதிப்பிற்குரிய நமது பிரதம மந்திரி பண்டித ஜவஹர்லால் நேரு அவர்களே, "சிறிய பாசன அபிவிருத்தியை நாம் எடுத்துக்கொள்ளவேண்டும், அதற்கு உதவி செய்யவேண்டும்" என்று பேசியிருக்கிறார். ஆகையால், எந்தெந்த சிறிய பாசனத் திட்டத்தை எடுத்துக்கொள்ளவேண்டுமோ அதைப் பரிசீலனை செய்வதோடு கனம் அங்கத்தினர்கள் சொன்ன நல்ல ஆலோசனைகளையும் பரிசீலனை செய்து, எந்தெந்தத் திட்டங்கள் எடுத்துக்கொள்ளுவது சாத் தியமோ அவைகளைப்பற்றி மத்திய சர்க்காரிடத்தில் எடுத்துச்சொல்லி, அங்கிருந்து எவ்வளவு உதவி பெற முடியுமோ அதைப்பெறுவதிலே இந்த அரசாங்கம் எப்பொழுதும் பின்வாங்காது என்று நான் இந்தச் சந்தர்ப் பத்தில் தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

பாலாறு திட்டத்தைப்பற்றி திரு. அண்ணாதுரை அவர்கள் சொன்னார்கள். இதுபற்றி மைசூர் ராஜ்யத்திற்கும் நம்முடைய ராஜ்யத் திற்கும் அக்ரிமெண்ட் இருக்கிறது. அதேமாதிரிதான் காவிரி திட்டத்தைப் பற்றியும் இவ்விரு ராஜ்யங்களுக்கும் இடையே அக்ரிமெண்ட் செய்திருக் கிறோம். ஒரு திட்டத்தை எடுத்துக்கொள்ள வேண்டுமானால் சம்பந்தப்பட்ட இரண்டு ராஜ்ய சர்க்கார்களும் கலந்து பேசவேண்டும். அப்படிக் கலந்து பேசியும் உடன்பாடு ஏற்படவில்லையானால், மத்திய சர்க்காரிடம் சொல்லியோ, ஸோனல் கவுன்ஸிலில் பேசியோதான் ஒரு திட்டத்தை எடுத்துக்கொள்ள முடியும். அதற்காக கனம் ரெவினியூ மந்திரி அவர்கள் டில்லிக்குச் சென்று, அதுபற்றி பேசிவிட்டு வந்திருக்கிறார்கள். சாத்தியப்படுமானால் எடுத்துக்கொள்ளவேண்டுமே தவிர, சாத்தியமில்லாவிட்டாலும் எடுத்துக் கொள்ள வேண்டுமென்றால் அது முடியாத காரியம். கனம் அங்கத்தினர் திரு. வி. கே. கோதண்டராமன் அங்கு வெற்றிபெற்று வந்துவிட்டார் என்ற காரணத்திற்காக அங்கு எடுத்துக்கொள்ளவில்லை என்ற முறையில் சொன்னால் அது சரியல்ல. அப்படி நினைக்கக்கூடிய ஸ்தாபனம் காங்கிரஸ் ஸ்தாபனம் அல்ல என்று அவர்களுக்கு நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன் நாட்டிற்கு சுதந்திரம் வாங்கித் தருவதற்காகப் போராடியபோது இந்தக் கட்சி அந்தக் கட்சி என்று யாரும் பேதம் பார்க்கவில்லை. அப்பொழுது ஜஸ்டிஸ் கட்சிக்காரர்கள் இருந்தார்கள். எல்லோருக்கும் சேர்ந்துதான் சுதந்திரமும் வோட்டுரிமையும் வாங்கிக்கொடுத்திருக்கிறது காங்கிரஸ் ஸ்தாபனம். ஆகவே, காங்கிரஸ் கட்சியினர் ஒரு இடத்தில் வெற்றிபெறவில்லை, வேறொரு கட்சியினர் வெற்றிபெற்றுவிட்டார், ஆகவே, அந்த இடத்திற்கு ஒன்றும் செய்யக்கூடாது என்ற மனப்பான்மை கொண்டது காங்கிரஸ் ஸ்தாபனம் அல்ல. அந்த எண்ணம் இந்த அரசாங்கத்திற்குக் கொஞ்சங்கூட இல்லை என்று நான் தெரிவித்துக்கொள்ளுகின்றேன். எல்லோருக்காகவும் பாடுபட்ட ஸ்தாபனம். விடுதலை வாங்கிக் கொடுத்த ஸ்தாபனம். அப்படியிருக்க ஏதோ நாங்கள் ஒரு குறிப்பிட்ட அங்கத்தினரிடத்திலுள்ள விருப்பு, வெறுப்பு காரணமாக ஏதும் செய்வதோ செய்யாமலிருப்பதோ கிடையாது. ஏனென்றால், நாங்கள் மக்களுக்காக, மக்களுடைய நன்மையைக் கருதிச் செய்கிறோம். குறிப்பிட்ட அங்கத்தினர்களுக்காகச் செய்யவில்லை. கனம் அங்கத்தினர் திரு. வி. கே. கோதண்டராமன் அவர்கள் தொகுதி என்பதற்காக அங்குள்ள மக்களுக்கு ஒன்றும் செய்யமாட்டோம் என்று சொல்லக்கூடிய கட்சியைச் சேர்ந்த அரசாங்கம் இது அல்ல என்பதையும் உங்கள் மத்தியில் தெரிவித்துக்கொள்ளுகிறேன். எதை எதைச் செய்ய வேண்டுமோ அதையெல்லாம் செய்துகொண்டு வருகிறோம்.

26th March 1958] [Sri P. Kakkan]

இன்றையதினம் இந்த விவாதத்தில் பல அங்கத்தினர்கள் கலந்து கொண்டு நல்ல முறையில் ஆலோசனை கூறியதற்காக அவர்களுக்கு நன்றியைத் தெரிவித்துக்கொண்டு இந்த மான்யக் கோரிக்கையை சபை ஏற்றுக்கொள்ளும்படி கேட்டுக்கொள்ளுகின்றேன். அத்துடன் கனம் அங்கத்தினர் ப. உ. சண்முகம் அவர்கள் குறிப்பிட்ட விஷயத்திற்கும் சேர்த்துத்தான் நான் பதில் சொல்லியிருக்கிறேன் என்று அவர்களுக்குத் தெரிவித்துக்கொண்டு வெட்டுப் பிரேரேணையை அவர் வாபஸ் வாங்கிக் கொள்ளவேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

SRI A. V. P. ASAITHAMBI: On a point of information. இதர அமைச்சர்கள் எல்லோரும் இங்கே இல்லாமலிருப்பதற்குக் காரணம் அமைச்சர்களுடைய அலுவலகங்களிலே ஒலிபெருக்கி அமைக்கப்பட்டிருப்பதாக கனம் அமைச்சர் அவர்கள் கூறும்போது, தெரிவித்தார்கள். இம்மாதிரி அவர்களுடைய வீடுகளிலும் ஒலிபெருக்கி அமைக்கப்பட்டிருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN: கனம் அங்கத்தினர்கள் சார்ந்திருக்கும் கட்சியினர் பதவிக்கு வந்தால் அவர்கள் வீடுகளிலும் ஒலிபெருக்கி வைத்துக் கொள்வார்களேயொழிய நாங்கள் அப்படி வைத்துக்கொள்ள மாட்டோம்.

DEPUTY SPEAKER: Mr. Nallasivam is not in his seat. His cut motion is, therefore, deemed to have been withdrawn. I shall put the Demand to vote. The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 1,56,37,500 under Demand VIII—Irrigation."

The Motion was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER: Is Mr. Shanmugam pressing his cut motion to Demand XXXV?

SRI P. U. SHANMUGAM: I am pressing.

DEPUTY SPEAKER: The question is—

"That the allotment of Rs. 3,49,72,500 under Demand XXXV—Capital Outlay on Irrigation be reduced by Rs. 100".

The cut motion was put and lost.

DEPUTY SPEAKER: I shall put the Demand to vote. The question is:

"That the Government be granted a sum not exceeding Rs. 3,49,72,500 under Demand XXXV—Capital Outlay on Irrigation".

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER: The House will now adjourn and meet again at 8-30 a.m. to-morrow. 1-38 p.m.

The House then adjourned.